73-2

# திருவாசகமும் சிவராஜ யோகமும்



விளக்க உரை ஆசிரியர்

சிவயோகி - மா.இரத்தினசபாபதி பிள்ளை






கலைஞன் பதிப்பகம்
19 கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை - 600 017

Rs. 100.00
THIRUVASAGAMUM SIVARAJA YOGAMUM

by
SIVAYOGI - M.RATHINASABAPATHY PILLAI

First Edition 1973
Second Edition 2001

Published by
KALAIGNAAN PATHIPAGAM
19 Kannadhasan Salai
T.Nagar, Chennai - 600017.

Typeset :
Oviyam, Chennai - 20

Printed at :
J.M. Process & Prints
Phone : 8572957

சிவமயம்

# உள்ளுறை

பக்கம்

உ

திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

ஆகமங்கள் பூர்வபக்ஷ சைவர்களுக்கென்றும், உத்திரபக்ஷ சைவர்களுக்கென்றும் இருவகையாக உள்ளன. பூர்வபக்ஷ நூல்களில் உயர்ஞானம் மறைந்துள்ளது. அதனால் அவைகள் சாமானியர் ஞானம் பெறுமாறு சுலபமான வழியில் ஈசுவரபத்தி உண்டாகத் தக்கதாய் ஆலய வழிபாடு, ஆலயத் தொண்டு, விரதங்கள், மந்திர ஜெபங்கள், உருவ வழிபாடு, கிரியைகள் ஆகியவற்றைச் சிறப்பித்துக் கூறி, அவ்வழிபாட்டினால் அடையும் பலன்களையும் விஸ்தாரமாகக் கூறும். அம்முறைகளைக் கடைப் பிடித்துப் பயன் அடைந்ததாகப் பல புராணங்களும் தோன்றியுள்ளன.

இந்நூல்கள் பக்தனின் சிரத்தையை உறுதிப்படுத்தவும் ஓரளவு ஞானத்தின் இயல்பை விளக்கவும் எழுத்து வடிவில் அமைந்த ஞானபோத நூல்களாகும். பண்டிதர்கள் இந்நூல்களைப் பயின்று மக்களுக்கு ஞானத்தைத் தர்க்கம், யுக்தி உபமானங்களால் எடுத்துக் கூறுவர். இதைப் பரோக்ஷ ஞானம் என்பர். அதாவது திருசியப்படாத கடவுளை அறிவில் பதியும்படிக் கூறும் உபாயமாகும். இக்குருமார்களை ஞானம் போதிக்கும் போதகுரு என்பர். இந்த ஞானம் தீவிரமான சீடர்களுக்கு ஏற்பதன்று.

ஏனெனில் தீவிரதர சீடன் விரும்புவது அபரோட்ச ஞானம் என்ற அனுபவ ஞானமேயாகும். கிரியை வழித்தான ஆகமங்களை நன்கு கற்ற சகலாகம பண்டிதருக்கும் உமாபதி சிவத்துக்கும் அனுபவ ஞானம் அவர்களின் ஆகம அறிவால் அமையவில்லை.

அவ்விருவரும் தங்கள் மரபு அல்லாத மரபில் வந்த குருமார்களை அணுகியே அநுபவ ஞானத்தைப் பெற்றனர் என்பது தமிழ் மண்டலம் அறிந்த விஷயமாகும். இப்போது சமய பரிபாலனம் செய்யும் குருமார்களும், சைவ ஆசாரியர்களும் எவ்வளவு தூரம் ஆற்றல் பெற்றிருப்பார்கள் என்பதை ஊகித்துக் கொள்ளவும்.

சைவ நூல்களும், சாக்த நூல்களும், பண்டைய வேதகால ரிஷிகள் அறிவும், சைவாகமங்கள் கூறும் உத்தரபாக ஞானத்தைக் கைவரப் பெற்றிருந்துள்ளன. உத்தரபாக ஞானம் சாமானியர் அறிவுக்கு மட்டுப்படுவதில்லை. உயர்ஞானம் அகண்டப் பிர்மம் அல்லது சிவத்தைக் கூறுவது. அத்தகைய பிரமம் அறிவுருவமாக எங்கும் நிறைந்துள்ளது என்றும், சீவர்கள் அவ்வுண்மையை அறியாது தங்களைத் தனி வியக்தி என்று கூறிக் கொண்டுள்ளனர் என்றும், தனி வியக்தியை விட்டுவிட்டால் சிவசமானம் என்றும் கூறும்.

சைவ பரிபாஷையில் இந்த வேட்கை மிக்கோனைத் தீவிரதர சத்தினிபாதம் பெற்றவன் என்பர். தீவிரதர சத்தினிபாத சீடருக்கு முன்னர்க் கூறிய போத குருவால் பயன் அடைவது ஒன்றும் இல்லை. இத்தகைய சீடனின் வேட்கையைப் பூர்த்தி செய்யும் குருவுக்கு அவபோதகன் என்று பெயர். அதாவது புத்தகத்தைக் கொண்டு அறிவை விளக்க முயலாது சீடனிடம் தூங்கிக் கிடக்கும் ஆத்ம சக்தியைச் சீடனறிவுக்குப் புலப்படும்படிச் செய்பவன் என்று பொருள். இதை அபரோக்ஷ அநுபூதி என்பர். அகண்டபிர்மத்தை அறிவுக் கண்ணுக்குப் புலப்படும்படிச் செய்பவன் என்று பொருள்.

அவபோதகன் என்ற சொல்லுக்குச் சூரியன், ஆசான் என்ற பொருள்களுமுண்டு. சீடனிடம் சாதனத்தால் விளங்கும் திவ்விய தேஜஜைச் சிவசூரியன் என்றும், சிவகுரு என்றும், ஆத்மஜோதி என்றும் பலவாறாகக் கூறுவர். அறிவுருவான ஆத்மனே அகண்ட பிர்மத்திற்கும் நிலை என்பதே இவ்வகையினர் கொள்கை. அதை

விளக்கும் முறையில் ஏகான்மவாதமும் சைவமும் மாறுபட்டாலும் உண்மை அறிந்தவர்க்குச் சமயவாதம் இல்லை. ஞானிகள் உலகில் உள்ள ஒரு சமயத்தையும் சார்ந்தவர்களில்லை என்பதை ஞான நூற்கள் வலியுறுத்தும். உண்மையைக் காணும் வரையில் வேற்றுமையாகக் கண்டாலும் உண்மை ஒரே பொருள்தான். அகண்ட ஞானம் எம் மதத்தினருக்கும் ஒப்ப முடிந்த ஒன்றேதான்.

இத்தகைய ஞானம் கைவரப் பெற்றோர் உணர்த்தும் அறிவுக்கு அவபோதரூபம் என்று பெயர். அதாவது சொற்களால் உணர்த்தாது சீடனிடம் ஒரு அனுபவ அறிவைப் பதித்தல் என்று பொருள். குரு தனது பார்வையாலும் பரிசத்தாலும் சீடனிடம் அடங்கிக் கிடந்த ஓர் அகண்டாகார சத்தியை எழுப்புவர். அதனால் சீவனின் தேகத்திலும் சிரசிலும் ஒருவகையான உணர்வு உதித்துவிடும். அது ஓர் இன்ப நிலையாகவும் விளங்கும். அதன் வழியே சாதனம் முதிர்ந்தால் அறிவில் தசநாதங்களுதிக்கும். இதை அறியும்போது நாத சம்மியம் என்பர். இதன் முடிவு நாதாந்தமாகும். சைவம் கூறும் உத்தரஞானம் இதுவாகும்.

திபேத்திய லாமாக்கள் இந்நாத சம்மியத்தைச் சுரோதாபத்தி என்பர். சுரோதாபத்தியால் நாதாந்தம் கைவரப் பெற்றவர் அணிமாதி சித்திகளுடன் கூடிய அவலோகீஸ்வரர் பதவியைப் பெற்றும் அழியாத நிலையைப் பெறுவர் என்பர். இது சைவ நூல்கள் கூறும் அணுசதாசிவர்கள் போன்ற பதமாகும். காஷ்மீர் சைவம் இதைப் பிரத்தியபிஞ்ஞை என்று கூறிற்று. அதன் பொருள் தனி வியக்தியின் அறிவை உயர்த்துவதில் அகண்ட அறிவுடன் ஒன்றுபடல் என்ற கருத்தேயாகும். சாக்த நூல்கள் இவ்வித்தையைச் சந்திர ஞானம் என்று பெயரிட்டன. சந்திரனே அஞ்ஞான தசையில் மனிதனின் வீரியமாகவும் தன்னை அறிந்த ஞானிக்குச் சிரசில் உள்ள சோம மண்டலமாகவும், அதீத நிலையில் சீவசாட்சியான ஆத்ம சோதியாகவும் உள்ளான். சீவசாட்சி நிலையைச் சைவ நூல் சிவ சாதாக்கியம் என்று சதாசிவ ரூபத்தில்

விளக்கிற்று. சித்தர் பரிபாஷையில் அகரகலை என்றனர். அகரம், சந்திரனை உணர்த்தும் குறியீடு. சித்சத்தி ஸ்பந்த ரூபமாக (ஒரு சிறு அசைவாக) மூளையில் தொழிற் படுகிறது. காரிய ரூபமானபோது குண்டலினியாக மூலாதாரத்திலிருந்து கொண்டு தொழிற்படுகிறது. ஞான தேகப் பிரக்ஞையை விட்டவனாக விளங்கும்போது குண்டலினியின் ஆற்றலும் சித்சத்தியின் ஆற்றலும் சமமாகப் பொருந்தியே சோம மண்டல ஒளியை உண்டாக்குகின்றது. ஒரு சத்தியே தொழில் வேறுபாட்டால் வேறு வேறு தன்மையைப் பெறுகின்றது என்பது ஞானிகளின் முடிவு. அதனால் உருவத்தால் விளக்கும் சத்திக்கும் உருவமற்ற அறிவுக்கும் சமவாய விளக்கத்தைச் சிவசத்தி என்று காட்டினர். சூரியனை விட்ட ஒளி எவ்விதம் இருக்க முடியாதோ அவ்விதமே அறிவைவிட்ட வேறு ஒரு சத்தி தனியாக இல்லை. அத்தகைய அகரம் எண்ணைக் குறிப்பிடும்போது எட்டு என்ற எண்ணைக் குறிக்கும். அதுபோலவே உகாரம் இரண்டு என்ற எண்ணைக் குறிக்கும். இவைகள் பஞ்சபூதமான ஐந்தும் ஒவ்வொரு வகை அறிவொளியுடன் கூடியவை. தேகத்தில் உள்ள சூரிய ஒளி, சந்திர ஒளி, ஆத்ம வொளிகளிலும் ஒவ்வொரு வகையான ஆற்றலும் அறிவும் பொருந்தியுள்ளது என்பதை அட்ட மூர்த்தம் என்று விளக்கினர். சமஷ்டி உருவம், வியஷ்டி உருவம் என்ற இரு சத்திகளையும் உகாரத்தில் அடக்கிக் காட்டினர்.

அதனால் நிராதார நிலையில் ஆகாய மண்டலத்தில் சர்வவியாபகமான சிவசத்தியைச் சமஷ்டியாக்கி ஆத்மாவை வியஷ்டி நிலையைவிட்டு மாற உபாயம் கூறினர். இவ்வித அகர உகர பாதங்களால் அமைவது ஓகாரம் என்ற பிரணவமாகும். பிரணவ ஞானமே உண்மையான ஞானம் என்று வேதங்கள் அறுதி யிட்டுப் பிரணவத்தை வேத சிரசு என்று கூறிற்று. இத்தகைய பிரணவ உபாசனையைத் தோத்திர முறையில் தமிழில் சிறப்புற விளக்குவது திருவாசகமும், சாத்திர முறையில் சிறப்புற விளக்குவது திருமந்திரமுமாகும்.

## ஞானமும் விஞ்ஞானமும்

இவ்விரு சொற்களின் பொருளை அறிதல் நலம் என்று விளக்குகின்றேன். இவை இரண்டும் வட மொழிச் சொற்கள்தான். பொது அறிவு சிறப்பறிவு என்று இவைகளைக் கொள்ளலாம். விநாயகர் என்றபோது வேறு ஒரு தலைவரைக் கொள்ளாதவர் என்று பொருள்படுவது போலவே, மனிதனின் சிறப்பான அறிவு விஞ்ஞானமய கோசத்தில் உள்ளது.

எவ்வுயிர்க்கும் ஆனந்தம் விஞ்ஞான மென்றே
இருகோசம் இறைசுத்த மாயையி னிசைப்பன்.

— சிவநெறிப்பிரகாசம்

விஞ்ஞானமயகோசம் பந்தப்படுத்தாது. அறிவு மயமானது. அதனால் அது பரவிந்து பர்நாதங்களைக் கொண்ட சுத்தமாயையின் காரியமாகும். பல பிறவிகளில் பெற்ற அநுபவ அறிவெல்லாம் இங்கு மரத்தின் விதைபோல மேல்வரும் சிருட்டிக்குக் காரணமாய் உள்ளது. இந்த அறிவு நாத விந்துக்களை அறிவதில் உள்ளது. பந்தப்படுத்துவது மனோமயகோசமும், பிராணமய கோசமும், அன்னமய கோசமுமாகும். அறிவுதயம் என்ற தலைப்பில் திருமூலர் இதனை விளக்கியுள்ளார்.

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே.

— திருமந்திரம், 2355

இதை ஓர் உதாரணத்தால் விளக்குகின்றேன். ஒரு கார் ஓட்டியின் ஞானம் வண்டியை ஓட்டுதல் மாத்திரமேயாகும். வண்டிக்கு ஏதேனும் யந்திரக் கோளாறு வரின் அதைச் செம்மைப்படுத்த முடியாது. காரை அங்கேயே விட்டுவிட்டுக் கார் மெக்கானிக்கை நாட வேண்டியவனாக உள்ளான். இது காரோட்டியின் பொது அறிவு ஆகும். கார்

மெக்கானிக்குக்கு அம் மாதிரி நிலை ஏற்பட்டால் காரைச் செம்மை செய்து மீளவும் ஓட்டிவிடுவான். இது அவ்வாற்றலின் சிறப்பறிவாகும். விஞ்ஞானமயகோச அறிவு தேகத்தின் காரண நிலையானபடியால் அவ்வறிவே சிறப்பறிவாயிற்று. அக்கோசமே மனிதனின் சொரூபமாகும் (ரூபம் புறக்கண்ணுக்குப் புலப்படுவது; சொரூபம் அகக்கண்ணுக்குப் புலப்படுவது).

உய்யவென் னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே.

— சிவபுராணம் - திருவாசகம்

சமய பரிபாஷையில் இவ்வொளியை அறிவதைப் பிரணவயோகம் என்றனர். அருணகிரியார் சும்மா இருத்தல் என்றார். சும்மா இருத்தல் என்றால் சீவசேட்டைகளையும் மனச்சேட்டைகளையும் விட்டிருத்தல் என்று பொருள்.

காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங் காடுகள் புக்குந் தடுமாறிக்
காய்கனி துய்த்துங் காயமொ றுத்துங் காசினி முற்றுந் திரியாதே
சீவ வொடுக்கம் பூத வொடுக்கம் தேற வுதிக்கும் பரஞான
தீப விளக்கங் காண எனக்குன் சீதள பத்மம் தருவாயே

என்றார்.

இவ்வுண்மையை அறியாத சிலர் தாங்கள் மௌனிகள் என்று எழுதிக் காட்டிக்கொண்டுள்ளனர். அருணந்தி சிவாச்சாரியார் இம்முறையை சிவஞான சித்தியாரில்

*எட்டாம் சூத்திரத்தில் அமைத்துப் பூர்வ பக்ஷ சைவர் சிவபூசையை ஒன்பதாம் சூத்திரத்தில் அமைத்துக் காட்டினர். உயிரின் சிறப்பறிவு ஞானாசாரியரால் விழிப்படையச் செய்தபோது சாதகனிடம் சிரசில் ஸ்பந்த ஞானம் (ஒருவகை உணர்வு) வெளிப்படும். இவ்வுணர்வு முன்பு தேக தர்மத்தில் மறைந்திருந்த ஓர் உணர்வுதான். அவ்வுணர்வே பெருகிப் பரநாதமாகவும் பரவிந்துவாகவும் பொருந்தும். சாதகனின் சிவ சிந்தனையில் எப்போதும் இது காணக் கூடியதேதான். தேகத்தில் திரு ஆத்மனே யாகும். அது விழிப்படைவதே ஞானயோகத்தின் முதல் நிலையாகும்.*

ஞானவாள் ஏந்தும், ஐயர் நாதப் பறையறைமின்
மானமா ஏறும்ஐயர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற்றுக் கவசம் அணியப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே.

— **திருப்படையெழுச்சி - திருவாசகம்**

*(இ-ள்) நித்தியம் அநித்தியம் என்றவைகளின் தன்மையை அறிந்து, அஞ்ஞானத்தால் வரும் தொடர்பான இருள் மண்டலமான மனோமய கோசத்தை விட்டு ஒளிமண்டல ஞானமான விஞ்ஞானத்தால் சத்தியப் பொருளான சிவகுருவைப் பற்றுங்கள். அதனால் உண்டாகும் நாத முழக்கத்தில் (பிரணவத் தொனியில்) மனத்தை நிறுத்துங்கள். பெருமையுள்ள அகர கலையில் (பரவிந்து கலையில்) ஆரோகணித்துச் சிரசின்மேல் பொருந்தும் மதி மண்டல ஒளியைப் பெருக்கி அதை நன்றாய் நினைவில் கொள்ளுங்கள் (மனத்தை அங்கேயே நிறுத்துங்கள்). ஆத்மாவின் விஞ்ஞான மண்டல ஒளியைத் தேகத்துக்குப் பாதுகாவலாக அணியுமாறு முயலுங்கள். இதில் கண்ட காரியங்கள் பொருந்தில் அஞ்ஞானமய இருள் மண்டலத்தைத் தாண்டி நாம் நிராதாரத்தில் (பரவெளியில்) இருள் பற்றாதவாறு நிற்போம்.*

*அவபோதத்திற்குப் பிரணவத்தொனியே கேட்டலாகும். அதைக் கீழிருந்து சுழுமுனை வழியாகச்*

சிரசுக்குக் கொண்டு செல்லுதலே சிந்தித்தல் ஆகும். சிரசின்மேல் நிராதாரத்தில் தியானம் நிலைபெறுதலே தெளிதலாகும். இதன் பயனே நிட்டை கூடுதலாகும். இதுவே ஞானியர் கண்ட நிட்டை முறையாகும். திருமந்திரத்தில் ''இந்திரியங்களை அடக்கும் முறைமை'' எட்டாந் தந்திரத்திலுள்ளதைக் கொண்டு தெளிக.

தத்துவ அநுபோகந் தான்சாதித்தல்
கேட்டல் என்பார்
ஒத்துள பொருள்ஊகத்தால் உசாவல்
சிந்தித்தல் என்பார்
சித்தம் ஏகாந்தமானபோது தெரிசனம்
தெளிதல் என்பார்
நித்தமிப்படி செய்தக்கால் நிருவாணம்
பெறுவாய் நீயே.

— கைவல்லிய நவநீதம்

எண்ணத்தால் பந்தம், எண்ணுவதைவிட்டு மேலான ஆத்மவொளியில் மனம் புதையுண்டு நிற்பதையே ஞானயோகம் என மணிவாசகர் அறிவித்தார்.

மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண் ணீறணிவித்துத் தூநெறியேசேரும்
வண்ணம்
அண்ணல்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

— அச்சோப்பதிகம் - திருவாசகம்

## அவபோத குருவின் உபகாரம்

உலகப்பற்று விட்ட தீவிரதர சத்திநிபாதர்க்கு உரியது சத்தியோ நிருவாணமாகும். சத்தியோ நிர்வாணம், உடனே வீடுபேற்றை அடையும் நெறியை உணர்த்தல் என்பர். உலகப்பற்று விடாதவர்க்குச் செய்யும் கிரியையின் வழித்தானது அசத்தியோ நிர்வாணமாகும்.

## சத்தியோ நிர்வாண விபரம்

சத்தியோ நிருவாணஞ் சஞ்சிதமாம் வினைகள்
தம்முடனே பிராரத்த வினைக டனுவாதி
யத்தனையு மொழித்தருளி யகண்டாகார தையா
யளவிறந்த வானந்த மாகிச் சுத்த
சித்துருவாய் நித்தமாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழுமொளியாய் மனத்தால் சிந்திக்க வொண்ணா
நித்தனுடன் வேறறவே நிறுத்த லென்றே
நிகழ்த்தியிடுஞ் சித்தாந்த முத்தியிந்த நிலையே.

— *சிவநெறிப் பிரகாசம்*

மந்திரங்கள் மருந்துகளோர் தொழில்க ளின்றி
வாய்த்திடவே கருடபாவனை மனத்தி னாலே
சிந்தவிட மானதுதான் றீர்க்கும் பார்வைச்
செயலெனவே சிவஞானத் தேசி கன்றான்
பந்தமறுத் தாணவத்தின் பாசம் நீங்கப்
பார்த்தருளிப் பரிசத்தால் மாயையறப் பார்த்தே
முந்துவினை கலைகள் சோதனையாற் போகம்
முளைக்கும் வினைஒழித்தற்கு மூலமநு மொழிவான்.

— *சிவநெறிப் பிரகாசம்*

*மூலமநு வென்பது சொல்லாமல் உணர்த்தும் பிரணவ தீட்சைக்குப் பெயர். இந்த தீக்கையைச் செய்ய வல்லபமுள்ள குருவே ஞான குருவாகும். இதல்லாது தீக்ஷை செய்வோன் போத குருவாவன்.*

ஏதமிலாச் சாம்பவமாந் தீக்கை செய்வோ
னெழில்ஞான குருவாகு மிவ்வா றில்லாப்
போதகன்றா னவுத்திரியால் வினைக ணீக்கிப்
போதிப்ப னாகமத்தின் பொருள்க டம்மை.

— *சிவநெறிப் பிரகாசம்*

*மணிவாசகர் பெற்ற தீக்ஷயும் இத்தகையதே.*

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்

சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா(து) அத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி.

*— போற்றித் திருவகவல் - திருவாசகம்*

ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின
இருவினை அறுத்தென்னை
ஓசை யாலுணர் வார்க்குஉணர் வரியவன்
உணர்வுதந் தொளியாக்கிப்
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன்
பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய
அற்புதம் அறியேனே.

*— அற்புதப்பத்து - திருவாசகம்*

*குறிப்பு: அற்புதம் என்ற சொல் வடமொழியில் அக்கினிதேவனுக்கு ஒரு பெயர். இங்கு ஞானமயமான ஆத்மவொளியை முன்னிட்டுக் கூறப்பட்டது.*

**பிரணவமே வேத சிரசு**

பூதமொடு பழகிவள ரிந்திரியமாம் பேய்கள்
புந்திமுத லான பேய்கள்
போராடு கோபாதி ராட்சசப் பேய்கள்
போதத்தை யூட ழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்ல லெல்லாம்
வீழும்படிக் குனதுமௌன மந்தி ராதிக்ய
வித்தையை வியந்தருள் வையோ

நாதவடிவாகிய மஹா மந்திர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞான வானந்த மயிலே

வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
மகிமைபெறு பெரிய பொருளே
வரைராஜனுக் கிருகண்மணி யாய்உதித் தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே.

— *தாயுமானவர் பாடல்*

*வேதகால ரிஷிகள் யாகத்தில் பலியிடப்படும் சீவனைக் கட்டுந்தறிக்கு ஆதித்தன் என்று ஒரு சங்கேதப் பெயரை வைத்தனர். இந்த ஆதித்தன் மரக்கம்பம் தவிர வேறல்ல. வைதிக கர்மாக்களில் பயன்படுத்தப்படும் சொற்களுக்கு உண்மையில் காண முடியாத ஒன்றைக் காணப்பட்ட ஒன்றின் மேலேற்றி விளக்கினர். அதுபோலவே ஆகமவாதிகளும் துவஜாரோகணத்தால் ஒரு பேருண்மையை விளக்கியுள்ளனர். நித்தியப் பூசையில் படுத்துள்ள நந்தியை நைமித்தியப் பூசையில் சிவன் ஆரோகணம் செய்யுமாறு சீலையில் எழுதி உயரக் காற்றில் லாகவமாய் அசையுமாறு காட்டினர். உற்சவ மூர்த்தியை வீதி உலாவுக்குக் கொண்டு வந்தனர்.*

*இதன் கருத்து, தேகமாகிய சிறையை விட்டுச் சீவன் நிராதாரமடைந்தால் தேகத்தைச் சூழ உள்ள விஞ்ஞானமய கோசம் சிறப்புறும் என்ற கருத்தின் விளக்கமேயாகும். நிராதார லக்ஷியமே சாதகனின் சிந்தை பொருந்துமிடம் என்று விளக்கினர். கொடி மரத்தினுச்சியில் மணிகட்டியிருப்பது, அங்கு நாத முழக்கம் உண்டு என்ற கருத்தேயாகும்.*

*வேதகால ரிஷிகளும் ஆகமவாதிகளும் கண்ட ஒரே உண்மை, மனத்தை சிதாகாய வெளியில் நிறுத்தல், பிராணஜயம் பெறுவதுடன் விஞ்ஞானமய கோசம் சிறப்புறும் என்பதேதான். இது அநுபவபூர்வமானது. ஓர் உபமானத்தால் இதை விளக்கலாம். நிழற்படக் காட்சி*

வெண் திரையில் பதிந்து நிழற்பட விளக்கத்தைக் காட்டுகிறது. நிழற்பட ஓட்டம் அகற்றப்பட்டால் எஞ்சியது வெண் திரையேதான். அதுபோல மனிதனின் அந்தக்கரணம் தொழிலற்றுவிடின் மனோமய கோசத்தைக் கடந்து விஞ்ஞானமய கோசத்தை அடையலாம் என்றதே ஞானியர் கண்ட முடிவாகும். இருள் கலந்த நிழலே திரைப்படக் காட்சியாகிறது. ஒளி இல்லாவிடில் அந்த நிழல் அமையாது. அதுபோல விஞ்ஞானமய கோசமே கீழ்முகங் கொண்டபோது (உருவ மயமானபோது) மனோமய கோசமாகவும் ஊர்த்துவ முகங்கொண்ட போது இயல்பான விஞ்ஞானமய கோசமாகவும் பொருந்துகிறது.

வட்ட மிட்டொளிர் பிராண வாயுவெனும்
நிகளமோடு கமனஞ் செயும்
மனமெனும் பெரிய மத்த யானையை என்
வசமடக் கிடின்மும் மண்டலத்

திட்ட முற்ற வளராச யோகமிவன்
யோகமென் றறிஞர் புகழவே
ஏழையே னுலகில் நீடுவாழ் வன்இனி
இங்கி தற்குமனு மானமோ

பட்ட வர்த்தனர் பரவு சக்ரதர
பாக்கிய மானசுப யோகமும்
பார காவிய கவித்துவ நான்மறை
பாரா யணஞ்செய் மதியூகமும்

அட்ட சித்தியும் நலன்பர்க் கருள
விருதுகட் டியபொன் அன்னமே
அண்ட கோடிபுகழ் காவை வாழும்அகி
லாண்ட நாயகியென் அம்மையே.

— *தாயுமானவர் பாடல்*

## பிரணவ தேகம்

சைவ சித்தாந்தம் வேதாந்தத்தில் இல்லாத சிவதத்துவத்தைச் சிறப்பித்துக் கூறும். சிவதத்துவம், சுத்தவித்தை, மாகேசுவரம், சாதாக்கியம், விந்து நாதங்கள்

என்ற ஐந்து பிரிவினையுடையது. சிவதத்துவத்தைப் பிரேரக காண்டம் என்பர். அதாவது சிவதத்துவத்தின் பிரேரகப்படி அதன் கீழான ஆத்மதத்துவம் 24ம் வித்தியாதத்துவம் 7ம் சேர்ந்து 31 தத்துவங்களும் தொழிற்படும் என்று பொருள். சாதாக்கிய தத்துவத்தில் மனிதனின் காரண தேகம் உள்ளது. மனிதனின் ஆசைகள் உருவமயமான உலகத்தைப் பற்றிக் கொள்ளுகிறது. மனிதனின் ஆசை அகண்ட வியாபகமான சிவசக்தியினிடம் பற்றுக் கொண்டால் சாதாக்கிய மண்டல அருவமான விந்து நாதங்கள் தொழிற்படத் தொடங்கும். அது சதாசிவ மூர்த்தியின் மேல் நோக்கிய ஈசானமுகமாகும். இவ்வீசான முகத்தின் ஆற்றலால்தான் சாதாக்கிய மண்டல வாசிகளான அணு சதாசிவர்கள் உலகை ரக்ஷித்து வருகின்றனர். ஈசானன் = ஈச்+ஆனனன் = ஆளுதலுக்குரிய ஊர்த்துவமுகமான விந்து நாதங்களை முகமாகக் கொண்டவன் என்று பொருள். விந்து நாதங்களே விஞ்ஞானமய கோச அறிவாகும். இவ்வகையில் சிரசுக்குமேல் விந்துநாத அறிவு சிறப்புறில் 36 தத்துவங்களின் பிரேரகமான நிலையைச் சீவன் அறிந்தவனாகின்றான். பிரேரகம் கீழ் முகங்கொண்ட பற்று இயல்பாக அற்றுவிடின் மேல்முகங்கொண்ட அகண்ட வியாபகமான சிவசக்தியின் ஆற்றல் பதியுமாறு தேகி தயார் செய்து கொள்ளுகிறான். இதுவே எவ்வுலகத்தையும் தன்னுள் கொண்ட ஆலயமாகும். எந்த சாத்திரமும் மாணிக்கவாசகர் கோயில் திருப்பதிகத்தைவிடத் தெளிவாகக் கூறவில்லை. கோயில் திருப்பதிகமும் அதன் விளக்கமும் எழுதில் அதுவே ஒரு புத்தகமாய்விடும். அன்பர்கள் வாசித்தறிந்து கொள்க.

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
  தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
  நீயலால் பிறிதுமற் றின்மை

சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்
  திருப்பெருந் துறையுறை சிவனே

ஒன்றுநீ யல்லை அன்றியொன் றில்லை
யாருன்னை அறியகிற் பாரே.

பார்ப்தம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதேல் அரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்

சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரயல் உள்ளார்
ஆனந்தம் ஆக்குமென் சோதி.

— *கோயில் திருவிருத்தம் - திருவாசகம்.*

*விஞ்ஞானமய கோச ஒளி அறிவணுக்களாகும். வினைக்கீடான தேகம் அன்னமய கோசமாகும். அன்னமய கோசம் உருவகாரணமான உருவச் சதாசிவரானானது. அருவம் வியாபகமாகாதபோது வினையின் பிடி அகலவில்லை. அருவம் வியாபகமானபோது வினையான இருள் மண்டல ஆற்றல் கெட்டுவிடும். பிரணவதேகம் பெற்றவர்க்குப் பந்திக்கக்கூடிய எவ்வினையுமில்லை என்பதை அறியவும். அதனால் அவர்கள் சிவசமானராகின்றார். அகண்ட சிவசத்தியின் ஆற்றலைப் பெற்றுச் சிருஷ்டியாதித் தொழிலில் அமைகின்றனர். இத்தகையோரே உலகை நடத்துபவராகவும், ஞானிக்குச் சிவகுருவாகவும் வந்து அருள் புரிபவராவர்.*

கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச்செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி.

— *திருஅண்டப்பகுதி - திருவாசகம்*

அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையு மிருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

*— திருவண்டப்பகுதி - திருவாசகம்*

திகழத் திகழும் அடியும் முடியும்
  காண்பான் கீழ்மேல் அயனும்மாலும்
அகழப் பறந்தும் காண மாட்டா
  வம்மா னிம்மா நிலமுழுதும்
நிகழப் பணிகொண் டென்னை யாட்கொண்
  டாவா வென்ற நீர்மையெல்லாம்
புகழப் பெறுவ தென்றுகொல் லோவென்
  பொல்லா மணியைப் புணர்ந்தே.

*— புணர்ச்சிப்பத்து - திருவாசகம்*

சாதாக்கிய மண்டல வாசிகளே உண்மையான அடியார்க் கூட்டம். *இவ்வுலகில் உள்ள காஷாயதாரிகள் அல்ல என்பதை அறியவும். இந்த சாதாக்கிய மண்டல வாசிகளைக் கோயில் மூத்த திருப்பதிகத்தில் மணிவாசகர் புகழ்ந்து தோத்திரம் செய்துள்ளார். தகுதியுள்ள சீடனுக்கு என்றும் உதவுமாறு குருசந்தான பரம்பரையை அங்கிருந்தே அநுக்கிரகம் செய்கிறார்கள்.*

*பழைமையான கடோபநிஷத், பகவத் கீதைக்கும் முந்தியதாகும். கடோபநிஷத்திலுள்ள சுமார் 20 சுலோகங்கள் கீதையில் எடுத்தாளப்பட்டுள்ளன. அதில் கூறப்படுவதும் இந்தப் பிரணவ யோகத்தைப் பற்றியதுதான். மரணத்திற்குப் பிறகு மனிதனடையும் நிலையை எமனைவிடச் சொல்லக் கூடியவராரு மில்லை. அந்த எமன், பிரணவ வித்தையை அறிந்தவர்கள், தன்*

ஊருக்கு வரமாட்டார்கள் என்று அறுதியிட்டுக் கூறுகின்றான்.

நரகொடு சொர்க்கம் நானிலம் புகாமற்
ப்ரகதி பாண்டியற் கருளினை போற்றி.

— திருவாசகம்

கடோபநிஷத்தில் பிரணவத்தைப் பற்றிய பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## கடோபநிஷத் - வல்லி - 2

ஏ! நசிகேதா! நீ ஆசைகளையும் பிரியமான உருவம் கொண்ட ஆசைப் பொருள்களையும், அவைகளின் உண்மை மதிப்பையும் அறிந்து ஒதுக்கி விட்டாய். தனம் காட்டும் இந்தப் பாதையை நீ ஏற்றுக் கொள்ளவில்லை. இதில்தான் அனேக மனிதர் அழுந்துகிறார்கள்.

— சுலோகம் 3

வித்தை, அவித்தை என்ற இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று மாறுபட்டு விலகியவை. இவை இரண்டும் தனித்தனி இடங்கள் அல்லது லக்ஷியங்களுக்கு அழைத்துச் செல்லும். நான் நசிகேதன் என்றாலே ஞானத்தை விரும்புகிறவன் என்று நினைக்கிறேன். ஏனென்றால் அநேக ஆசைகள்கூட உன்னை ஆட்ட முடியவில்லை.

— சுலோகம் 4

மூடர்கள் அவித்தையின் நடுவேயிருந்து கொண்டு தங்களைப் பண்டிதர்கள், நன்கு அறிந்தவர்கள் என்று நினைத்துக் கொண்டவர்களாக, குருடர்களால் அழைத்துச் செல்லப்படும் குருடர்கள் போல அனேக வளைந்த வழிகளில் மோகம் கொண்டு சுற்றிச் சுற்றி வருகிறார்கள்.

— சுலோகம் 5

இனிச் செல்ல வேண்டிய பாதை அறிவில்லாதவனுக்குத் தோன்றுவதில்லை. அவன் மூடனாயிருக்கிறான். தனத்தின் மோகத்தில் ஏமாந்திருக்கிறான். இதுதான் உலகம். இதற்கப்புறம் ஒன்றும் இல்லை என்று அவன் நினைக்கிறான்.

ஆகவே, அவன் மீண்டும் மீண்டும் எனது உலகிற்கே வந்தடைகிறான். — சுலோகம் 6

எவனை (ஆத்மனை) அநேகர் கேள்வியினால் கூட அடைய முடிகின்றதில்லையோ, எவனைக் கேட்ட பிறகும் அநேகர் அறிய முடிகின்றதில்லையோ அந்த மனிதன் ஆச்சரியமானவன். எவன் கண்டுவிட்டால் இந்த ஆத்மனைப் பற்றிச் சொல்லித் தரமுடியுமோ, திறமைசாலியான ஆசிரியனால் சொல்லித் தரப்பட்டு எவன் எந்த ஆத்மனை அறிந்து கொள்ளுகிறானோ அந்த மனிதனும் மிகவும் ஆச்சரியமானவனே. — சுலோகம் 7

குறைந்த அறிவுள்ள ஒரு மனிதனால் சொல்லிக் கொடுக்கப்படும்பொழுது அந்த ஆத்மனை அறிவது சுலபமில்லை. ஏனென்றால் அது பலவிதங்களில் எண்ணிப் பார்க்க வேண்டியதாக உள்ளது. ஆனால், பிரமத்துடன் இயைந்து (அதனின்றும் மாறுபடாத) ஓர் ஆசிரியரால் சொல்லித் தரப்பட்டால் அதைப் பற்றிய சந்தேகம் இல்லை. ஆத்மம் சூக்ஷ்மத்திலும் நுணுகியது. ஆகவே, அது தர்க்கத்தினால் பெற முடியாதது. — சுலோகம் 8

இவ்வகையான ஆத்மதர்சனம் தர்க்கத்தினால் அடையக் கூடியதல்ல. உத்தம அன்புக்குரியவனே! வேற்றுமை பார்க்காத ஓர் ஆசிரியரால் சொல்லித் தரப்படும்பொழுது அறிந்து கொள்ளுவது சுலபம். நீ அதை இப்பொழுது அறிந்து கொண்டாய். நீ இப்போது சத்தியப் பொருளான உனது ஆத்மனில் நிலைபெறுகிறாய். உன்னைப்போல் கேள்வி கேட்கிறவன் எனக்குக் கிடைக்கட்டும். — சுலோகம் 9

ஆத்ம தியானத்தின் மூலம் எந்தத் தீரபுருஷன் அந்தப் பழம்பொருளை, பார்க்கக் கஷ்டமானவனை, ஆழம் காண முடியாதவாறு இருதயக் குகையில் ஒளித்திருப்பவனை, பாதாளத்தில் வசிப்பவனை, புத்தியில் இருப்பவனை, துக்ககரமான சூழ்நிலையில் இருப்பவனை எவன் அறிகிறானோ அவன் இன்பத்தையும் துன்பத்தையும் துறக்கிறான். — சுலோகம் 12

இந்த ஆத்ம ஞானத்தைக் கேட்டு நன்கு பிடித்துக் கொண்டு மனிதன் தர்மமயமான ஆத்மனைத் தனித்து எடுத்து இந்த அணுவாகிய 'தன்னை' அடைந்து (அவன்) இன்பத்தில் திளைக்கிறான். ஏனென்றால் அவன் ஆனந்தத்தின் மூல ஊற்றை அடைந்து விட்டான். பிர்மலோகம் நசிகேதனுக்கு நன்கு திறந்திருக்கிறது என்றே எண்ணுகிறேன்.

— **சுலோகம் 13**

எந்த லக்ஷியத்தை, பதத்தை வேதங்கள் எல்லாம் பேசுகின்றனவோ, தவங்கள் எல்லாம் எடுத்துச் சொல்லுகின்றனவோ, எதை அடைய விரும்பி அவர்கள் பிர்மசரிய வாழ்வை நடத்துகின்றனரோ அந்தப் பதத்தை நான் உனக்குச் சுருக்கமாகக் கூறுவேன். அது ஓம்.

— **சுலோகம் 15**

இந்தச் சொல் (அக்ஷரம்) பிர்மமே. இது உண்மையில் உயர்ந்தது. இந்த அக்ஷரத்தை எவன் அறிகிறானோ உண்மையில் அவன் விரும்பினவைகளை எல்லாம் அடைகிறான்.

— **சுலோகம் 16**

இந்த ஆதாரம் மிகவும் பெருமை பொருந்தியது. இது மிகவும் சிறந்ததிலும் சிறந்த மூலாதாரம். இந்த ஆதாரத்தை அறிந்தவன் பிர்மலோகத்தில் இன்பம் அடைகிறான்.

— **சுலோகம் 17**

*சிவஞான சித்தியாரிலும் எட்டாம் சூத்திரம் மூன்றாம் அதிகரணம்,*

**துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்**
**துணைவனையும் அறியாது துயருறும்தொல் லுயிரை**
**மன்னும்அருட் குரவாகி வந்(து)அவரின் நீக்கி**
**மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்**

*என்றதில் நுட்பமாக விளக்கியுள்ளார்.*

**சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய**
**சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்**

ஆரியனா மாசான்வந் தருளாற் றோன்ற
அடிஞான மான்மாவிற் றோன்றுந் தோன்றத்
தூரியனாஞ் சிவன்றோன்றுந் தானுந் தோன்றும்
தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனாய்ப் பரியனுமாய் யுயிர்க்குயிரா யெங்கும்
நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்.

*இதில் பூசை, செபம், தியானம் முதலிய சாதனம் கூறப்படவில்லை. இத்தகுதி யில்லாதர்க்கே 9ஆம் சூத்திரநெறி உள்ளது.*

அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
அறிவுதனை யருளினா னறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்
பிறியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே.

இதன் பொருள்: *இச்செய்யுளில் பல நுண்ணிய கருத்தை அடக்கிக் காட்டிவிட்டார்.*

*அறியாமை அறிவு அகற்றி - மனிதனின் அறியாமையாவது நிலையற்றவைகளை நிலையுடைத்து என்று தவறான மதிப்பிடலேதான். அவ்விதமான அறிவு சுட்டி அறியும் பிரபஞ்சமும் அதன்பால் கவரப்படும் இந்திரியங்களும் அந்தக்கரணங்களுமே ஆகும். அந்தக்கரணங்களில் சென்று பற்றும் வன்மையையும் இந்திரியங்களில் சென்று பற்றும் வன்மையையும் உடையவை மனமும் கண்களுமாகும். இவைகளின் தன்மை தேஜஸைப் பற்றிய விஷயமாகும். குருவின் உபகாரம் நிராதாரத்தில் (ஆகாயத்தில்) மனத்தையும் பார்வையையும் செலுத்தி நில் என்று அறிவித்தபோது இவ்விருவகையான உறுப்புகளின் தன்மை கெட்டது.*

*அறிவின் உள்ளே அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து - அறிவு ஆகாயக் கூறாலாயது. ஆகாயமும் ஐந்து*

வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பூதாகாயம், குணமய ஆகாயம், குணரகித ஆகாயம், சூரியாகாயம், சித்தாகாயம் என்று கொண்டுள்ளனர். இவைகளில் மகாசூக்ஷ்மமானது சித்தாகாயம்தான். அதன் விருத்தியே ஏனைய நான்கு ஆகாயப் பிரிவுகளுமாய் உள்ளன. இவ்வகையான அறிவாகாயம் மனிதனின் மூளையை ஆசரித்துள்ளது.

சிவத்துடன் தொடர்பு கொண்டுள்ள ஒரு ஞானகுரு தனது சங்கற்பத்தால் சீவனிடம் அவனது மூளையில் பதித்து அவ்வணுக்களை விருத்தி செய்யும் உபாயமும் கற்பிப்பார். அவ்வுணர்வு பெருகப் பெருகத் தேகமே தானென்றும் சுட்டியறியும் பிரபஞ்சமே உண்மையென்றும் கொண்டிருந்த மயக்க உணர்வு கெட்டுச் சிரசில் விந்து நாதநிலை உதித்துவிடும்.

அறிவின் உள்ளே என்பது - அறிவு பொருந்திய ஆகாய மண்டலத்தில்,

அறிவுதனை அருளினாலறிந்து - சீடன் அறிய வேண்டிய அறிவைக் குருவின் ஆற்றலால் விளக்கம் செய்து (குருவின் சத்தி உபகாரத்தால்);

குறியாதே குறித்து - குரு காட்டிய நெறியில் நின்று இந்திரியங்களின் வசமாகாமலும் மனத்தின் வசமாகாமலும் ஊர்த்துவ திருஷ்டியில் நின்றால் பிரபஞ்சமும் அந்தக்கரணமும் பற்றுந்தன்மை விட்டு விடும்.

வகையான வாசியது **மனமும் கண்ணும்**
மயங்காதே சிவாயவென்று புலம்பி டாதே
பகையாதே அட்சரங்கள் ஐம்பத் தொன்றும்
பரிபாஷை யாயுரைத்த நாம பேதம்
திகையாதே நாமமென்று மட்சரங்க ளென்றும்
செபியாதே யறிவுகெட்ட மனித ரைப்போல்
நகையாதே மானிடர்கள் பலசாதி யென்று
நம்பாதே **நல்வினையின் காலைப் பாரே.**

திரிமூர்த்தி தேவர்முதல் மனித ரோடு
சிவயோகம் பெற்றிருந்த மார்க்கந் தன்னைப்

பிரியமுட னெனைத்தொழுது கேட்ட பிள்ளாய்
பிங்கலையும் இடகலையும் மாறும் போதம்
அறிவான சுழுமுனையில் மனத்தை வைத்தே
அசையாமல் ஒருமையாய்க் காக்கும் போது
குறியான சிவயோகம் சித்தி யாச்சு
கோடிஜன்மம் சித்தரைப்போல் வாழ லாமே.

— *அகஸ்தியர் வாதசௌமியம் - 1000*

*அந்தக்கரணங்களோடுங் கூடாதே வாடாதே - அந்தக்கரணங்களின் வழிச் சென்று துக்கமயமான தேகப்பற்றைப் பெருக்கிக் கொள்ளாதே. இந்திரியங் களினின்றும் அந்தக் கரணங்களைப் பிரிக்கும் உபாயமே குருகாட்டிய நெறியாகும். உருவத்தை எண்ணுவதை விட்டபோது மனத்தின் செயல் கெடும். சிதாகாய வெளியில் நிற்பவரிடம் இந்திரியச் சேட்டையிராது. மனம் எண்ணும் திறனை விட்டுவிடும். மனம் அழிந்தபோது புத்திக்கும் வேலையில்லை. மனத்தை அகங்காரம் தூண்டுதலை விட்டுவிடும். சித்தத் தடாகம் அசைதலை விட்டுவிடும்;*

*குழைந்திருப்பையாகில் - குழைவு - அன்புக் கனிவு. சிவத்தின்பால் காதல் கொண்டு தற்போதம் விட்டு அதன் எண்ணம் ஈடேறுமாறு அன்புகொண்டு நிற்க. குழைத்தபத்து - திருவாசகம் பார்க்க.*

*பிரியாத சிவன்றானே பிரிந்து தோன்றி - சிவம் எல்லாச் சீவர்களுடன் பொருந்தியிருந்தாலும் சீவ அறிவில் விளங்காதவாறு மறைந்துள்ளான். தற்போதம் விட்ட ஞானியர்களிடம் தன் மறைப்பை அகற்றிக் கொண்டு சிதாகாயப் பெருவெளியில் தேஜோ வடிவில் விளங்கிச் சாதாரண மக்களிடம் இறைவனது நிலை பாலில் உள்ள நெய்போல ஆகும். ஞானியர்களிடம் தயிரின் மேலாடை போன்று விளங்கித் தோன்றுவன் என்றபடி;*

*பிரபஞ்ச பேதமெல்லாம் தானாய்த் தோன்றி - உயிர் வருக்கங்களும் உயிரல்லாதவைகளும் ஆகாயத்தையே*

தாரகமாகக் கொண்டுள்ளன. ஆகாயக் கூறில் அவற்றிற்கு உரிய அறிவு பொருத்தப் பட்டுள்ளது. சிதாகாய மண்டலத்தில் தேகத்தைவிட்டு வாழத் தெரிந்தவர்க்குப் பரமாகாய மண்டலப் பரமாணுக்கள் எல்லாவற்றிலும் சுழன்று கொண்டிருப்பது விளங்கும்.

அவ்வாகாய அணுக்கள் அறிவு உருவானவை. எறும்பு சேதி சொல்லுவதுபோல் ஒன்றை ஒன்று உரசிச் செல்லும்போது அவ்வறிவைச் சீவ அறிவு அணுக்களில் பதிப்பித்துக்கொண்டே உள்ளன. அவ்வாகாய அணுக்கள் சதா சஞ்சாரம் செய்வதில் மனிதனிடம் இருந்த அறிவணுவே ஏனையவற்றிலும் உரசிச் செல்லுகிறது. அதனால் ஞானி எல்லாமே தானாய்க் காணுகிறான்;

நெறியாலே யிவையெல்லாம் அல்லவாகி, நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னாயே - இவ்வகையான அறிவணுக்கள் பூதமயமானபோது பூதக் கூற்றிலும், குணமயமானபோது குணமயத் திலும், குணரகிதமானபோது குணரகிதத்திலும், சூரிய ஆகாயமானபோது ஒளி மண்டலத்திலும், அறிவு தொழிற் படுகின்றது. மனிதன் முக்குணவயப்பட்டவனாதல் பற்றிப் பிறப்பிறப்புக்குள்ளாகிறான். முக்குணம் விட்ட நிலை என்பது துரியபூமியாகும். அது சாந்தி கலையின் சிறப்புறும் ஆகாயக் கூறாகும்.

சாந்தியதீத கலையின் இடம் சிரசுக்கு மேல் உள்ள சிதாகாயப் பெருவெளியே ஆகும். அதுவே பிரணவ யோகியின் தியான நிலையாகும். இது ஆதாரங்களை எல்லாம் கடந்த நிலைபற்றி நிராதாரத்தில் முன்னர்க் கூறிய நால்வகை ஆகாயத்தின் அறிவும் பொருந்திய காரண நிலையாகும். காரணத்தைக் கண்டவன் காரியத்தையும் அறிய வல்லவனாகிறான். இக்காரண நிலையே சித்தாகாயமாகும்.

பஞ்சு நூலாகிப் புடைவையாவதுபோல் சித்தாகாயத்தின் விரிந்த நிலை பூதாகாயம் வரையில் விளங்கும்போது சாதாரண உயிர் வருக்கமாக உள்ளன.

சித்தாகாயம் அகண்டமானபோது குணரகிதமாய்ச் சூரியாகாயம் விளங்கித் தேவசரீரம் அமைகிறது.

சாக்த சைவாகமங்கள் பூதமயமான தேகத்தில் உள்ள மனிதனை ஒளிமயமாகத் தேகங் கடந்து வாழக்கண்ட வித்தையே மனித நாகரிகத்தின் விஞ்ஞான அறிவாயிற்று. அதற்குப் பெயரே பிரணவ யோகம். இவ்வித்தையைக் கைவரப் பெற்றவர்களே உலகைப் பரிபாலனம் செய்யும் பஞ்சகர்த்தர்களாக உள்ளனர்.

மோனங்கை வந்தோர்க்கு முத்தியும் கைகூடும்
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியும் முன்னிற்கும்
மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைங் கருமமும் முன்னுமே.

— **திருமந்திரம் 1611**

இம்முறையில் என் சிற்றறிவுக் கெட்டிய வரையில் திருவாசகத்தின் நான்கு அகவல்களிலும் உள்ள சங்கேத விளக்கங்களுடன் உரை எழுதப்பட்டுள்ளது. அதனால் இவ்வுரைக்குத் திருவாசகமும் சிவராஜ யோகமும் என்ற பெயர் சூட்டியுள்ளேன்.

இந்த உரையை அறிவுடைய பெருமக்கள் அறிந்துய்யும் வண்ணம் ஞான தானம் செய்ய, சிதம்பரம் அன்பர் உயர்திரு கு.பழனிவேலு முன்வந்து இக்கருத்துகள் நூல் வடிவில் அச்சாக முழுப் பொறுப்பையும் ஏற்றுப் பொருளுதவி செய்தமைக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிப்பதுடன், அன்னார் சிவப்பேறு பெறுமாறு இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

நான் இலக்கணம் பயிலாதவன். சொற்களின் இணைப்புப் பிழையை எண்ணிப் பாராமல் கருத்துகளின் வழியே சென்று வாசிப்போர் உலக பந்தத்தைவிட்டுச் சிவத்தை நினைந்து ஜீவிதத்தை உற்சாகத்துடன் தெய்வ நினைவுடன் நின்று துன்பமயமான உலகைச் சீவர்களைத்

திருத்தும் நண்பனாகக் கண்டு ஆத்ம சிந்தனையில் ஈடுபட்டு வாழ்க்கையை நடத்துமாறு எனது தாழ்ந்த யோசனையைக் கூறுகிறேன்.

பல வேலைகளுக்கிடையில் இந்நூலை அச்சேறுமாறு திருத்தம் செய்து, புரூப் பார்த்துப் பேருதவி செய்த உயர்திரு புலவர் ந.ரா. முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டு உதவிய பெருமை இராயப்பேட்டை, முருகன் அச்சக உரிமையாளரும், சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜச் செயலாளரும், சைவ நூல்களை விருப்பத்துடன் அச்சிடுபவரும் ஆகிய உயர்திரு. மு.நாராயணசாமி முதலியார் அவர்களைச் சாரும். அவர்கள் தொண்டு மேலும் சிறப்புற இறைவன் அருள் புரிவானாக.

இந்நூலுக்கு எனது சிறுமையைப் பாராட்டாமல் மதிப்புரை வழங்கிய உயர்திரு கிருபானந்தவாரியார் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மற்றும் மதிப்புரை வழங்கிய சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கனம் எஸ். மகராஜன் பி.ஏ., பி.எல். அவர்களுக்கும், ''திருக்கோயில்'' ஆசிரியர் உயர்திரு ந.ரா. முருகவேள் எம்.ஏ. எம்.ஓ.எல். அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்

சிவயோகி **மா. இரத்தினசபாபதிப் பிள்ளை**

சிவமயம்

காஞ்சிபுரம், மெய்கண்டார் மரபு,

தொண்டை மண்டலாதீன குருமஹா சந்நிதானம்,

**சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிகபரமாசாரிய ஸ்வாமிகள்**

# ஆசியுரை

திருவாரூர், சிவயோகி மா. ரத்நசபாபதிப் பிள்ளை அவர்கள் 'திருவாசகமும் சிவராஜயோகமும்' என்னும் புதுநூலை நோக்கி அவர்களது கொள்கையை நன்கு காண்டல் வேண்டும் என்றார்கள். நம் கருத்தையும் எழுதச் சொன்னார்கள். பலயாண்டின் முன் திருவாரூரிலே கண்டதும் அன்றி, இங்கும் மும்முறை அவர்களோடு நெடுநேரம் பேசி, அவரது யோகாநுபவத்தை ஓரளவு அறியலாயிற்று. சைவத்திருவாளர், திருக்குறள் வேள், திருவாசகம் திருமந்திரம் உரையாசிரியர், குரு. வரதராசப் பிள்ளை பி.ஏ. அவர்கள் சிவயோகியைக் காணக் காரணரானார்கள்.

முதல் நாளில், உங்கள் யோகவித்தையைத் தெரிவிக்கலாம் எனின் இப்போது செய்யலாமே என்றோம். உடனே கால்மணி நேரத்திலேயே குண்டலிநி சத்தியை மூலாதாரத்தினின்று எழுப்பி, எம்புருவ நடுவில் இருத்தினார்கள். அதற்கு அவர்கள் செய்த சடங்கு சிறிதே. அதை மீண்டும் கண்ட வேளையிலும் செய்தார்கள். அதனால் அவர்கட்கு அத்திறம் மிக்க

எளிமையுடையதாயிருப்பது தெரிந்தது. தெரியவே இப்புது நூலிலும் அத்திறம் எவ்வாறு விளக்கப் பட்டுள்ளது? அவ்விளக்கத் திற்குப் பிரமாணம் எவை? அவை எந்நூலின்? என்றெல்லாம் வினா எழுந்தன. எனவே நூலினை நோக்கினோம். பல நூலினின்றும், பலபல பாடல் மேற்கொண்டு காட்டப்பட்டமை வெளிப்பட்டது. படவே நம் கருத்தைச் சுருக்கி எழுதலானோம்.

சிவயோகி பிள்ளை, பரம்பரைச் சைவ மரபில் வந்த பெரும்பாக்கிய முடையவர்கள். அதனால் சைவத்தில் அழுத்தம் உள்ளவர்கள். ஓரிடத்தில் இருந்து கொண்டே 'சிவம் பெருக்கும் பிள்ளையார்' ஆயினார்கள். எப்படியோ குண்டலிநி சத்தியை எழூஉம் ஆற்றலைப் பெற்றுத் 'தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு காமுறுவர்' என்ற வாய்மொழிப்படி பலர்க்கும் எளியதாய்க் கற்றுக் கொடுக்கின்றார்கள். பலர் சீடராய் இருக்கின்றனர் என்றும் கேட்டோம்.

சிவயோகம் என்பதைச் சாத்திரத்திலுள்ள வாறும், எம் அநுபவத்திற் கண்டவாறும் அரதனச் சுருக்கமாக அறியலாம்.

சிவம் என்பது என்றும், எங்கும், எப்பொரு ளிலும் நிறைந்திருக்கும் இயல்புள்ளது. 'உள்ளது' என்பது சிவத்திற்குத் தமிழன் ஆளும் பெயர். உள்ளதுணர்தல் சிவஞானம். உள்ளதுணரின் பிறப்பறும். ஓர்த்துணர்தலே உபாயம்.

ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

இது பொய்யாமொழி. இதில் பதியை 'உள்ளது' என்றும், பசுவை 'உள்ளம்' என்றும், பாசத்தைப் 'பிறப்பு' என்றும் குறித்தருளினார் தெய்வப்புலவர். சைவப்புலவர் எல்லார்க்கும் இது தெரியும். சைவப் புலவர் தெரியார். உள்ளம் ஓர்த்துணர்தலாவது பாசஞானத்தாலும், பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பொருளை (உள்ளதை) பதிஞானத்தாலே (உள்ளதன் உணர்வாலே) நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத நீழற்கீழ் நீங்காதே நிலைபெறல்.

இத்திறத்தைக் கூறாதவை யெல்லாம் நூலல்ல. உளறலேயாகும். இதனை யுணர்த்தும் நெறியும், நூலுமே முறையே நன்நெறியும் நன்னூலுமாகும். திருமூலர் அருளிய,

ஞானத்தின் நன்நெறி நாதாந்த நன்நெறி
ஞானத்தின் நன்நெறி நானென் றறிவோர்தல்
ஞானத்தின் நல்யோகம் நன்னிலையே நிற்றல்
ஞானத்தின் நன்மோனம் நாதாந்த மோனமே.

— *(இந்நூற் பக்கம்: 300)*

ஞானநெறியும், அந்நெறியுணர்ந்து, அதில் நிலை பெறும் ஞானநிட்டையும், அந்நிட்டை மேவி நீங்காது நிற்கும் நிலையும், அதன் முடிந்த பயனாகிய மோனமும் இத்திரு மந்திரம் உணர்த்தும்.

'மோனமென்பது ஞானவரம்பு' என்றதன் பொருளும் இங்குப் புலப்படும்.

ஞானம் சிவத்தை விளக்குவது. அது பரஞானம், பதிபசுபாசங்களைப் பகுத்துணரச் செய்வது அபர ஞானம்.

இவ்விருவேறு ஞானத்தையும் அருணந்திதேவ நாயனார் 'பதிபசுபாசம் தெரித்துப் பரசிவனைக் காட்டும் ஞானம்' என்று சன்மார்க்கத்தை யுணர்த்தும் திருவிருத்தத்துட் கூறினார். அக்கூறாதல் பதிபசு பாசத்தைத் தெரிக்கும் அபரஞானம், பரசிவனைக் காட்டும் பரஞானம் என்னும் இரண்டுமாம்.

உமாபதிசிவமும், 'பலகலையாகம வேதம் யாவையினுங் கருத்துப் பதிபசுபாசம் தெரித்தல்' என்று அபர ஞானத்தையும், 'மாறாமலமகல அகலாது மன்னுபோதத் திருவருள்' என்று பரஞானத்தையும் விளக்கியருளினார். 'கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலும்' என்றும் அதனை (அப்பரஞான மாகிய திருவருளை)த் தெளிய வோதும் சிவாகமம் (அபரஞானம்) என்றும் அவரே அருளினார். இவ்வுணர்வைப் பயக்கும் மூலாகம வசநம்.

ஆதாவபூத்திவிதா ஞானம் அதிகார விபேதகம்
பரபரவிபா கேந பரிபாகர்த்த தர்சகம்
சிவப்பிரகாசகம் ஞானம் சிவஜ்ஞான்ம் பிரம்ஸ்ம்ருதம்
வேதாத்ய பரவிஞ்ஞானம் பசுபாசார்த்த தர்சகம்.

*இது காமிகாகமப் பிரமாணம். இதில் பரம் அபரம் என்ற சிவஞானம் இரண்டும், அவற்றால் உணர்தற் குரிய பொருளும் உணர்த்தப்பெற்றன. சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் (உவமையிலாக் கலைஞானம்) அபரஞானம். பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் (உணர்வரிய மெய்ஞ்ஞானம்) பரஞானம் எனப் பெரிய புராணமும், "மேவரும் ஞானம் இரண்டு. அவற்று(ள்) ஒன்று விமலனார் பாத தாமரையே ஓவரும் அன்பின் உணர்திரு அளிக்கும் ஒப்பிலா உயர்கலை ஞானம் (அபரஞானம்). ஒன்று தாவரும் பவத்தை வேரொடுங் களையும் தக்க மெய்ஞ்ஞானம் (பரஞானம்). இவற்றால் சாவதும், பிறப்பதும் தணிப்புறச் சிவத்தைச் சார்ந்து அதுவாய் நிற்றல் யோகம்" எனத் தணிகைப் புராணமும் நன்கு விளக்குதல் அறிக. கச்சியப்ப முனிவர், 'சிவ யோகம் என்றால் என்ன?' இவ்வினாவிற்கு விடையாக 'அப்பரஞானத்தால் சிவத்தைச் சார்ந்து சிவமாயே நிற்றல் சிவயோகம்' என்றதும் உணர்க. 'ஞானத்தால் அன்றி வீடில்லை' என்னும் உண்மையும் ஈண்டு விளங்கும்.*

*திருமூலர் அருளிய நாதாந்த நன்நெறியையும், அந்நெறியை ஓர்தலும், அது நான் என்று உணர்தலும், அதனொடு கூடுதலும், கூடிய நிலையில் நிற்றலும், அதன் முடிவாய நாதாந்த மோனமும் அத்திருமந்திரப் பொருளை அநுபவத்தில் அமையப் பெறுவதே இந்நூலை ஓதியுணரும் பயனாகும். இப்பயனை இதில் உள்ள அரும்பெரும் பனுவற் பாடல்களே எளிதின் நல்கும். அது குறித்து, இச்சிவயோகி அவர்கள் நல்க உணர்ந்தார் யோக மார்க்கம் எளிதின் விளங்கப் பெறலாம்.*

*சரியை, கிரியை, யோகம் மூன்றும் ஞான சாதனம். ஞானம் சாத்தியம். யோகமார்க்கத்துள் அடங்கிய பற்பலவற்றுள் ஒன்றாய்ப் பெரிதும் பெறுதற் கரியதாயிருப்பது குண்டலிநி சத்தி எழுச்சியாகும்.*

அவ்வருஞ் செயலைச் செய்பவர் செயற்கரிய செய்யும் பெரியர். அப்பெரியருள் ஒருவர் இச்சிவ யோகியாவார். ஒருவர் எனவே நாம் அறிந்தவருட் பிறர் எவரும் இலர் என்றாயிற்று. ஆகவே, இவரிடமே அதைத் தெரிந்துகொள்ளும் வேட்கையர் அணுகி அறிந்து அப்பயனை அடைதல் நன்று.

திருவாசகத்துச் சிவபுராணம் முதலிய நான்கற்கும் இவர்கள் எழுதிய உரையில் எத்தனையோ அரும்பொருள்கள் கிடைக்கின்றன.

299-300 கழுக்குன்று, கழுவென்னேவல் குன்று, பிரணவம்.

294 ஈங்கோய்மலை என்றால் சகல தத்துவங்களினின்றும் விடுபட்ட ஆன்மா என்று பொருள். துவாத சாந்த வெளியில் தரிசிக்கக் கூடியது ஈங்கோய்மலை எழில் உபசாந்த நிலையான ஊர்த்துவ சகச்சிர தளத்தில் தனது உயர்ந்த நிலை. ஈங்கு - இவ்வுடலில் - எழில் - எழுச்சி, உயர்ச்சி, எழுதல்.

335 காளியைக் குறித்த விளக்கம்.

370 ஆஸ்திக நாஸ்திக விளக்கம்.

342, 422 சொற்பொருள்.

இவற்றை எந்நூலினும் இவ்வளவு விளக்கமாகக் காண்டல் இயலாது. இதன் ஆசிரியர் நீடூவாழ்க. இந்நூல் செந்நூல் என விளங்குக.

சைவத் திருவாளர் - றொடேரியன் குமார. பழநிவேலனார் அவர்கள் மெய்யன்பையும் அவர் செய்து வரும் சைவ நற்றொண்டுகளையும் பலர் அறிந்திருப்பர். இவ்வெளியீடும் அவர்களது பொருட் கொடைப் பயனாகும். ஆகவே, அவர்களை நீடூழி இனிது வாழ்க, மனைமக்களொடு சிறந்து வாழ்க என்று வாழ்த்துங் கடன்மை எல்லார்க்கும் உரியது.

# வாழ்த்துரை

கனம் ஜஸ்டிஸ் **எஸ். மகராஜன்** பி.ஏ., பி.எல்.

"திருவாசகமும் சிவராஜயோகமும்" என்ற இந்நூலைப் பேரார்வத்தோடு வரிவிடாமல் படித்து முடித்தேன். முடித்த பிறகு, என் உள்ளத்தில் எஞ்சி நிற்பது பெருமிதம் கலந்த ஒரு நிறைவும் நன்றியுணர்வுமே.

சிவபுராணத்துக்கும் கீர்த்தித் திருவகவலுக்கும், திருண்வண்டப் பகுதிக்கும், போற்றித் திருவகவலுக்கும் இதுவரையிலும் கிடைக்காத ஞான விளக்கம் இந்நூலாசிரியர் மூலம் கிடைத்திருக்கிறது.

நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக!

என்று காரைக்காலம்மையார் உணர்வற்ற ஏட்டுச் சுரைக்காய்களைச் சபித்தார். மணிவாசகரும் 'நூலறிவு உணரா நுண்ணியோன் காண்க' என்று இறைவனுக்கு இலக்கணம் கூறிவிட்டார். ஆனால், தமிழ்நாட்டு மேடைகளில் சமயத்தின் பேராலும் வேதாந்த, சித்தாந்த சாஸ்திரங்கள் என்ற பேராலும் நடக்கும் பேச்சுக்கள் பெரும்பாலும் சண்டமாருதம் சுழித்தடிப்பதுபோல, ஆரவாரமும் சௌடால்தனமும் நிறைந்தவையாகவே இருக்கின்றன. உரையாசிரியர்கள் போக்கும் மேற்படி, மேற்படிதான். அனுபவ ஞானமுடைய பெரியோர்களோ, பேருண்மைகளுக்கு மூடாக்குப் போட்டு, அவர்களிடம் தீக்ஷை பெற்ற ஒரு சிலருக்கே அவற்றை விளக்கியும் வருகிறார்கள். ஆனால், ஸ்வானுபவம் நிறைந்த இந்நூலாசிரியர் ஒளிவு, மறைவில்லாமலும் வஞ்சகமில்லாமலும் கண்ணேயனைய பரம ரகசியங்களையெல்லாம் எடுத்து விளக்கி இந்நூலின் மூலம்

உலகத்துக்கே பறை சாற்றிவிட்டார். இதற்குக் காரணமாக இருப்பது அவருடைய பெருங் கருணையேதான்.

இவ்வாறு மறைபொருளை விளக்கம் செய்வ தால் ஏற்படும் கேட்டையும் ஆசிரியர் உணராதார் அல்ல. சரியை, கிரியை, யோகம் என்ற முதல் மூன்று படிகளில் உள்ளவர்களுக்கு ஞானத்தைப் புகட்டினால், அவர்களுடைய மனத்திலுள்ள அரைகுறை பக்தியும் கெட்டுப் போகுமே என்று ஆசிரியரே தன் அச்சத்தைத் தெரிவித்திருக்கிறார். ஆனால், அந்த அச்சத்தையும் பொருட்படுத்தாமல், மனந்திறந்து ஞானத்தைத் துணிச்சலோடு விளக்கிய ஆசிரியருக்குப் பக்குவர்கள் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஞான வேட்கையோடு உலகமெல்லாம் இந்தியாவை நாடி வரும் இத்தருணத்தில், மறைத்து வைக்கப்பட்டிருக்கும் உண்மைகளை விஞ்ஞான முறையில் தெளிவுபடுத்த வேண்டிய கடமையை இறைவன் இந்திய ஞானிகளுடைய தலையில் சுமத்தியிருக்கிறான். இக்கடமையை ஆசிரியர் அசாதாரணமான தெளி வோடும் திறமையோடும் நிறைவேற்றியிருக்கிறார்.

திருவாசகக் குறியீடுகளை விளக்குவதற்கு ஆசிரியர் மேற்கொண்டிருக்கும் உத்தி மிகமிகப் போற்றத்தக்கது; திருமூலர் போன்ற மாபெரும் ஞானிகள் பலரைச் சாட்சியாக அழைத்து வந்து மணிவாசகத்துக்கு மத்தாப்பூப் போடும்படி செய்கிறார். சிவஞான போதகம், தத்துவப் பிரகாசம் போன்ற நூல்கள் ஆசிரியருயை புதுமையும் உண்மையும் பொதிந்த விளக்கத்தை ஆமோதித்துக் கொண்டு நிற்கின்றன.

குடத்தில் வைத்த விளக்காக இருந்து வந்தது ஒளிநெறி. அதைக் குன்றிலிட்டு ஒளிரும்படி செய்த பெருமை இவ்வாசிரியருக்கு உரியது. ‘உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரத்தை'' இந்நூலின் உதவியால் உணர்வுடையோர் கண்டு பயன் பெறுவார்களாக.

ஜஸ்டிஸ் **எஸ். மகராஜன்**

உயர்திரு **சி. இராமலிங்கம்** எம்.ஏ.,
தத்துவ ஆராய்ச்சித் துறை,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

திருவாரூர் சிவயோகி, மா. இரத்தினசபாபதிப் பிள்ளை அவர்கள் திருவாசகம் - முதல் நான்கு அகவல்கட்கு எழுதிய புதிய உரையை ஊன்றிப் படித்தேன். இதுகாறும் வெளிவந்துள்ள உரைகளில் காணாத அரும்பெரும் கருத்துக்களை இவ்வுரை உணர்த்துகின்றது. ஆசிரியர் காணும் உரைகட்கு அரண் செய்யும் பிற மேற்கோட் பகுதிகளை எடுத்துக்காட்டியுள்ளது அறிஞர்கட்குப் பெரு விருந்தாகும். பிற நூல்களினின்று மேற்கோள்கள் எடுத்துக்காட்டுவதுடன், திருவாசகத்தின் பிற பகுதிகளினின்றும் எடுத்துக் காட்டியுள்ளது, திருவாசகம் - நூல் முழுவதும் ஒரே குறிக்கோளுடன் இயங்கியுள்ளதை வலியுறுத்துகிறது.

தோத்திரத்தில் சிறந்ததாகிய திருவாசகத்திற்குச் சாத்திரத்தில் சிறந்ததாகிய திருமந்திரத்தினின்றும் பல பாக்கள் மேற்கோள்களாக ஆசிரியர் தந்துள்ளமை, பெரிதும் பாராட்டற்குரியது. திருவாசகம், திருமந்திரம் என்னும் இவ்விரண்டு நூலும் மூலன் மரபைப் பின்பற்றியன என்று ஆசிரியர் கூறியுள்ளது கருத்தில் கொள்ளத்தக்கது.

திருப்பெருந்துறை பற்றி நுட்பமான கருத்துக்களை ஆசிரியர் விளக்கியுள்ளார். இதேபோல் திருவாரூர், சிதம்பரம் போன்ற தலங்கட்கும் உட்பொருளை விளக்கியுள்ளார். திருவாசகம் முழுமையும் திருவடிப்

புகழ்ச்சியே என்பதை நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். 'சொல்', 'தலை', 'திருவடி' போன்ற சொற்களின் உண்மைப் பொருளும் நன்கு விளக்கப் பெற்றுள்ளது.

திருவண்டப் பகுதியில், 'அவயவஞ் சுவைதரு கோற்றேன்' என்பது போன்ற பகுதிகட்கு ஆசிரியர் விளக்கம் பெரிதும் வரவேற்கத்தக்கதாகும். 'செத்தேன்' என்றால் உடலைக் கடந்து அறிவுடன் பிரிந்துவிட்டேன் என்று பொருள் கொள்கிறார். "பௌதிக சந்திரனுக்கும், கடலுக்கும் சம்பந்தம் உள்ளதுபோல் ஆன்மிக சந்திர மண்டல ஒளிக்கும் சீவனுக்கும் சம்பந்தம் உண்டு" என்று கூறிப் பல இடங்களில் விளக்கியுள்ளார். 'கீர்த்தித் திருவகவல்' என்ற பகுதியின் உரையில் "சைவ சித்தாந்தம் கூறும் முடிவான முத்திநிலை தேகம் உள்ளபோது தேகத்தை ஆகாய பூதமாக்கி விடுதலேதான். இதுவே மீளாப் பிறவி நெறியாகும்" என்று கூறுகிறார்.

ஆசிரியர், வேதம், வேதாந்தம் ஆகியவற்றின் முடிபுகட்கும் தக்க விளக்கம் தந்துள்ளார். சுருங்கக்கூறின், இந்நூல், ஞானக் கருவூலமாக விளங்குகிறது. திருவாசகத்தைப் புதிய கோணத்தினின்று ஆசிரியர் கண்டு பல அரிய உண்மைகளை உணர்த்தியுள்ளார். புதிய கோணம் என்று சொல்வதைவிட, இதுவே உரிய முறைமையான தக்க உண்மையான நோக்கு என்று கூறுவது பொருந்தும்.

திருவாசகத்தின் உட்கிடை இதுவே என உணர்த்தும் ஆசிரியரது இந்நூற்றொண்டு, எண்ணி எண்ணி, இறும்பூது எய்துதற்குரியது. நம் சைவவுலகு, ஆசிரியருக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. சைவவுலகு என்பதைவிட், அனுபவம் பெறவேண்டும் என்ற துடிப்புடையோருக்கு இந்நூல் அரிய, சீரிய வழிகாட்டியாகும் என்று சொல்லுவது பொருந்தும். நூலாசிரியருக்கு, எனது பணிவார்ந்த வணக்கம் உரியதாகுக.

**சி. இராமலிங்கம்**
*அண்ணாமலைப் பல்கலைக் கழகம்*

# அணிந்துரை

"செந்தமிழ்ச் சைவமணி", "சித்தாந்தப் புலவர்மணி"

திரு. **ந.ரா. முருகவேள்,** எம்.ஏ., எம்.ஓ.எல்.,

ஆசிரியர், 'திருக்கோயில்'

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-34.

திருவாசகம், அமிழ்தினும் இனிய நமது தமிழ் மொழிக்கண் உள்ள இலக்கியங்களுள் தலைசிறந்த தொன்று. சமயம் தத்துவம் ஞானம் பக்தி முதலிய பற்பல துறைகளில் திருவாசகம் தனக்கு ஈடும் எடுப்பும் அற்றுச் சிறந்த பேரிலக்கியமாகத் திகழ்ந்து வருகின்றது. அதனைப் பாடியருளிய மாணிக்கவாசகரை "அறிவாற்சிவமே யாயவர்" என நம் சான்றோர்கள் தொன்று தொட்டுப் போற்றி வருகின்றனர்.

இத்தகைய மணிவாசகப் பெருமான் அருளிய திருவாசகச் செந்தமிழ் மாமறையின் சிறப்பு அளவிடற்கரியது. அதற்கு உரை எழுதுதல் ஆகாது என்ற ஒரு கொள்கை நிலவி வந்த காலம் ஒன்றுண்டு. ஆனால், அண்மைக் காலத்தில் அதற்குப் பேரறிஞர்கள் பலர் உரை எழுதியிருக்கின்றனர். அவ்வுரைகள், பெரும்பாலும் சொற்பொருள் கூறுவனவாயும், பொழிப்புரை குறிப்புரை கருத்துரை ஆகியவற்றைத் தருவனவாயும், இலக்கண இலக்கிய மேற்கோள்கள் காட்டுவனவாகவுமே அமைந்துள்ளன. திருவாசகம் வெறும் உலக நூல் வழக்குப் பற்றிய நூல்களைப் போன்றதன்று. அதன்கண் நம்மனோர் உணர்தற்கரிய ஞானயோக நுண்பொருள்கள் பற்பல

நன்கினிது அமைந்து விளங்கித் திகழ்கின்றன. ஆயினும் திருவாசகத்தின் ஞானயோக நுண்பொருள்களை அறிந்தோரும், ஆராய்ந்தோரும், அறிந்தாய்ந்து விளக்கி நூல்கள் எழுதியோரும் எவரும் இல்லை என்றே கூறலாம்.

மாணிக்கவாசகர் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் ஞானப் பனுவலுக்கு, உரை வகுத்தருளிய பெருநலஞ்சான்ற பேராசிரியர் ''மாணிக்கவாசகர், திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் இந்நூலை, அறிவன் நூற்பொருளும் உலகநூல் வழக்கும் ஆகிய இரு பொருளையும் நுதலி எடுத்துக்கொண்டு இயற்றினர்; அவ்விரு பொருள்களுள் ஆகமநூல் வழிப்பட்ட அநுபவஞான யோக நுண்பொருளினை உணர்வதும் உணர்த்துவதும் கடினம் ஆதலின், உலக நூல் வழியில் நுதலிய பொருள் மட்டுமே ஒரு சிறிது என் அறிவு அறிந்த அளவு விளக்குகின்றேன்'' எனக் குறிப்பிடுகின்றார்.

தில்லை மூதூர்ப் பொதுவினிற் றோன்றி
எல்லையி லானந்த நடம்புரி கின்ற
பரம காரணன் திருவரு ளதனால்
**திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்**
ஐம்பொறி கையிகந் தறிவா யறியாச்
**செம்புலச் செல்வ ராயினர்; ஆதலின்**
அறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமென
இருபொருளு நுதலி யெடுத்துக் கொண்டனர்;
ஆங்கவ் விரண்டனுள்,
**ஆகமநூல் வழியி னுதலிய ஞான**
**யோகநுண் பொருளினை யுணர்த்து தற்கரிது;**
உலகநூல் வழியி னுதலிய பொருளெனும்
அலகி நீர்பாற் பரவைக் கண்ணெம்
புலனெனுங் கொள்கலன் முகந்த வகைசிறி
துலையா மரபி னுரைக்கற் பாற்று

என்பது, திருச்சிற்றம்பலக் கோவையார்க்குப் பேராசிரியர் இயற்றிய உரைப்பாயிரம்.

பெரும் புலமை நலஞ்சான்ற பேராசிரியர், திருச்சிற்றம்பலக் கோவையார்க்குக் கூறியது, திருவாசகத் திற்கும் மிகமிகப் பொருந்துவதாகும். திருவாசகம், பிற சில எளிய புலவர்களின் உலகியற் கவிதைகள் போல்வதன்று. காரிகை கற்றுக் கவிபாடும் உலகியற் புலமைக் கவிஞர்களுக்கும், இறைவனின் பேரருள் இன்ப அநுபவ நலத்துள் மூழ்கித் திளைத்துப் பசு கரணங்கள் பதிகரணங்களாக மாறப்பெற்றுச் சிவமாம் தன்மைப் பெருவாழ்வு எய்திய மணிவாசகரின் அருளியல் ஞானக் கவிதைகளுக்கும் உள்ள இடையீடு மிகமிகப் பெரியதொன்றாகும்.

அதன்கண் அமைந்துள்ள ஞானயோக நுண் பொருட்டிறங்களுக்கு ஓர் எல்லையேயில்லை. ஆயினும் "அருட்கண் இலாதார்க்கு அரும் பொருள்கள் தோன்றா" என்று திருமூலர் அருளிச் செய்தவாறு போல, மும் மலத்துள் அழுந்தி முக்குணவயப்பட்டு ஒழுகும் நம்மனோர்க்கு அவைகள் ஒரு சிறிதும் புலனாவதில்லை. "ஓதியோர்க்கு அகப்படாப் பொருளை ஓர்விப்பன" என்று திருநாவுக்கரசர் அருளிச் செய்வதுபோல, இறைவனின் திருவருட்டுணை எய்தப் பெறுபவரே, திருவாசகத்தின்கண் அமைந்து ஒளிரும் ஞானயோகத் தத்துவ நுண்பொருள்களை அறிய வல்லவராவர்.

திருவாசகச் செந்தமிழ்த் தெய்வ மாமறைக்கு, அண்மைக் காலத்தில் சிறந்த அறிஞர்கள் பலர் உரை எழுதி வெளியிட்டுள்ளனர். ஆயினும், அதற்கு ஞான யோக அநுபவ நுண்பொருள் தத்துவக் குறிப்புகளை ஒரு சிறிதேனும் விளக்கும் முறையில் உரை ஏதும் எழுதப்பெறாத குறை ஒன்று இருந்து வந்தது. அக்குறையினைப் போக்கி நிறைவு செய்வதற்கு முயலும் நிலையில், செந்தமிழ்ச் சிவநெறிப் பெருஞ்சான்றோர் ஒருவர், திருவாசகத்தின் முதல் நான்கு அகவல்களுக்கு, மிகவும் அரியதோர் ஆராய்ச்சி நுட்பமும் அனுபவ நலமும் வாய்ந்து திகழும் இச்சிறந்த விளக்க உரையினை எழுதி உதவி இருப்பது, மிகப் பெரிதும் பாராட்டுதற்குரியதாகும்.

''சரியை, கிரியை யோகம் என்ற நிலைகளைக் கடக்காதவர்க்கு உண்மைப் பொருள் விளங்குவதரிது. சொல்லளவில் அநுபோகத்திற்கு உதவாத் பொருள் கூறி மகிழலாமே ஒழிய, உண்மை அதுவாக மாட்டாது. தாயுமானவர் 'ஆகார புவனம்' 'சிதம்பர ரகசியம்' படித்தறிக. அதனால் ஞான யோகத்திற்கு உரிய முறையில் என் அறிவுக் கெட்டினவரையில் இவ்வகவல்களுக்கு உரை கூறிச் செல்லுகின்றேன்''

என்று தம் உரையின் தொடக்கத்தில் நமது உரை யாசிரியப் பெருந்தகையார் அவர்கள் குறிப் பிட்டிருப்பது, இவ்வுரையின் இயல்பும் நெறியும் பற்றிச் செவ்விதின் விளக்கப் போதியதாகும்.

இத்தகு சிறந்த வித்தக உரையினை, நம் பொருட்டு இயற்றியுதவியருளியவர், செந்தமிழ்ச் சிவநெறிப் பெருஞ்சான்றோர் திருவாரூர் சிவயோகி திரு. மா. இரத்தினசபாபதிப் பிள்ளை அவர்களாவர்.

அவர்கள், தம் இளமைக் காலம் முதலே சமய தத்துவ நூல்களிலும், யோக ஞானத் துறைகளிலும். நீண்ட நெடுங்காலமாக ஈடுபட்டு ஆழ்ந்து ஆராய்ந்து பலதிற அநுபவ நலங்களைப் பெற்றவராவர்! பல்வேறு சமயங்களையும் சமய தத்துவ நூல்களையும் நன்று கற்றுத் தெளிந்தவர்கள். வேதாந்த சித்தாந்த தத்துவ ஆராய்ச்சிகளில் பெரிதும் தேர்ச்சி மிக்கவர்கள். 'ஞான முதல் நான்கும் மலர் நற்றிருமந்திர மாலை' என்று சேக்கிழார் பெருமான் விதந்து வியந்து போற்றியுள்ள திருமூலர், திருமந்திரம் என்னும் செந்தமிழ் ஆகம ஞானப் பெருநூலில் பன்னெடுங் காலப் பயிற்சியும், அநுபவமும், திறனாய்ந்து தெளிந்த புலமையும், கைவரப் பெற்றவர்கள். ஓதற்கெளிதாய் உணர்தற்கு மிக அரிதாய், அறிஞர்களுக்கெல்லாம் அச்சம் மிக விளைவிப்பதாய் இருப்பது, திருமந்திர நூல்.

சங்கத் தமிழ் இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர்களும், தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களைக் கரைத்துக் குடித்தவர்களும், ஐம்பெருங்காப்பியங்கள் முதலியவற்றை ஆராய்ந்து கரை கண்டவர்களும்கூட, திருமந்திர நூலின் ஒரு சில பாடல்களுக்கேனும் பொருள் உணர்ந்து கோடல் அரிது. அத்துணைக் கடினமான, சிக்கலான, எளிதிற் பொருள் விளங்காத, அரிய பெரிய நூல் திருமந்திரம். அதனைத் துறைபோகக் கற்று, முறையாகப் பயின்று, அதன் செம்பொருள் நுட்பங்களைத் தேர்ந்து தெளிந்து கைவந்தவர், நம் பெருமதிப்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய சிவயோகியார் அவர்கள்! திருச்சிராப்பள்ளித் திருக்குறள்வேள் திரு.ஜி.வரதராசப் பிள்ளை அவர்கள் வெளியிட்டுள்ள திருமந்திர உரை விளக்க நூல்கள், இவர்கள்தம் பேரருளால் அறிவுறுத்தி அருளியனவேயாகும் எனின், இப்பெருந்தகையாரின் அருமை பெருமைகளை யான் என்ன கூறி எங்ஙனம் உணர்த்த வல்லேன்?

திருவாசகமும் திருமந்திரமும், நமது தமிழ் மொழிக்கும் சிவநெறிக்கும் அமைந்த இருபெருங் கண்கள் போல்வனவாகும். இவ்விரு நூல்களையுமே, நாம் "இருபெரும் தமிழ்ச் சுடர்கள்" எனத் துணிந்து கூறலாம். இவ்விரு பெரு நூல்களின் சிறப்பிற்கும் தெய்விக நலத்திற்கும் ஓர் எல்லையேயில்லை. நமது சிவயோகியார் அவர்கள், இவ்விரு பெரும் தெய்விக நூல்களையும், தமது புண்ணியக் கண்கள் இரண்டு எனக் கொண்டு மிகவும் போற்றி, அவற்றின் அருளமுதத் தெய்விக ஊற்றில் மூழ்கித் திளைத்து, நாளும் இன்புற்று மகிழ்ந்து வருகின்றார்கள். அதன் பயனாகத் திருமந்திர நூலுக்கு விளக்க உரைகளை இயற்றி அளித்திருப்பது போலவே, திருவாசகத்திற்கும் அளித்தல் வேண்டும் என்ற பெருங் கருணை கூர்ந்து, இவ்வுரை விளக்கத்தினை இயற்றி உதவியிருக்கின்றார்கள்!

கீதம் வந்த வாய்மையாற்
  கிளர் தருக்கினார்க்கு அலால்,
ஓதி வந்த வாய்மையால்
  உணர்ந்து உரைக்கல் ஆகுமே?

என ஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்தவாறு போல, இத்திருவாசக அகவல் உரை விளக்கங்கள், ஏதோ ஓதிவந்த வாய்மையால் (வாயின் வல்லமையால்) எழுதியன அல்ல; இறைவனின் திருவருள் ஆகிய உள்ளொளியே,

நானேதும் அறியாமே என்னுள் வந்து
  நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்

என்றபடி, உள்ளத்தின்கண் கீதமாக (Small Still voice within) நின்று உணர்த்திய வாய்மையால் (மெய்ம்மை அநுபவத்தால்) அமைந்தனவாகும் எனலாம்.

இதன்கண் பெருந்துறை (சகஸ்ரதளம்), தில்லை (இருதயம்), ஆரூர் (மூலாதாரம்), உத்தரகோசமங்கை (இடக்கண்), ஏகம்பம் (வீணாதண்டம்), பனையூர் (சுழுமுனை), கழுக்குன்று (பிரணவசிகரம், நாதாந்தம்), குற்றாலம் (நெற்றிநடுவின் நீல ஒளி) முதலிய பற்பல தலங்களைப் பற்றிய விளக்கங்கள் ஞானயோக நெறியில் நன்கினிது விளக்கப் பெற்றுள்ளன. நடராசர், தியாகராசர், இடபாரூடர், கலியாணசுந்தரர், தட்சிணாமூர்த்தி முதலிய தெய்வத் திருவுருவங்களின் இயல்புகள், ஆங்காங்கு அழகுறவும் நுட்பமாகவும் விளக்கப் பெற்றிருக்கின்றன.

பல புகழ்மிக்க சமய இலக்கியங்களினின்று பொருத்தமான மேற்கோள்கள் எடுத்துக் காட்டப் பெற்றிருக்கின்றன. திருவாசகத்தின் அநுபவஞானப் பொருட் கருவூலத்தை வெளிப்படுத்திக் காட்டும் திறவுகோலாக, ஏராளமான திருமந்திரப் பாடல்களும், அவற்றின் பொருள் விளக்கங்களும், இதன்கண் தரப்பெற்றுள்ளன. இதனால் இவ்வுரைநூல், பொன்மலர்

நாற்றம் பெற்றதுபோல மேலும் சிறப்பும் மேன்மையும் பெறுகின்றது! எனவே, இந்நூலைக் கற்பவர்கள் திருமந்திர நூலினையும் சிறப்புறக் கற்றுத் தெளிய வல்லவராவர் என்பது திண்ணம்.

இந்நூல், பொழுது போக்குக்காகப் படிக்கும் நூல்களுள் ஒன்றன்று; சமயஞான ஆர்வலர்கள், ஆழ்ந்து ஆராய்ந்து படிப்பதற்குரிய ஒன்று. அருள்நந்திசிவம் அவர்கள், சிவஞானசித்தியார் பற்றிச் சொல்லுவதுபோல, இது "போதமிகுத்தோர் தொகுத்த பேதமைக்கே பொருந்தினோர் இவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல ஏதுநெடி என அறிய விழையும் அன்பர்களுக்கே யுரிய நூல்" எனலாம்.

இவ்வரிய விளக்க நூலை இயற்றியளித்த செந்தமிழ்ச் சிவநெறிப் பெருஞ்சான்றோர் ஆகிய பெருமதிப்பிற்குரிய சிவயோகியார் அவர்களுக்கும், இதனை அன்புடன் பதிப்பித்து வெளியிட்டுதவும் தொண்டினை ஏற்றுக் கொண்ட சிதம்பரம் வாணி பார்மஸி உரிமையாளர் திரு. கு. பழநிவேலர் அவர்களுக்கும், சைவத் தமிழுலகம் பெரிதும் கடப்பாடுடையது.

உள்ளம் உருக்கி உணர்வைச் சிவமாக்கித்
தெள்ளுதிரு வாசகத்தின் செம்பொருள்கள் - கொள்ளும்வகை
தேற்றினர்எம் சீர்த்திருவா ரூர்ச்சிவ யோகியார்;
போற்றிப் பணிவோம் புகழ்ந்து.

இரத்தினச பாபதியார் என்னும்அருட் சான்றோர்
கருத்துணர்ந்து கற்றுமிகத் தேர்ந்து - திருத்தமிக
நல்லதிரு வாசகத்தின் ஞானப் பொருள்விரித்தார்
ஒல்லைஅன்பர் ஓதியுய்க உற்று.

அறநிலையத்துறை
சென்னை - 34

ந. ரா. முருகவேள்
1.8.73

உ

# அணிந்துரை

## திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள்

*முருகா*

**நேரிசை வெண்பா**

திருவாரூர் ஞான சிவயோகி என்றே
வருவார் அநுபவத்தை வாரித் - தருவார்
இரத்தினச பாபதியாம் எந்தை திருத்தாள்
சிரத்தினில் கொண்டேன் சிறந்து.

மந்திரங்கள் பதினொன்று; இவை சம்மிதா மந்திரம் எனப்படும். இவற்றுள் எட்டாவது மந்திரம் ''சிகா மந்திரம்.'' சிகைக்கு மேற்பட்ட உறுப்பு இல்லை. எட்டாம் திருமுறையாகிய திருவாசகம் சிகாமந்திரம் போன்றது. ஆகவே, திருவாசகத்துக்கு மேற்பட்ட நூல் இல்லை.

இது அநுபவ ஞானநூல். இதற்குப் பொருள் காண்பது என்பது அரிதிலும் அரிது.

மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர் களின் முதல் மாணவர், மகாவித்வான் தியாகராஜ செட்டியார். இவரை ஓர் அன்பர் பலகாலும் அடுத்து, திருவாசகத்துக்கு உரையெழுதுமாறு வற்புறுத்தி வேண்டிக் கொண்டு வந்தார். செட்டியார் ஆகட்டும் என்று தவணை சொல்லிக் கொண்டு வந்தார்.

ஒருநாள் செட்டியார் காவிரி நதியில் நீராடி, நீறாடிப் பாலத்தின்மீது வந்து கொண்டிருந்தார். அந்த அன்பர் எதிரில் வந்தார். ''ஐயா, திருவாசகத்துக்கு உரை எழுதும்'' என்றார். செட்டியார், ''ஓய்! திருவாசகம் எங்கே? நான் எங்கே? இந்த அநுபவ நூலுக்கு நானா உரை எழுதுவது? இன்னும் ஒருமுறை என்னை வற்புறுத்தினால் இப்படியே

நதியில் குதித்து விடுவேன்'' என்றார் தியாகராஜ செட்டியார்.

இதனால் அதன் பெருமையும் அருமையும் விளங்குகின்றதல்லவா?

பொது நூல் திருக்குறள். இதற்குப் பாயிரம் நான்கு அதிகாரங்கள். அதுபோல் திருவாசகத்துக்கு நான்கு அகவல்கள் உண்டு. சிவபுராணம்; கீர்த்தித் திருவகவல்; திருவண்டப் பகுதி; போற்றித் திருவகவல் என்பன. இவைகட்கு உரை காண்பது எல்லாராலும் இயலாது. சிலர் தங்கள் புலமையைக் கொண்டு உரை எழுதியுள்ளார்கள். அந்தவுரைகள் யாவும் அநுபவ உரையாகமாட்டா.

இந்த நாடு செய்த மாதவத்தால் திருவாரூர் உயர் ஞானத்திரு சிவயோகி மா. இரத்தினசபாபதிப் பிள்ளையவர்கள் தோன்றியவர். இந்த அருட்பெருங் குரவர் பல பிறவிகளில் செய்த தவப்பயனால் சிவயோக அநுபவம் பெற்றவர். தன்னை யடைந்தார்க்கு அந்த அநுபவத்தை உபதேசிக்கும் அருட்பெருந்திருவினர். இளமைதொட்டுச் சிவயோக நெறியில் நின்ற பழுத்த சிவஞானி. இவரிடம் பழகியவர்கள் யோக நெறியை உணர்வார்கள். அடியேன் இவரிடம் தீட்சை பெற்று அந்நெறியை உணர்ந்தேன்.

இத்தகு வித்தக சான்றோர் இந்த நான்கு அகவல்கட்கும் தாம் யோக நெறியில் கண்ட அநுபவ உண்மைகளைக் கொண்டு உரை கண்டார்.

இதனைக் கருத்தூன்றிப் படிப்பார்க்கு உரையின் மாண்பு விளங்கும். அம்மம்மா! இந்த வுரையில் எத்தனை எத்தனை நுண்பொருள்கள் மின்னுகின்றன. அறிவுக்கு விருந்தாக அமைந்துள்ளன.

இதுவரை ஒருவருங் காணாத உட்பொருள்களை அநுபவத்திலும், தேவிகாலோத்திரம், திருமந்திரம், சிவஞான சித்தியார், தத்துவப் பிரகாசம் முதலிய ஞான நூல்களாலும் இவர் விளக்கம் காட்டும் திறன் ரசவாதம்போல் நமக்கு நலம் புரிகின்றது.

*சிவயோகம் என்பது எல்லார்க்கும் எளிதில் சித்திப்பதன்று.*

"ஐந்து பூதமும் ஆறு சமயமும்
மந்த்ர வேத புராண கலைகளும்
ஐம்பதோர் விதமான லிபிகளும் வெகு ரூப

அண்டராதி சரா சரமு முயர்
புண்டரீகனு மேக நிறவனும்
அந்திபோலும் வானும் நிலவொடு வெயில் காலும்

சந்த்ர சூரியர் தாமும் அசபையும்
விந்து நாதமும் ஏகவடிவாக
தன்சொரூப மதாக வுறைவது சிவயோகம்"

"செனித்த காரியோ பாதி
ஒழித்து ஞான ஆசார
சிரத்தையாகி யான் வேறென் உடல் வேறு

செகத்தி யாவும் வேறாக
நிகழ்ச்சியா மனோ தீத
சிவச் சொரூபமா யோகி என ஆள்வாய்"

*என்று அருணகிரிப் பெருமான் திருவாய் மலர்ந் தருளியபடி இந்த யோகச் செந்நெறியில் நின்று அநுபவம் பெற்றவர் இதன் ஆசிரியர்.*

*அடியேன் பலகாலும் குமாரக் கடவுளை உள்ளம் உருகி வழிபட்ட தவப்பயனால் இப்பெரியாரைக் காணும் பேறு பெற்றேன். இவர் மூலம் சிந்தையை யடக்கும் திறம் உற்றேன்.*

*இந்த உரையைப் படிக்கும்போது நம்மை நாமே மறக்குந்திறன் விளைகின்றது.*

ஞானம் ஒன்றே முத்திக்கு ஏது

*என்பதனை இவர் பசுமரத்தாணிபோல் விளக்கியுள்ளார்.*

ஞானமலது கதி கூடுமோ?

*என்ற தாயுமானார் திருவாக்கை இது நினைவூட்டு கின்றது.*

பத்திநெறி ஞான நெறிக்குத் துணை செய்கின்றது என்று இவர் காட்டுந்திறன் அருணகிரிநாதர் திருவாக்கைச் சிந்திக்கச் செய்கின்றது.

ஓது சரியை கிரியையும் யுணர்ந்தவர் எவராலும்
ஓத அரிய துரியங் கடந்தது

மேலை வெளியில் ஒளிரும் பரஞ்சுடர்

என்ற திருப்புகழ் வசனத்தை இவர் அநுபவத்தில் கண்டவர்.

''முற்றிலும் அகவழிபாடு. இது சிரசை இடமாகக் கொண்ட அருவ வழிபாடு'' என்று தெளிவாக எழுதியுள்ளார்.

கோகழி என்ற உயர்ந்த சொல்லுக்கு இவர் கூறும் பொருள் மிகவும் விம்மியது.

ஆகமம் என்ற சொல்லுக்குக் கூறிய உரை உயர்ந்துள்ளது.

சிரங்குவிவார் என்ற சொற்களுக்கு ''சிந்தனையால் வழிபடல்'' என்று கூறிய உரையைப் பார்த்து இன்புறுக. ''சிவ ஒளியைக் கண்டு அதிலே தியானித்திருத்தலே சிரங்குவிதலாகும்'' என்று கூறிய பொருளாழத்தை அன்பர்கள் காண்க. சிரங்குவிதல் என்பதற்குத் தலைவணங்கித் தொழுதல் என்றுதான் மற்றவர்கள் பொருள் கண்டார்கள்.

அநாகதம் என்று கூறிய உரை அநுபவத்தால் அறியத்தக்கது. இந்த ஓசைதான் கண்ணப்ப நாயனார் கேட்டநுபவித்தது.

மாறுபாடற்ற தன்மையைப் புதுமைக்கும் புதுமையாகத் திரைப்பட உவமை காட்டிய அழகு யாவர்க்கும் புரியக்கூடியதாக அமைந் துள்ளது.

''நீராய் உருக்கி என் ஆருயிராய் நின்றானே'' என்ற சொற்றொடருக்கும், ஆசிரியர் கூறிய உரைத் திறம் நம்மை உலுக்கிவிடுகின்றது. அப்பகுதிகளைப் படித்துணர்க.

''சிவனடிக்கீழ்'' என்ற அரிய தொடருக்கு ஆசிரியர் காட்டிய உரைத்திறம் எழுதினால் இனியதாக சித்தத்தில் தித்திக்கின்றது. இவருடைய திருமந்திரப் பயிற்சியே இதற்குக் காரணமாக அமைந்துள்ளது.

கீர்த்தித் திருவகவலில் வரும் தலங்கட்கு இவர் கூறும் ஞானார்த்தம் மிகவும் சிந்தனைக்கு உரியது.

''மாமலை'' என்பது பிரணவ மேரு என்று கூறியதும், ''பஞ்சப்பள்ளி'' என்பதற்கு ஐந்து கோசங்கள் என்று கூறியதும், இவ்வாறு ஒவ்வொரு தலங்களும் நம் உடம்பில் உள்ள தத்துவங்களே என்று கூறியதும் பாராட்டுக்குரியவை.

'நரியைப் பரியாக்கிய தன்மை'யின் உட்பொருள் இதுவரை யாரும் கூறாத் நுண் பொருளாகும்.

இதனை எழுதினால் இந்த அணிந்துரை விரிந்துவிடும். ஆதலால் அன்பர்கள் நூலை நுட்பமாகப் படித்துணர்க.

திருவாரூர் என்ற சொல்லுக்கு எழுதிய உரையை அன்பர்கள் படித்துப் பயன்பெறுக.

''குவளைக் கண்ணி'' என்ற சொற்றொடர்க்குக் கூறிய அநுபவவுரை மாணிக்க மணிபோல் ஒளி செய்து உளமாசை யகற்றுகின்றது.

திருவண்டப் பகுதியில் ''மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம் மின்னொளி கொண்ட பொன்னொளி திகழ'' என்ற அடிகளுக்கு ஆசிரியர் தமது சுவாநுபவத்தைக் கூறுந்திறம் மிகச் சிறந்து விளங்குகின்றது. நடராஜ வித்தையை நனி விளக்கம் செய்துள்ளார்.

போற்றித் திருவகவலில் பன்றிக் குருளைக்கு எழுதிய உட்பொருளும், கருங்குருவிக்கு எழுதிய நுண்பொருளும் சிந்தனைக்குரிய செம்பொருள் களாகும்.

உத்தரகோசமங்கை, குருந்தமரம் என்ற பகுதிகளை ஆசிரியர் ஆய்ந்து அவைகட்கு யோக பரமான உரை கூறிய திறம் நமக்குப் பெரும்பயன் தரக்கூடியவையாகும்.

இந்தவுரை பக்குவமுள்ளவர்கள் ஓதி ஓதி உய்வு பெறுவதற்குரியது. இதனை உலகம் உய்ய எழுதிய திருவாரூர் சிவயோகிச் செம்மலுக்கு நமது நன்றியும் வணக்கமும் உரியனவாகுக.

இந்த அற்புதமான நூலை உலகுக்கு உபகாரமாக அச்சிட்டு வழங்கியவர், என் அன்புக்கு மிகவும் உரிய சிதம்பரம் திரு. கு. பழனிவேல் அவர்கள் ஆவார். இவர் சிறந்த சாதனையில் நிற்பவர். எனக்கு உயிரினும் இனிய உத்தம அன்பர். நல்ல பக்குவமுள்ள உத்தம சுத்தான்மா. அன்பர் பழனிவேல் அவர்கட்குத் தமிழன்பர்கள் என்றும் கடப்பாடுடையவர்கள்.

குரு பரம்பரையாகப் பெறவேண்டிய அநேக திட்பநுட்பங்களை இந்த நூலின் வழியாக அன்பர்கள் எளிதில் உணர்வார்கள். திருவாசகம் தோன்றிய நாள் தொட்டு இன்றுவரை யாரும் எங்கும் காணாத அரிய பெரிய ஞானவுரை இன்று வெளிவருகின்றது.

சிவயோகிகள், சங்கேத மொழியால் சொல்லி வந்த பலப்பல கருத்துக்களை வெட்டவெளிச்சமாக இதில் கூறியுள்ளார்.

அன்பர்கள் பலமுறை கருத்தூன்றிப் படித்துப் பயன் பெறுவார்களாக. இதன் மூலம் பிறவியின் பயனைப் பெற்று இனிப் பிறவா நலனைப் பெறுவார்களாக.

**நேரிசை வெண்பா**

வாதவூ ரண்ணல் வழங்கும் அகவலுரை
போதமூர்ந் துய்யப் புவிக்களித்த - ஆதரவன்
அன்பன் பழநிவேல் ஆசான் அருளினால்
இன்பமுடன் வாழ்க இனிது.

சென்னை
13.10.73

அன்பன்
**கிருபானந்தவாரி**

உ

திருச்சிற்றம்பலம்

# திருவாசகமும் சிவராஜயோகமும்

## சிவபுராணம்

நமச்சிவாய வாஅழ்க நாதன் றாள்வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகம் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க.

10 சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க
ஈச னடிபோற்றி எந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி
சீரார் பெருந்துறைநந் தேவன்அடி போற்றி
ஆராத வின்பம் அருளுமலை போற்றி
சிவனவ னென்சிந்தை யுள்நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை

20 முந்தை வினைமுழுதும் மோய வுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
யெண்ணிறைந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்

30 செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே

40 அஞ்ஞானந் தன்னை யகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லாய், அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய், என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்,
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த

50 மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன்தன்னை
மறைந்திட மூடிய மாய விருளை.
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி

60 நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே யளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே

70 இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்கும்எம் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே யத்தா மிக்காய்நின்ற

80 தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே

90 தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்

95 பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்

# கீர்த்தித் திருவகவல்

தில்லை மூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடை யிருளை ஏறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனிற்
10 சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்
கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்
பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டு மின்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
20 உற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்
நந்தம் பாடியில் நான்மறை யோனாய்
அந்தமி லாரிய னாயமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி

ஏறுடை யீசனிப் புவனியை உய்யக்
கூறுடை மங்கையுந் தானும் வந்தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
30 கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்
தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்
மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டியன் றனக்குப் பரிமாஅவிற்
றீண்டு கனகம் இசையப் பெறாஅ
40 தாண்டா னங்கோன் அருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய வியல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்
ஆங்கது தன்னி லடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
50 பூவண மதனிற் பொலிந்தினி தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியில் கரந்த கள்ளமும்
பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்

பாவ நாச மாக்கிய பரிசும்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
60 விருந்தின னாகி வெண்கா டதனிற்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய அதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னில் கரந்த கள்ளமும்
மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கான் ஒருவ னாகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
70 பாண்டூர் தன்னில் ஈண்ட விருந்தும்
தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்
ஏகம் பத்தின் இயல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்தில் சீர்பெற இருந்து
80 மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்
சேவக னாகித் திண்சிலை ஏந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனில் சைவ னாகியும்
துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்

90 புறம்பய மதனில் அறம்பல அருளியும்
குற்றா லத்துக் குறியா யிருந்தும்
அந்தமில் பெருமை யழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்
டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்
தானே யாகிய தயாபரன் எம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுட்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்

100 மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை அருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை யழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை ஒருங்குட னறுக்கும்
ஆனந் தம்மே ஆறா அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்

110 கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்
மூல மாகிய மும்மல மறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்

120 உத்தர கோச மங்கைஊ ராகவும்
ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை யருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்
அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை ஈங்கொழித் தருளி

130 அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாய்வும்
மாலது வாகி மயக்கம் எய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியுங்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கினர் ஏங்கவும்

140 எழில்பெறும் இமயத் தியல்புடை அம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
யிறைவன் ஈண்டிய அடியவ ரோடும்

145 பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே.

உ

திருச்சிற்றம்பலம்

# திருவண்டப் பகுதி

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் தெரியின்
வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்
10 சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியிற்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்கும் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன் நாடொறும்
20 அருக்கனிற் சோதி யமைத்தோன் திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன் திண்திறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்

றெனைப்பல கோடி எனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று
முன்னோன் காண்க முழுதோன் காண்க

30 தன்னே ரில்லோன் தானே காண்க
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி அரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க
அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க

40 சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க
இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவிஎப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க

50 மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண்ஆண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணால் யானும் கண்டேன் காண்க
அருள்நனி சுரக்கும் அமுதே காண்க

60 கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியில் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானும் தேறினன் காண்க
அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க
பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலில் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையில் ஏறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய

70 ஐம்புலப் பந்தனை வாளரவு இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழில் தோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோபம் மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட வரையுறக்
கேதக் குட்டம் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை

80 நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன
ஆயிடை வானப் பேரியாற் றகவயிற்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தூழூழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்
துருவ அருள்நீர் ஓட்டா வருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்

90 வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேல் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத் தரும்பெறல் மேகன் வாழ்க
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சம் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க

100 சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க
நச்சரவு ஆட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்

110 நிற்பன நிறீஇச்
சொற்பதம் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனால் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவின் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி

120 அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்ற தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்
துற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்

130 மறைத்திறன் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்கு
அத்தந் திரத்தி னவ்வயி னொளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென ஒளித்தும் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத்து அருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயிர் ஆக்கை
அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்

140 பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்னே ரில்லோன் றானேயான தன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்

150 உளையா அன்புஎன் புருக வோலமிட்
டலைகடல் திரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவுங்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூ ரெழில்நகை யெரியின்
வீழ்வித்து ஆங்கு அன்று

160 அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையின் நெல்லிக் கனிஎனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தான்எனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்கு
அருளிய தறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடல் திரை புரைவித்து
உவாக்கடல் நள்ளுநீ ருள்ளகந் ததும்ப

170 வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியே னூன்தழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்தேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்கு
அள்ளூ றாக்கை அமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையு மிருப்ப தாக்கினன் என்னிற்

180 கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

# போற்றித் திருவகவல்

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியும் ஆதர வதனிற்
கடுமுரண் ஏன மாகிமுன் கலந்து
ஏழ்தல முருவ இடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்

10 வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில்
யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியி னுள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா வுதரத்து
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்

20 ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்

ஆண்டுகள் தோறும் அடைந்தஅக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்

30 கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்

40 நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பல்துறை பிழைத்தும்
தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றமென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்

50 விரத மேபரம் ஆக வேதியரும்
சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்தடித்து ஆஅர்த்து
உலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்

60 தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுள முருகி அழுதுடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை

70 பூணது வாகக் கோணுதல் இன்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாரும்
கதியது பரம அதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலும் நினையாது
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி அருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை

80 என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதஎன்று அரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பிச்
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி

90 ஆடக மதுரை யரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி
தென்றில்லை மன்றினு ளாடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி

சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னா ருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆஆஎன்று எனக்கு அருளாய் போற்றி

100 படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈசா போற்றி இறைவா போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி யமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதீ போற்றி விமலா போற்றி
ஆதீ போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி

110 உடையாய் போற்றி யுணர்வே போற்றி
கடையேன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி

120 தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி யரனே போற்றி
உரையுணர் விறந்த தொருவ போற்றி
விரிகட லுலகின் விளைவே போற்றி
அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி இருங்கழல்

130 சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி

140 வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலும் நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரு ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி

150 கண்ணா ரமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி
குற்றா லத்தெம் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி

160 கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி

எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி

170 தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி

180 முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தே னாயே னடியேன் போற்றி
இலங்கு சுடரெம் மீசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னேபோற்றி

190 கலையா ரரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமு மிறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி

200 பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
யெந்தமை யுய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி

210 இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த வொருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்

220 குழைத்தசொல் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண

225 போற்றி போற்றி சயசய போற்றி.

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

# சிவபுராணம்

*சிவபுராணம் என்றால் சிவத்தைப் பற்றிய பழங்கதை எனப் பொருள்படும். சிவம் பிறவாதது. தோற்றக் கேடுகள் அற்றது. தோற்றக் கேடுகளுள்ள சீவர்களுக்கும் சிவத்திற்கும் உள்ள தொடர்பையும், அத்தகைய தொடர்பை அறிவதில் உள்ள நன்மையையும், அறியாமையால் உள்ள தீமையையும் பற்றிச் சுருக்கமாக இத்தலைப்பில் கூறப்படுகிறது. ஆதலின் இத்தலைப்பு சிவபுராணம் என்று பெயர் பெற்றுள்ளது.*

நமச்சிவாய வாழ்க நாதன் றாள்வாழ்க:

*உலகச் சமயங்களுள் சைவம் மிகத் தொன்மை யானது. அதில் இறைவனை அறிந்து அநுபவிக்க ஆன்ம கோடிகளின் தகுதிக்கேற்ப, சரியை கிரியை யோகம் ஞானம் என்று படிமுறைகள் வைக்கப் பட்டுள்ளன. அப்படியான முறைகட்கேற்ப இறைவனை விளக்கும் முறையும் மாறுபட்டே யுள்ளது. சரியை வழி பற்றினவர்க்கு இறைவன் தலங்கள்தோறும் அமைந்துள்ளான் என்றும், அங்குச் சென்று வணங்குவதில் ஆன்மா சிறப்புறும் என்றும் கூறுவர். கிரியை வழி பற்றியவர்க்கு இறைவனைப் புறத்தேயும் அகத்தேயும் பூசிப்பதில் ஆன்மா சிறப்புறும் என்று கூறுவர். யோக நெறி பற்றியவர் இறைவனைத் தேகத்தில் காணும் முறையை அறிந்து வழிபடல் ஆன்மா சிறப்புறும் என்பர். ஞானநெறி பற்றியவர் ஆன்மா ஓர் அறிவுரு, இறைவன் ஓர் அறிவுரு, ஆன்மா சிற்றறிவை*

விட்டுப் பேரறிவான இறைவனை நினைந்து வழிபட வேண்டும் என்று உபாயம் கூறுவர்.

அதனால் சைவ சமயம் கூறும் தனிப்பெருங் கடவுள், நமசிவாயம் என்ற மகாமந்திர சொரூபமாயினும், நாலுபாதத்தினர் கூறும் பொருளும், கொள்ளும் கருத்தும் வெவ்வேறாக உள்ளபடியால், மந்திரத்திற்கும் பொருள் பலவாறாகக் கூறப்பட்டுள்ளது. அவைகளைத் தொகுத்துக் கூறுவதில் கற்போர்க்கு மனக் குழப்பம் உண்டாகுமே தவிரத் தெளிவு பிறக்காது.

அந்தக் காரணம் பற்றியே, ஞானத்தை முதல் மூன்று தரத்தினர்க்குக் கூறுவதில், அவர்கள் மனத்தில் கொஞ்சம் இருந்த ஈசுவர பக்தியும் கெடவும் இடமுண்டு. அக்கருத்தை வலியுறுத்தச் சில பெரியோர்களின் முடிவை விளக்கும் ஆதாரங்கள் சில கீழே கொடுக்கப்படுகின்றன.

உற்ற சரியை ஒழியாத நற்கிரியை
குற்றமிலா யோகக் குறிநெறியும் - முற்றிப்
பிறந்தார்கள் தாமறியப் பேசுகேன் அன்றிப்
பிறந்தார் அறியாத பேறு.

*— சீர்காழிச் சிற்றம்பல நாடிகள்*
*காலம் 1325 - 1350*

கன்மநெறி தப்பிற் கடுநரகென் றெந்நாளும்
நன்மைதரு ஞானநெறி நாமணைவ தெந்நாளோ!

ஞானநெறி தானே நழுவிடினும் முப்பதத்துள்
ஆனமுத்தி நல்குமென அன்புறுவ தெந்நாளோ!

பன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சொல்மார்க்கங் கண்டு துவக்குநாள் எந்நாளோ!

இதுவே பிரணவயோகம், திருமந்திரம், திருவாசகம் கூறும் ஞானநெறி.

அத்து விதமென்ற அந்நியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடருநாள் எந்நாளோ?

சிவம் சீவர்களை விட்டகலாதது என்ற தத்துவம் உணர்ந்தபோது சுத்த சிவபாவனை உதிக்கும்.

கேட்டல்முதல் நான்காலே கேடிலா நாற்பதமும்
வாட்ட மறஎமக்கு வாய்க்குநாள் எந்நாளோ?

என்னதியான் என்பதற எவ்விடமும் என்னாசான்
சன்னதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ?

நாம்பிரம மென்றால் நடுவேயொன் றுண்டாமால்
தேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநாள் எந்நாளோ?

முச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ?

எவ்வடிவும் பூரணமாம் எந்தையுரு வென்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே அடங்குநாள் எந்நாளோ?

சிந்தித்த தெல்லாஞ் சிவபூரண மாக
வந்தித்து வாழ்த்தி வணங்குநாள் எந்நாளோ?

தாங்கியபார் விண்ணாதி தானேஞா னாக்கினியாய்
ஓங்குமி யோகவுணர் வுற்றிடுநாள் எந்நாளோ?

ஆசனமூர்த் தங்களற அகண்டா காரசிவ
பூசைசெய ஆசை பொருந்துநாள் எந்நாளோ?

அஞ்செழுத்தின் உண்மை அதுவான அப்பொருளை
நெஞ்சமுத்தி ஒன்றாகி நிற்குநாள் எந்நாளோ?

குறிப்பு: வேதாந்திகள் தத்துவமசி என்ற மகாவாக்கியத்தால் உணர்த்தும் தத் என்பதே பஞ்சாக்கரப் பொருள் என்றார். தத், சதாசிவம், பரப்பிரமம் என்றவையே பஞ்சாக்கரப் பொருள்.

அவ்வுயிர்போல் எவ்வுயிரும் ஆனபிரான் தன்னடிமை
எவ்வுயிரு மென்றுபணி யாஞ்செய்வ தெந்நாளோ?

— தாயுமானவர்
17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்

இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை
அவனுக்கும் வேறில்லம் உண்டா அறியின்
அவனுக் கிவனில்ல மென்றென் றறிந்தும்
அவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே.

— திருமந்திரம், 2650

நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடுஞ் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட வரியன் சிறப்பிலி எம்மிறை
ஓடும் உலகயி ராகிநின் றானே.

2651

— திருமூலர், மூன்றாவது நூற்றாண்டு

இவரே தனது நூலில் சிவத்தின் அட்டவீரட்டம், முருகன், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவம், சத்தி, சிவம், விந்து, நாதம் என்பவை மனிதனிடம் உள்ள சத்திகளின் பெயர் என்று அறுதியிட்டுக் கூறின பெரியார் ஆவர். திருமூலர்கண்ட பெருந்துறையைப் புறத்தில் ஆலயமாக்கி மூர்த்தியில்லாத மூலத்தானம் அமைத்தவர் வாதவூரர் ஆவார். பெருந்துறை என்பது இப்போது ஆவுடையார் கோயில் எனப்படும் ஊராகும். இது தேகத்தில் சகஸ்ர தளமாகும்.

சரியையின் றொழிலினாலுஞ் சற்கிரியை
யதனாலும் யோகம்
புரிதரு முயற்சி யாலும் பொருந்தொணா
தென்பர் மேலோர்
உரிய தேசிக னுரைக்கு மொருமொழி
யுண்மை யாலே
அரியமெய்ஞ் ஞான வீடிங் கடைவது
திண்ண மாமே.

— நிஷ்டானுபூதி

சாத்திரம் புத்தகம் பூசை சமய மதந் தருக்க
தந்திர மந்திர யோகந் தவவிரதஞ் சீலம்
ஏத்தரிய பாவனையெண் சித்திகளே முதலாம்
எப்பயனு முத்திவிலக் கெனவொருசொல் லதனால்

தீர்த்தவன் மெய்த்தேசிகனா மவனருளா லகலாச்
சித்தமல மறுத்துலகிற் றீமைநன்மை செயினும்
வாய்த்தகதி ரவன்செயல்போ லிசைந்திசையா தொழுகும்
வண்மையரே மெய்ஞ்ஞான வுண்மைநிலை யினரே.

— *சிவஞான தீபம்*

உரைசெயிற் பரம ஞானமொன்றுமே முத்திக் கேது
சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்றும் ஞானம்
மருவுதற் கேது வென்றே மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென்றெண்ணிக்களிப்பவர்
கயவரன்றே.

— *பிரபுலிங்கலீலை*

சிவாலயங்களில் மிகப் பெருமை வாய்ந்ததும், தொன்மையானதும், கோயில் என்ற பெயரினையுடையதும் சிதம்பரமாகும். திருவாசகத்தில் புகுமுன் கோவிலை விளக்க வேண்டியது முதற் கடமையாகும்.

தில்லை என்பது ஊரின் பெயர். கோவிலின் பெயர் சிதம்பரம். அங்குள்ள கூத்தன் பெயர் ஆனந்த நடராசர். தில்லை என்ற ஊரையும் கோவிலின் பேரால் வழங்கும் வழக்கம் வந்துவிட்டது. அதனால் கோவிலுக்கு உரிய பெயரல்லாம் ஊருக்கே ஆயிற்று. தில்லை, சிற்றம்பலம், சிதம்பரம், கோயில், பெரும்பற்றப் புலியூர், தகாராகாயம், புண்டரீகபுரம், பொன்னம்பலம், பொது என்பன வெல்லாம் ஒவ்வொரு காரணம் பற்றி அக்கோவிலுக்கு வந்தன. தில்லை என்பது ஒரு சிறிய நச்சுப் பாலுடைய மரம். அப் பால், பட்ட இடமெங்கும் புண்ணாகிவிடும். அத்தகைய வனத்தை அழித்து அத்தலம் அமைக்கப்பட்டதாக அத் தலபுராணம் கூறும். மனிதனுடைய இருதயமே அவனைப் பந்தத்துக்குள்ளாக்கும் தில்லை வனமாகும். சிதம்பரத்தை விராட் புருடனின் இருதயம் என்று காட்டினர். அத்தகைய இருதயத்தில் ஆனந்தக் கூத்தனை நிலைக்கப் பண்ணிவிட்டால், அவனுடைய இருதயம் மாசற்ற ஆகாயமாய்ப் பூமி தத்துவ சம்பந்தமான ஆசைகளை விட்டு நிற்கும் என்பதே,

நடராசருக்குப் பின்னுள்ள ஆகாய இரகசியமாகும். இது மனிதனின் அநாகத சக்கர தத்துவமாகும்.

தெய்வம் 'ஆகாய' வடிவில் மிகச் சூக்குமமாய் நிறைந்துள்ளது என்பதை உணர்த்தச் சைவர்கள் எவ்வூர்த் தேவாரம் ஓதத் தொடங்கினாலும், திருச் சிற்றம்பலம் என்றே தொடங்குகின்றனர். இதன்பொருள் தெய்வீகத் தன்மை வாய்ந்த மகாநுட்பமான ஆகாயம் என்பதாகும். வேதம் ஓதுபவர்கள் 'ஓம்' என்று ஆரம்பித்து 'ஓம்' என்று முடிக்கிறார்கள். அதைப்போன்றதே திருச்சிற்றம்பல மும்மாகும். (சிறுமையான அணுக்களாலானது சிற்றம் பலம்).

மனிதன் எண்ணுவது பேசுவது எல்லாம், ஆகாய தத்துவ அடிப்படையில் உள்ளது. மனிதனுடைய எண்ணக் குவியலே மனிதனைப் பிறவிக்கு விடுவது. அத்தகைய எண்ணக் குவியலூடே கூத்தப்பெருமானை நிலைநிறுத்திப் பிறவிக்குக் காரணமான ஆணவ வல்லிருள் கீழ்ப்படுத்தப்படும் என்பதை, முயலகனாக ஒரு குறுவடிவம் அமைத்துக் காட்டினர். பிரணவத்தில் பாதமாகியதை அறிந்து சோம மண்டலத்தை விளக்கம் செய்து விந்து நாதங்களில் நிலைபெறில் வல்லிருள் ஒழியும் என்பதே நடராச வடிவத்தின் உருவக் கருத்து. இதில் சூக்குமமான பிரணவமும், தூலமான பஞ்சாக்கரமும் உள்ளது.

எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன்
சிவாயநம வென்னும் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான்.

ஆடும் படிகேள்நல் லம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம் - கூடும்
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகர்முகம் வாமுடியப் பார்.

— உண்மை விளக்கம்

அவரவர் எண்ணம்போல் அவரவருக்கு நல்லனவும் தீயனவும் செய்யும் ஆகாய மண்டலமே, மனிதனை உள்ளும் புறமும் சூழ உள்ளது. இருதயத்தில் இருள் மயமான தத்துவங்களைக் கீழ்ப்படுத்தி ஒளிமயமான இறைவனை இடம்பெறச் செய் என்பதே சிதம்பர இரகசியமாகும். ஆகாயம் வெற்றுக் கண்ணுக்குக் காண முடியாத இரகசியமாயிற்று. இது பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சிந்துவெளியில் வாழ்ந்த இந்து சமயத்தவர் கொண்டு வந்த குறி விளக்கம். திருமூலர் காலத்திற்கு முன்னே இத்தத்துவம் நிலைபெற்று விட்டபடியால், அவரும் திருமந்திரத்தில் ஒன்பதாந் தந்திரத்தில் இதையே ஞானசாதகமாக்கி விளக்கினர். பின்னர் வந்த சமயப் பெரியார்களும் அந்த அடிப்படையைப் பின்பற்றினர்.

வடலூர் இராமலிங்கசுவாமிகள் ஒரு நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். அவர் உலகினுக்கு இந்த உண்மையை எடுத்துக் காட்டினர். அவர் யாதொரு உருவமுமில்லாத ஒரு சபையை அமைத்து அங்கு ஏழு திரைகளையிட்டு, அதற்குள் உள்ள வெளியை ஆனந்த நடராசர் என்று பெயர் வைத்து, அங்கு ஒளியைக் காண்பதேதான் இறைவனது நிலை என்றார்.

1960ஆம் ஆண்டு வெளியான ''சென்னை மாநிலக் கோயில்கள்'' என்ற புத்தகத்தில் உள்ள குறிப்பின் பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**''குறிஞ்சிப்பாடியைச் சேர்ந்த ஒரு சிற்றூர் வடலூர். கோவிலின் பெயர் ஸ்ரீ ஆனந்த நடராசர் கோவில். கோவிலின் வயது வருஷம் 90.**

**மூலமூர்த்தியின் பெயர் ஆனந்த நடராசர்.''**

அங்கு ஒரு மூர்த்தியும் வைக்கப்படவில்லை என்பதை நினைவில் கொள்ளவும். சிதம்பரம் கோவிலிலுள்ள ஆனந்த நடராசர், மனிதனின் இருதய சக்கரம் என்ற அநாகத சக்கரத்திலிருந்து நடிப்பதை, உலகுக்கு உணர்த்த

அமைந்த மூர்த்தியாகும். வடலூரில் உள்ள ஆனந்த நடராசர், அருவ ஆகாயத்தில் சிரசின் மேல் விளங்கும் ஈசானமூர்த்தியால் உணர்த்தப்பட்ட ஒளி நடனமாகும். திருமூலர் நான்காந் தந்திரத்தில், அநாகதத் தானத்தில் விளங்கும் கூத்தப்பிரானைத் திருவம்பலச் சக்கரத்தில் விளக்கினார். இது அஷ்ட கர்மசித்தியைக் கொடுக்கும் என்று அங்கு முடித்தார். இறைவனுக்கு அடிமை யாதலையே சாதனம் என்று மணிவாசகர் கூறினார். ''என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பில்'' என்றார். ''அருச்சனை'' என்ற பகுதியில் திருமந்திரம் கூறுவதைக் கீழே காணவும்.

வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்
வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர்
வேண்டார்கள் கன்மம் மிகுசிவ யோகிகள்
வேண்டார்கள் கன்மம் மிகுதியோ ராய்ந்தன்பே.

— திருமந்திரம், 1008

அறிவரு ஞானத் தெவரும் அறியார்
பொறிவழி தேடிப் புலம்புகின் றார்கள்
நெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கில்
எறிமணி யுள்ளே இருக்கலு மாமே. 1009

இருளும் வெளியும்போல் இரண்டாம் இதய
மருளறி யாமையும் மன்னு மறிவு
மருளிவை விட்டறி யாமை மயங்கு
மருளுஞ் சிதைத்தோ ரவர்களா மன்றே. 1010

தானவ னாக அவனேதா னாயிட
ஆன இரண்டில் அறிவன் சிவமாகப்
போனவ னன்பிது நாலாம் மரபுறத்
தானவ னாகுமோ ராசித்த தேவரே. 1011

ஓங்காரம் உந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்
நீங்கா வகாரமும் நீள்கண்டத் தாயிடும்
பாங்கார் நகாரம் பயில்நெற்றி யுற்றிடும்
வீங்காகும் விந்துவும் நாதமே லாகுமே. 1012

**இதன் பொருள்:**

*பிரணவம் எப்பொழுதும் நாவிக்குக் கீழே விளங்கும். இதற்குக் கோஷகலை என்று பெயர். பிரணவத்தை விட்டகலாத சத்தி கண்டத்தில் இடம்பெறும். இதன்மேல் பஞ்சாக்கர வடிவினான மகேசுவரன் நெற்றியை இடமாகக் கொண்டு திகழ்வார். இதன் மேலான பிரணவ உறுப்புகளான விந்து நாதங்கள் சிரசில் விளங்குவனவாகும்.*

நமவது வாசன மான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமவற வாதி நாடுவ தன்றாஞ்
சிவமாகு மாமோனஞ் சேர்தல்மெய் வீடே. *1013*

**இதன் பொருள்:**

*பஞ்சாக்கர விளக்கமாவது சிவம் பிரகாசிக்கத் தேகத்தை ஆசனமாக்கில் தேகத்தைக் கடந்த சிவபுரத்தில் உள்ள சிவம் சித்தியாகும். எப்போது நமவால் உணர்த்தும் தேகப்பற்று நீங்கி, சிதாகாயத்தில் தன்னை உணருகின்றார்களோ அன்றே சிவமாவர். பெருமை பொருந்திய பிரணவத்தில் சமாதியுறுதலே உண்மையான மோட்ச நிலையாகும். திருவாசகம் ஆசைப்பத்து பார்க்க விளங்கும். இந்நிலை எப்போது கைகூடுமென்று வினவுவார்க்குப் பின்வரும் மந்திரத்தில் விடையளிக்கின்றார்.*

தெளிவரு நாளிற் சிவஅமு தூறும்
ஒளிவரு நாளில் ஓரெட்டில் உகளும்
ஒளிவரும் அப்பதத் தோரிரண் டாகில்
வெளிதரு நாதன் வெளியாய் இருந்தே. *1014*

**இதன் பொருள்:**

*ஞான விசாரணையில் நன்கு தெளிவுபெற்ற காலத்துச் சீவனது அண்டகோசத்தில் ஒளிவிளங்கும். அவ்விதம் ஒளிவந்தபோது எட்டு என்ற எண்ணால் குறிக்கப்படும்*

சந்திரகலை மகிழ்ச்சியில் நிலை பெறும். அந்த ஒளியில் சீவவொளியும் சிவ ஒளியும் விளங்குவது காணப்படும். சிவவொளி அகண்டமாய் உள்ளது. சீவஒளி கண்டமாய் உள்ளது. அகண்டத்தில் விளங்கும் சிவம், தான் வெளியிலிருந்து கொண்டே சீவனையும் பசுத்துவம் பாழ்படச் செய்து சிவமாக்கி விடுவன்.

உகளுதல் - மகிழ்வு பெறுதல்.

அதனால் சரியை, கிரியை, யோகம் என்ற நிலைகளைக் கடக்காதவர்க்கு உண்மைப் பொருள் விளங்குவதரிது. சொல்லளவில் அநுபோகத்திற்கு உதவாத பொருள் கூறி மகிழலாமே ஒழிய, உண்மை அதுவாக மாட்டாது. தாயுமானவர் 'ஆகாரபுவனம்' 'சிதம்பர இரகசியம்' படித்தறிக. அதனால் ஞான யோகத்திற்கு உரிய முறையில் என்னறிவுக் கெட்டினவரையில் இவ்வகவல்களுக்கு உரை கூறிச் செல்லுகின்றேன்.

''நம: சிவாய'' என்பது சிவனுக்கு வணக்கம் என்ற புனிதமான மந்திரமாகும். வடமொழியில் நம: என்பதை முன் வைத்து, மந்திரம் அமைக்கப் பட்டுள்ளது. நமோ நாராயணா, நமோ பகவதே வாசுதேவாய போன்றவைகள் உள்ளன. இது வேத நெறிபற்றியவர் கொள்கை. இது காமியப்பலனை விரும்பியவாறு அளிக்கும் என்பதுபற்றி அஷ்டகர்ம காரியங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது. ஞானிகளாக ஆவோர் சிவாய நம என்று தமது உள்ளத்தில் தெளிய வேண்டும் என்றார். அப்படியிருப்பினும் இறைவனின் பெயர் நமசிவாய என்பதேதான்.

நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முத லாகும் சதாசிவந் தானே.

— திருமந்திரம், 983.

நமசிவாய என்றபோது பூமியை முதலாகக் கொண்ட உருத்திர சோதியை விளக்கும். சிவாயநம என்றபோது

ஒளிவடிவு கொண்ட சதாசிவரின் வழி பாடாகும். அதனால் ஆலய வழிபாட்டுக்குச் சிறப்புக் கொடுத்த சமயாசாரியர்கள், நமச்சிவாயப் பதிகம் ஓதியுள்ளனர். தேகத்திலும், ந.ம.சி.வ.ய. என்பது நிற்கும் நிலையாகும். ஓது முறையால் தேகத்தில் நிற்குமுறையை உணர முடிவது சிவாயநம என்பதேயாகும். சிவபுராணத்தில் ''நிறங்கள் ஓரைந்துடையாய்'' என்றார்.

முத்து மாமமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுச்சோதி
அத்தன். — அதிசயப்பத்து

இத்தகைய தேசோமண்டல உருவைத்தான் வடலூர் இராமலிங்கசுவாமிகள், திருக்கடைக்காப்பின் பொழுது ஸ்ரீமுக தை மாதம் 19உ கூறிய வாசகத்தை அறிய, அது கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

''இயற்கையில் தானேயுள்ளவராய் விளங்குபவர் என்றும், எல்லா உலகங்களையும் எல்லாச் சத்திகளையும் எல்லாச் சத்தர்களையும் எல்லாக் கலைகளையும் எல்லாப் பொருள்களையும் எல்லாச் செயல்களையும் எல்லா இச்சைகளையும் எல்லா ஞானங்களையும் எல்லாப் பயன்களையும் எல்லா அனுபவங்களையும் மற்றெல்லா வற்றையும் தமது திருவருட் சத்தியால் தோற்றுவித்தல் வாழ்வித்தல் குற்றம் நீக்குவித்தல் பக்குவம் செய்வித்தல் விளக்கம் செய்வித்தல் முதலிய பெருங் கருணைப் பெருந் தொழில்களை இயற்றுபவரென்றும், ஒன்றுமில் லாதவர் என்றும், சருவகாருண்யர் என்றும், சருவ வல்லபர் என்றும், எல்லாம் உடையவராய்த் தமக்கு ஒருவாற்றானும் ஒப்புயர்வில்லாத தனிப்பெருந் தலைமை அருட்பெருஞ் சோதியரென்றும், சத்திய அறிவால் அறியப்படுகின்ற உண்மைக் கடவுள் ஒருவரே அகம்புற முதலிய எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்த பூரணப் பொதுவெளியில் அறிவார் அறியும் வண்ணங்களெல்லாமாகி விளங்குகின்றார்.''

இங்கு அறியத்தக்கது, பொதுமக்கள் சரியை கிரியை பற்றியவர் வழிபடும் நெறி ஒன்று. தீவிரம் பற்றிய யோக

ஞானியர் வழிபாடு என்பது ஒன்று. முன்னவர் வழிபாடு புராண அடிப்படையைக் கொண்டது. தியானநிலை இருதயம் பற்றியது. உருவ வழிபாடு காமியப் பலனுடையது. மெத்தெனச் செல்வது. மற்றொன்று யோகஞானியர் கொண்ட வழிபாடு. இது சிந்தனையை இடமாகக் கொண்டது. முற்றிலும் அக வழிபாடு. உருவமற்ற அகண்டாகார வழிபாடு. இது சிரசை இடமாகக் கொண்ட அருவ வழிபாடு. இதையேதான் மணிவாசகர் திருவாசகத்தில் விளக்கியுள்ளார். திருமூலர் (ஒன்பதாந்தந்திரம்) திருமந்திரத்தில் விளக்கி யுள்ளதும் இதுவே. கூத்தன் என்றே இரண்டு நெறியிலும் கையாளப்பட்டாலும், முன்னதில் உருவுடைய கூத்தப்பிரான். பின்னவர் வழியில் அருவ மூர்த்தியான ஈசானரைக் குறிக்கப்படுகிறது. இவர் ஒளியாக எல்லா உயிர்களிலும் நடிப்பவர்.

ஆதி நடஞ்செய்தான் என்பார்கள் ஆதர்கள்
ஆதி நடஞ்செய்கை யாரும் அறிகிலர்
ஆதி நடமாட லாரும் அறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே. **2787**

அம்பல மாவ தகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத்தீ மண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாமே. **2775**

நீருஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
ஓடும் உயிரெழுந் தோங்கி யுதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்
தாடும் இடந்திரு அம்பலந் தானே. **2764**

முன்னர் அருச்சனை என்ற தலைப்பில் விளக்கியபடி, திருமந்திரம் 1012இல் நமச்சிவாய என்ற ஒளி உருவை விந்துத் தானத்தில் தியானிக்க என்றார். சிரசில் தியானிக்கக்கூடிய மந்திரம் சாந்தியத் தீ தகலைக்கு உரியது, ஓம் என்ற பிரணவமும், சிவ என்ற மந்திரமும்தான். ஞானயோகத்தில் தேகத்தைவிட்டுச் செல்லுதலேதான்

லட்சியம். தேகத்தைத் தாங்கியுள்ளது சீவன். சீவனை இடமாகக் கொண்டது ஆன்மா. சீவனது நிலை ஒளிநிலையாகும். சீவ ஒளியில் சிவம் நடிப்பதையே இங்குக் கூறப் பட்டுள்ளது. தேகமானபோது பிருதிவி அப்பு தீ வாயு ஆகாயமாகவும், தேகியானபோது சோம ஒளி சூரிய ஒளி ஆன்ம ஒளி என்று மூன்றுமாகவும், எண் வகையாகவும் புணர்ந்துள்ளதை விளக்கியுள்ளார்.

போற்றி யென்போலும் பொய்யர் தம்மைஆட்
  கொள்ளும் வள்ளல்
போற்றி நின்பாதம் போற்றி நாதனே
  போற்றி போற்றி
போற்றி நின்கருணை வெள்ளப் புதுமதுப்
  புவனம் நீர்தீக்
காற்றிய மானன் வானம் இருசுடர்க்
  கடவு ளானே. — திருச்சதகம்

ஐம்பெரும் பூதநாயகர்கள் பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவர் என்பவர். முறையே பிருதிவியாதி தத்துவங்கட்குத் தலைவர். ஆகாயபூதம் ஏனைய நாலு பூதங்களிலும் கலந்துள்ளது பற்றிச் சதாசிவருக்கு ஏனைய நால்வரும் வியூகர்களாகக் கொள்ளப்பட்டது. மூன்று ஒளிகளினால் அமைவது விந்து நாதங்கள். இவையெல்லாம் தொழிற்படுவது சிவத்தினாலும் சத்தியினாலுமாகும். இவ்வொன் பதையும் தன்னுள் அறிவதைச் சிவபுராணம் விளக்குகிறது. ஞானிகளே ஒன்பது நிலைகளை அறிய முடியும்.

ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை
நன்றென் றடியிணை நானவ னைத்தொழ
வென்றைம் புலனு மிகக்கிடந் தின்புற
அன்றென் றருள்செய்யும் ஆதிப் பிரானே. 1775

மலர்ந்த அயன்மால் உருத்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. 1776

மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்று
ஆவி எழுமள வன்றே உடலுற
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே. 1777

சிவ அறிவு பராசத்தியால் பதிவு கொண்டு, ஐம்பெரும் பூதநாயகரையும் தொழிலுக்கு விடுவதுபற்றிச் சிவமும் சத்தியுமாகச் சுமார் நூறு இடங்களில் திருவாசகத்தில் கூறப்படுகிறது. சிறப்பு உருவம், பாதிமாதொடுங் கூடிய பராபரன் (அர்த்தநாரீசுவரன்) என்றே மணிவாசகர் விளக்கிச் சென்றார்.

சதாசிவர், உருவத்தையும் அருவத்தையும் இணைத்து நடுவே நிற்பவர். அவர் உருவநிலை இணைக்கும்போது சத்தியோசாதம், வாமதேவம், தத்புருடம், அகோரம், ஈசானம் என்று ஐந்து முகங்களுடன் முகத்திற்கு மூன்று கண்ணாகப் பதினைந்து கண்களுடன் பத்துக் கைகளுடன் இரண்டு கால்களுடன் கூடி விளங்குபவர் என்று ஆகமங்கள் கூறும். இவர் ஐந்து முகங்களுடன் விளங்குவதால் பஞ்சப்பிரமம் என்று இவரை அழைக்கின்றனர். சகல கிரியையிலும் சைவர்கள் இந்த பஞ்சப் பிரம்ம மந்திரத்தையே சிறந்ததாகக் கொண்டுள்ளனர். பஞ்ச என்ற சொல்லுக்கு விரிந்த என்ற ஒரு பொருளும் உண்டு. பஞ்சபாத்திரம், பஞ்சானனம் என்றவை களைக் கொண்டு பொருள் காண்க. வாய் விரிந்த பாத்திரத்திற்குப் பஞ்ச பாத்திரம் என்றும், விரிந்த முகமுடைய சிங்கத்திற்குப் பஞ்சானனம் என்றும் பெயர் வந்தது. அது போலவே பஞ்சப்பிரமமும் காணப்படும் தேகத்தில் ஆதிக்கம் வகிப்பதன்றி, விரிந்த ஆகாயத்திலும் பரந்த அவர் அறிவு உள்ளது என்ற கருத்தில் பொருள் கொள்ள வேண்டும். பஞ்சப் பிரமத்திற்கும் முப்பத்தியெட்டு சத்திகள் என்று ஆகமவாதிகள் கூறுகின்றனர். அவைகளுக்குத் தனித்தனிப் பெயரையும் அவைகளுக்கு உரிய ஆட்சி நிலையையும் கூறியுள்ளனர். அவை வருமாறு:

சதாசிவரின் மேற்கு நோக்கிய முகம் சத்தியோ சாதம், பால்போன்ற வெண்ணிறம்.

| | | |
|---|---|---|
| இவரது கீழ் ஆளுகை நிலை | | 4 |
| மேல் ஆளுகை நிலை | | 4 |
| | ஆக | 8 |

| | | |
|---|---|---|
| கீழ்ப்பாகம் - பாதங்கள் | | 2 |
| கைகள் | | 2 |
| | ஆக | 4 |

மேல்பாகம் - புருவமத்தியம் பிடரிக்கண் வலது புஜம் இடது புஜம் ஆகிய நான்கு. இரண்டும் சேர்த்து எட்டு உறுப்பு களாகும்.

சதாசிவரின் வடக்கு நோக்கிய முகம் வாமதேவர் - இம்முகம் சிவப்பு.

**ஆட்சி நிலை**

| | | |
|---|---|---|
| அக்குள் பிரதேசம் | | 2 மேல்பாகம் |
| | | 11 கீழ்ப்பாகம் |
| | ஆக | 13 |

கீழ்ப்பாக விவரம்

| | | |
|---|---|---|
| ஆசனம் லிங்கம் | | 2 |
| துடைகள் | | 2 |
| முழந்தாள் | | 2 |
| கணைக்கால் | | 2 |
| பிருஷ்டம் | | 2 |
| இடுப்பு | | 1 |
| | ஆக | 11 |

சதாசிவரின் கிழக்கு நோக்கிய முகம் தற்புருடம். இவரது படிகம்போன்ற ஒளி, சிரசில் உள்ள கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு என்ற திக்குகளுமாக உள்ளது. இது முற்றிலும் மேல்பாகமான 4 இடங்கள் ஆட்சியுள்ளது.

சதாசிவரின் தெற்கு நோக்கிய முகம் அகோரம், கருமை நிறம்.

| | | |
|---|---|---|
| மேல்பாகம் | | 5 |
| கீழ்ப்பாகம் | | 3 |
| | ஆக | 8 |

மேல்பாக விவரம்

| | | |
|---|---|---|
| இருதயம் | | 1 |
| கண்டம் | | 1 |
| தோள் | | 2 |
| மார்பு | | 1 |
| | ஆக | 5 |

கீழ்ப்பாக விவரம்

| | | |
|---|---|---|
| நாபி | | 1 |
| வயிறு | | 1 |
| முதுகு | | 1 |
| | ஆக | 3 |

சதாசிவரின் உச்சிமுகம், சற்று ஈசான பார்வையாக மேல்நோக்கியிருக்கும். மின்னல் போன்ற ஒளி. இது பராசத்தியின் நிஷ்கள வடிவு. ஆத்மாவை இடமாகக் கொண்டது. நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தை சாந்தி சாந்தியதீதை என்றுள்ள சத்திகளை ஆகாய வடிவில் கொண்டு விளங்குவது.

| | |
|---|---|
| சத்தியோஜாதர் | - சத்திகள் 8 |
| வாமதேவர் | - சத்திகள் 13 |
| தத்புருடர் | - சத்திகள் 4 |
| அகோரர் | - சத்திகள் 8 |
| ஈசானர் | - சத்திகள் 5 |
| | 38 |

தேக தர்மத்தைக் கடந்தவருக்குச் சதாசிவரது மேல்நோக்கிய ஈசான முகமும், மகாசூக்குமமான மின்னல் ஒளியுடன் கூடிய பஞ்சகலா சத்திகளும்தான். இது சதாசிவரின் அருவ வழிபாடு. ஆத்ம சொரூபத்தில்தான் சிவம் விளங்குகின்றது. இந்த நிலையை அடைந்தபோது ஆத்மா வேறு சிவம் வேறு என்ற நிலையில்லை.

நானென்றும் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்று தத்துவம் நல்கலால்
தானென்று நானென்று சாற்றகில் லேனே.

— திருமந்திரம் 1441

தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. 2348

ஆகாய வடிவில் உள்ள ஆத்மாவே தேகமாகவும், தத்துவங்களாகவும் விளங்குகின்றது. தேகம் தானில்லை. தத்துவங்கள்தான் இல்லை என்ற ஞானம், தேகத்தை விட்டகலாது தேகமேதான் என்ற நிலையை விட்டு நின்றபோது எவ்வகைச் சத்திகள் மேலிருந்து கீழிறங்கிச் சீவனைச் செயலுக்குட்படுத் தியதோ, அவைகளே ஆத்ம சொரூபமாகுமாறு இறைவனின் அருள்சத்தி துணை புரிகிறது. இதை அறியவே ஞானிகளும் கிரியை வழியினரும் முயல்கின்றனர். தகுதி காரணமாக முறை மாறுபடுகின்றது. கிரியை வழி நிற்போர் ஒவ்வொரு

சத்திகளாக வழிபட்டு மாற்றத்தை அடைய முயல்கின்றனர். ஞானியோ ஒளிமயமான ஈசானரை நாடினபோது இருளில் தொழிற்படும் ஏனைய நான்கு முகங்களின் தொழிலும், அவற்றால் தொழிற்படுத்தப்படும் தேவர் கூட்டங்களும் கெட்டன. இந்த உபாயத்தை ஞானம் கைவரப்பெற்ற குரு சீடனுக்கு உணர்த்த முடியும்.

காயப் பரப்பில் அலைந்து துரியத்துச்
சால விரிந்து குவிந்து சகலத்தில்
ஆயவவ் வாறா யடைந்து திரிந்தோர்க்குத்
தூய அருள்தந்த நந்திக்கென் சொல்வதே. 1787

நானிது தானென நின்றிவ னாடோறும்
ஊனிது தானுயிர் போலுணர் வானுளன்
வானிரு மாமுகில் போற்பொழி வானுளன்
நானிது வம்பர நாதனு மாமே. 1790

பெருந்தன்மை தானென யானென வேறாய்
இருந்தது மில்லைய தீசன் அறியும்
பொருந்தும் உடலுயிர் போலும்ஐ மெய்யே
திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே. 1791

**ஈசான முகத்தை அறிந்து உள்ளத்தைக் கோவிலாக்கிச் சீவனைச் சிவலிங்கமாகப் பூசிக்கும் முறையே சிவ வழிபாடாகும்.** இதை எங்கு சென்றும் அறிய முடியாது.

**இமைப்பொழுதும் என்னெஞ்சில்**
**நீங்காதான் தாள்வாழ்க:**

ஒரு சிறிய காலமும் என் எண்ணத்தினின்றும் அகலாது நிற்கும் திருவடி வாழ்க.

முன்னர் ஈசானர் ஒளியை முகமாகக் கொண்டவர் என்று கூறப்பட்டது. அவரது திருவடிகள் ஒளிக் கிரணங்களேயாகும். அவ்வொளிக் கிரணங்களேதான் இருளான மாயையையும், ஒளியான ஞானத்தையும் தாங்கி நிற்கிறது. அறிவிலிக்கும் சகல உயிர் வருக்கத்திற்கும் அறிவுடையவைகளுக்கும் அதுவேதான் ஆதாரமாக

உள்ளது. இதை ஞானிகள் அறிந்து அத்தகைய இறைவனைச் சதா சிந்தித்துக் கொண்டு உள்ளனர். அஞ்ஞானிகள் சிந்தியாது போயினும் அவன் இருந்து கொண்டுதான் உள்ளான். அவ் வொளியே எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாக உள்ளது.

கீத மினிய குயிலே கேட்டியேல்
எங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவில் பாதாளம்
ஏழினுக் கப்பால்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து
நின்ற தொன்மை
ஆதிகுண மொன்று மில்லான் அந்தம்
இலான் வரக் கூவாய்.

— குயிற்பத்து, திருவாசகம்

நெஞ்சம் என்பது மனம். உள்ளத்தைக் குறிக்கும் சொல். மார்புக்கும் பெயர். ஆத்மா அறிவுடையது. மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பவை அதன் அகக் கருவிகளாகும். அது அந்தக்கரணங்கள் ஞானேந்திரியங்களோடு பொருந்தி உலக ஞானங்களை அறியும். இவைகளுடன் கூடாது ஆகாய வடிவில் நிலைபெற்றுச் சீவனுக்கு உணர்த்தவும் கூடும். ஆகாய வடிவில் உள்ள மனமண்டலத்தை உள்ளம் என்று கூறுவர். உள்ளுதலைச் செய்வதனால், அஃது உள்ளம் எனப் பெயர் பெற்றது. உள்ளுதல் மனத்தின் செயல் ஆதல் பற்றி மனத்திற்கும் அப்பெயர் வந்தது. ஈசான மூர்த்தி வழிபாடு சிரசின் மேலுள்ள ஆகாய மண்டலமாகும்.

ஈசான மூர்த்தியினிடமே நிவிர்த்தியாதி பஞ்சகலா சத்திகள் சூக்கும வடிவில் உள்ளன. பிறவிக்கு வரும் காரணம் சீவனின் விந்து மண்டலமேதான். அங்கேதான் சீவனும் சிவனும் பேதமின்றி விளங்கும்.

கிரியை வழிபற்றி நிற்பவர்க்கு உறக்கத்தில் மனம் தொழிற்படாமல், புருடன் இருதயத்தில் நிற்பதாகக் கூறுவர். அதனால் அநாகத வழிபாடு கிரியை பற்றியவர்க்கு ஆயிற்று.

ஞானி எப்போதும் ஆகாயம்போல் தன்னை வடிவில்லாதவனாய் எண்ணித் தியானம் செய்துகொண்டு இருப்பதால் தேக சம்பந்தமான ஆதாரத்திற்கு இங்கு இடமில்லை. ஞானி எப்போதும் சுத்தாவத்தையி லிருப்பவரானபடியால் சிரசுக்குக் கீழ்த் தியானம் இல்லை. உள்ளம் என்பது மனிதனின் தேகத்தைச் சூழ ஒரு முழ அளவில் தொம்பைக் கூடுபோல் உள்ள மன அணுக்களால் ஆயது. இதை அண்டம் என்றும் பிரணவம் என்றும் கூறுவர். பிரணவம் வடமொழியில் வட்டமாகச் சூழ்ந்து வரும் ஓகாரத்தைப்போல் மேலிருந்து கீழ்வரையில் வியாபகம் பெற்றுள்ளது. அதனால் ஆன்மாவின் சூக்கும நிலைக்கும் இறைவனுக்கும் ஒரே எழுத்தால் குறிக்கப்படும் பிரணவ உபாசனையையே மாணிக்கவாசகர் விளக்கிச் செல்வது பின்னர் விளங்கும்.

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே.

**விளக்கம்:**

சீவவொளி சிவவொளியைத்தான் தாரகமாய்க் கொண்டுள்ளது. அப்படியிருந்தும் மக்கள் அறியாததை ஓர் உதாரணத்தால் விளக்கலாம். பூமி சூரியனுடைய ஒளிக்கிரணத்தாலேயே ஒளியையும் உஷ்ணத்தையும் பெற்றுச் சீவவர்க்கம் செழிப்புற்று விளங்குகின்றது. அத்தகைய சூரியனுடைய கதியும், பூமியினுடைய கதியும் ஒரே தன்மையாக இல்லாமல் சுழன்றுகொண்டே சூரியனை அணுகுவதும் விலகுவதுமாக உள்ளது. சூரியனைப் பூமி அணுகினபோது பூமி உஷ்ணத்தை அதிகம் பெறுகிறது. இது கோடைக் காலமாக உள்ளபோதும் நடைபெறுகிறது. மழைக் காலத்தில் சூரியனை விட்டுப் பூமி தூரமாக விலகிச் செல்லுகிறது. அவ்வளவு ஒளியுள்ள சூரியனை மேகங்கள் மறைத்துவிடுகின்றன. ஆனால், பூமியும் சூரியனும்

இருந்து கொண்டேதான் உள்ளது. இடையில் உள்ள மேகத்தால் சூரியன் மறைக்கப் பட்டுள்ளது.

ஆதிப் பிரானுல கேழும் அளந்தவன்
ஓதக் கடலும் உயிர்களுமாய் நிற்கும்
பேதிப் பிலாமையின் நின்ற பராசத்தி
ஆதிக்கட் டெய்வமும் அந்தமு மாமே 1570

மனம்புகுந் தென்னுயிர் மன்னிய வாழ்க்கை
மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது
நலம்புகுந் தென்னொடு நாதனை நாடும்
இலம்புகுந் தாதியும் மேற்கொண்ட வாறே. 1759

நணுகி லகல்கிலன் நாதன் உலகத்
தணுகில் அகன்ற பெரும்பதி நந்தி
நணுகிய மின்னொளி சோதி வெளியைப்
பணியின் அமுதம் பருகலு மாமே. 2811

ஈசானமூர்த்தியை அறிந்து வழிபடுவார்க்குச் சிவம் அகலாதவனாகவும் உலகை நினைந்து கொண்டிருப்பவர்க்குத் தூரமாகவிருந்து புலப்படா தவனாகவும் உள்ளான். சிவவொளி இருந்தாலும் சீவனின் பாசவிருள் சிவவொளியை மறைத்து நிற்கிறது.

**கோகழியாண்ட குருமணிதன் தாள் வாழ்க:**

கோ - அரசன்; கழி - கோல்; குருமணி - ஒளிவிட்டு நிற்பவன்.

தேகத்தின் அரசன் ஆன்மா. ஆன்மாவின் தலைவன் இறைவன். இறைவன் ஆன்மாக்களைச் செலுத்தும் கோல் என்பது, மூலாதாரத்தையும் சகஸ்ர தளத்தையும் இணைத்து நிற்கும் முதுகந்தண்டாகும். இந்த முதுகந்தண்டின் அடிப்பாகத்தில் மூலாதாரச் சக்கரம் உள்ளது. மேல்பாகத்தில் சகஸ்ரதளம் உள்ளது. இதில் இடகலை பிங்கலை சுழுமுனை என்ற மூன்று நாடிகளும் உள்ளன. சிவன் உயிர்களை அறியாமையில் உள்ளபோது இடாநாடி பிங்கலா நாடி என்ற அவனது திருவடியால் நடத்துகிறான்.

ஞானியானபோது இரு நாடிகளின் தன்மையும் மாறிச் சுழுமுனா நாடி பிரகாசத்தை அடைகிறது. சுழு முனைக்கு அடியில் மூலாதாரத்தில் உள்ளவர் ஈசானரே தான் தலைவர். அவரேதான் சிரசில் சீவன் பக்குவமானபோது ஈசானராகப் பிரகாசிக்கிறார். மூலாதாரத்தில் இருந்த ஈசானரை மணிவாசகர் ஆரூரன் என்று குறிப்பிட்டுள்ளார். திருமந்திரத்தில் ''அதோமுக தரிசனம்'' என்ற தலைப்பில் இதை விளக்கியுள்ளார். இந்த இரு பகுதியையும் அறிதல் நலமென இங்கு ஆரூர் விளக்கம் கூறுகின்றேன்.

ஆர் கூர்மை ஆத்தி தேரின் அகத்துறு கதிரும் ஆகும்
— சூடாமணி நிகண்டு

அகத்துறு கதிர் என்பது சிவாதித்தனைக் குறிக்கும். சிவாதித்தனேதான், கீழ்த் துருவ நிலையில் அதோமுக சக்கரமான மூலாதாரத்தில் உருத்திர சோதியாக உள்ளார். அவரேதான் மேல் துருவத்தில் ஈசானனாகிறார். மூலாதாரத்தில் அவர் சீவர்களுக்கு இன்பம் பெருக்கிக் காம வாழ்வளித்தவர். அவரே ஈசானராக வெளிப்படும்போது காமத்தை அழித்து ஞானத்தைக் கொடுப்பவர். அதனாலே ஈசான மூர்த்தியே காமேசுவரன் காமேசுவரியாக மூலாதாரத்தில் விளங்குபவர்.

நீநந்து மூலா தாரத்தில் ஆனந்த
நிர்த்தம் இடும் இறைவி நின்னோடு
ஆனந்த தாண்டவம் விளைத்துநவ வடிவுபெறும்
ஆதி சிவனைப் பரவுவாம்
வானம் தொடுத்து உலகம் அடையப் படைத்து
இடும்இவ்
வகையின் புணர்ச்சி அலவோ?
ஞானங்கொள் அனை,தந்தை எனஉலகு தெளிவுற
நடத்துவது ஞான ஒளியே.
— ஆனந்தலகரி

நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்தீக் கலந்துட் சிவனென நிற்கும்
முந்திக் கலந்தங்கு உலகம் வலம்வரும்
அந்தி இறைவன் அதோமுக மாமே. 523

*அந்தி இறைவன் - அந்தத்தைச் செய்யும் உருத்திர சோதி.*

அதோமுகங் கீழண்டமான புராணன்
அதோமுகத் தன்னொடும் எங்கும் முயலுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
அதோமுகன் ஊழித் தலைவனு மாமே. 524

அதோமுக மாமல ராயது கேளும்
அதோமுகத் தாலொரு நூறாய் விரிந்து
அதோமுக மாகிய அந்தமில் சத்தி
அதோமுக மாகி அமர்ந்திருந் தானே. 525

*மூலாதாரத்திலுள்ள காமேசுவரன் காமேசு வரியைத் திருவாசகத்தில் ஆரூரன் என்ற பேரால் குறிப்பிடப்பட்டுள்ளது. அதை அறியச் சில பகுதிகள் கீழே கொடுக்கப்படுகின்றன.*

1. தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்.
— *கீர்த்தித் திருவகவல்*

2. ஆரூர் அமர்ந்த அரசே போற்றி.

3. திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேர் அறுத்தபின் யாவரையும் கண்டதில்லை
அருவாய் உருவமும் ஆயபிரான் அவன்மருவும்
திருவாரூர் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ.

4. பூங்கமலத் தயனொடுமால் அறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறாவெண் ணீறாடி
ஓங்கெயில்சூழ் திருவாரூர் உடையானே அடியேன்நின்
பூங்கழல்கள் அவையல்லா தெவையாதும் புகழேனே.

5. காருறு கண்ணியர் ஐம்புலன்
ஆற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண்
டாய் விளங்குந் திருவா

ருறைவாய் மன்னும் உத்தர
கோச மங்கைக் கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க
என்னை வளர்ப்பவனே.

6. ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய் - ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று.

7. காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில்
வாழுங் குயிலே
சீருடைச் செங்கம லத்தில் திகழுரு
வாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசம்
அறுத்தெனை யாண்ட
ஆருடை அம்பொனின் மேனி அமுதினை
நீவரக் கூவாய்.

குறிப்பு:

*''சீருடைய செங்கமலத்தில் திகழுருவாகிய செல்வன்''* என்பது சுவாதிட்டான சக்கரத்தின் ஆற்றலால் விளைந்தவன் என்றபடி. *பாரிடைப் பாதங்கள்* என்பது அங்குள்ளஇடாநாடி பிங்கலாநாடி. *ஆருடைய அம் பொனின் மேனி* மூலாதாரச் சக்கரத்தில் பொன்னொளியில் விளங்குபவன்.

நிலைபெறு சுவாதிட் டான
நின்சிவ அனலும்நீயும்
இலகிய தன்மை நெஞ்சத்து இறைஞ்சுவம்
உரைக்க மாட்டோம்
உலகம் அப்பார்வைச் செந்தீக்கு உருகில்
உன்கருணை பொங்கி
அலைஎறி அமுதப் பார்வை அளித்து
இனிது அருளும் அம்மே.

— ஆனந்தலகரி

கோகழி வந்துள்ள சில இடங்கள் கீழே தரப்படுகின்றன. அவைகளைக் கொண்டு கோகழியைத் தெளிவுபடுத்திக் கொள்ளவும்.

1. **கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க.**

2. **கோகழி மேவிய கோவே போற்றி.**

3. **இன்பந் தருவன் குயிலே ஏழுல**
   **கும் முழுதாளி**
   **அன்பன் அமுதளித் தூறும் ஆனந்தன்**
   **வான்வந்த தேவன்**
   **நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி**
   **மேல் வருவானைக்**
   **கொம்பின் மிழற்றும் குயிலே கோகழி**
   **நாதனைக் கூவாய்.**

4. **நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல**
   **எண்ணி எழுகோ கழிக்கரசைப் - பண்ணின்**
   **மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்**
   **கழியா திருந்தவனைக் காண்.**

5. **பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனும்**
   **கண்டாரும் இல்லைக் கடையேனைத் - தொண்டாகக்**
   **கொண்டருளுங் கோகழிஎங் கோமாற்கு நெஞ்சமே**
   **உண்டாமோ கைம்மா றுரை.**

*எல்லாச் சீவர்களுக்கும் சிவமேதான் குரு. அவரே விஞ்ஞானகலர்க்குக் காரணமாகவும் காரியமாகவும் விளங்குபவர். ''அவனே தானேயாகிய வந்நெறி யேகனாகி யிறைபணி நிற்க; மலமாயை தன்னொடு வல்வினையின்றே.''*

***— சிவஞானபோதம், 10சூத்.***

**ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள் வாழ்க:**

*ஆ - பசு; கமம் - போதல். அண்ணிப்பான் - மதுரிப்பான். சீவர்கள் கீழ்த்துருவமான மூலாதாரம்*

சிறப்புற்ற நிலையில் இந்திரிய வசப்பட்டுக் காம நிலையில் வாழ்ந்தனர். அப்போது சீவன் இறைவனை அறியாததுடன், தன்போக்கில், அகங்கார தத்துவத்தில் வாழ்ந்தது. சிவத்தின் கருணையால் மூலாதார சத்தி ஊர்த்துவ முகமாய்த் தொழில்படத் தொடங்கித் தனது சத்திகளுடன் சிரசையடைவதில், சிவமும் உடனிருந்து உறவு கொண்டு சீவர்களுக்கு ஓர் இன்பத்தை உண்டாக்குபவனாக உள்ளான். பசுத்தன்மை போதல் துன்பநெறியில் அல்ல, இன்பவுணர்வில் நிலை பெற்றுப் போகும்படி செய்தலேதான். அங்ஙனம் செய்யும் சிவத்தினது திருவடி வாழ்க.

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே.

— சிவபுராணம்

இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை அருள்மலை யாகவும்.

— கீர்த்தித் திருவகவல்

**ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க:**

தனது இயல்பான நிலையில் ஒன்றாகவும், சீவர்களாக விளங்குவதில் பலவாகவும் உள்ள சிவத்தின் திருவடி வாழ்க.

விளக்கம்: சூரியன் ஆகாயத்தில் ஏகனாக இருப் பினும், பல நீர்ச்சால்களில் காட்சியளிப்பவனாகவும் உள்ளான். பல நீர்ச்சாலில் காட்சியளிப்பதால், அவனுடைய ஏகத்துவங் கெடவில்லை. அதுபோல் சிவம் ஏகனாகவும், சீவ கோடிகளில் தனி வியக்தி போலவும் பிரதிபலித்துக் கொண்டுள்ளது.

**(சிவாதித்தன்)**

அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராம்அரு ணோதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே.

— *திருமந்திரம் 2001*

கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனும் மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே. *2002*

தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. *2003*

தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே. *2004*

**வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க:**

வேகம் - கடுமை, கதி, கோபம், சுக்கிலம், தீவிரம், விரைவு, நஞ்சு, வலிமை, கீழ் என்ற பல பொருள்களை

யுடைய ஒரு சொல்லாகும். இந்த வாக்கியத்திற்கு இதில் உள்ள பல பொருள்கள் ஏற்புடையனவாகும். இத்தன்மைகளிலெல்லாம் இறைவன் கலந்து சீவர்களின் வேகத்தைக் கெடுத்து மேல்நிலைக்குக் கொண்டு செல்லுவதால் அத்தகைய இறைவன் திருவடியின் செயல் வெற்றி பெறுக.

**விளக்கம்:**

மனம் சிதாகாயத்தில் சிவவொளியில் கலந்து உறைவதால் சாந்தியை அடைந்து நிற்கும். அதனால் புறத்தே செல்லும் அதன் கடுமை அகற்றப்படுகிறது. அதன் நிலை மாற்றம் அடைகிறது. சாந்தம் உள்ளவரிடம் கோபமில்லை. சிவயோகியினிடம் சுக்கில நீக்கமில்லை. மனத்தின் விரைவு தடுக்கப்படுகிறது. மனிதனின் மனத்தில் காமமே பெரிய நஞ்சு. சிவயோகியிடம் காமமில்லை. உடலின் வலிவு குறைந்துவிடும். தேகத்தில் கீழ்நோக்குங் காரியங்கள் பல உள்ளன. உண்ணும் உணவு, அருந்தும் நீர், புகும் காற்று, மலநீக்கம், சிறுநீர் நீக்கம், விந்து நீக்கம் என்பவைகள் எல்லாம் மனிதன் பிரகிருதி வசப்பட்டபோது நிகழ்பவை. சிவத்தோடு பொருந்தித் துரிய பூமியில் உறைபவனிடம் இவைகள் ஒன்றும் நிகழா. மனிதனின் கீழான சுபாவங்களும் கெட்டுப் பண்புடையவனாய் அமைவான்.

**பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய் கழல்கள் வெல்க:**

பிஞ்ஞகம் - தலைக்கோலம்; பிஞ்ஞகன் - தலைக் கோலத்தையுடையவன். சீவர்களது சிரசின் மேலுள்ள சிதாகாயத்தில் தன்னை இருள் எனக் கண்டதே ஆன்ம ரூபம் என்று சித்தாந்த சாத்திரம் கூறும். இந்த இருளை அகற்றச் சிவத்தின் ஒளி புகுவதை அருள்வீழ்ச்சி (சத்திநிபாதம்) என்பர். இது யோகியின் சிரசை அழகு படுத்துவதாக உள்ளது. அதனால் சீவனின் பிறப்பறுகை அமைகிறது. அத்தகைய அருளைப் பெய்யும் பிஞ்ஞகனது திருவடி வெற்றி பெறுக.

**தத்துவா தீதம் தன்னில்மைக் குழம்பினை**
**ஒத்திடும் மலஇருள் உறுவது கேவலம்**

அற்படு கேவலத்து அந்தகா ரத்துஉயிர்
நிற்பது கேவல நிலையது ஆகும்.

இருண்மலம் நீங்குதற்கு எண்ணுதல் திரோதம்
அருள்வடி வான அவதரம் ஆகும்;
அங்குஉயிர் காண்பதற்கு ஆதரவு உறும்இடம்
சங்கரன் இச்சா சத்தியின் தரிசனம்
மருஉயிர் வெளிப்பட வல்இருள் நீக்கம்
தருவது கிரியா சத்திய தாகும்;

அந்த ஆருயிர் தனக்குஅறிவின் வியாத்தி
தந்தது ஞான சத்தி யாகும்;
முழுதுநின் றுணர்த்திடும் மூவகைச் சத்தியும்
நழுவிநின் றிடுவது ஞானா தீதம்.

— *சிவானந்த போதசாரம்*

பொறிகரணங் களைஉயிர்போற் போதம்போ தத்தைப்
பொருந்திநடத்துஞ் செயலப் போதஉணர்வுணர்ந்தே
அறிவினது செயலோநாம் எனஉணர்வுற் றிருப்ப
அப்போது விளக்கெனவும் அருணன்மதி எனவும்
கறைவிடியுங் காலமென ஒளிவந்துற் பவிக்கும்
காரொளியே ஞானமாம் கலைஞான விந்து
அரியசபை பாசவொளி பிராசாத ஒளிகள்
அல்லாத திவ்வொளியென்று அறிந்துன்னிப் பாரே.

— *தத்துவப் பிரகாசம்*

இப்பொருளே ஞானதரி சனந்தான்என் றிங்கு
எக்கருவி யும்நீக்கி இலங்குயிரின் செயல்கள்
அப்பொருளன் றென்றேயா வையுங்கூ டாமல்
அவற்றைஅகன் றவைவசமற் றவத்தையிற்கூ டாமல்
தப்பாமல் நெதிபண்ணத் தர்ப்பணத்தைத்
தான்விளக்க வருமொளிபோல் தலைப்படுமே ஞானம்
ஒப்பறவே இப்பொருளின் உறநிற்பை யாயின்
உன்செயலற் றொளிஞானம் உனைக்கவருங் காணே.

— *தத்துவப் பிரகாசம்*

*தேகத்தைச் சூழ உள்ள ஆகாய வெளியே சீவனது வடிவாகும். இது கோடிக்கணக்கான ஒளி அணுக் களால் ஆயது. இவ்வணுக்கள் இருளாயிருப்பது அஞ்ஞானம். ஒளியாய் மாறுவதே ஞானம். இவ் வொளியுள் சிவமுமுள்ளது.*

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறுநூ றாயிரத் தொன்றே.

—***திருமந்திரம் 2011***

ஏனோர் பெருமைய னாயினும் எம்மிறை
ஊனே சிறுமையின் உட்கலந் தங்குளன்
வானோர் அறியு மளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே. ***2012***

உண்டு தெளிவன் உரைக்க வியோகமே
கொண்டு பயிலுங் குணமில்லை யாயினும்
பண்டு பயிலும் பயில்சீவ னார்பின்னைக்
கொண்டு சிவனுருக் கொள்வர் கருத்துளே. ***2013***

மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்
தாய குருவரு ளாலே யதில்தூண்ட
ஓயும் உபாதியோ டொன்றியொன் றாதுயிர்
ஆய துரியம் புகுந்தறி வாகவே. ***2014***

**புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க:**

*புறத்திலே சிவதரிசனம் செய்ய ஆவலுற்றுப் பல தலங்களுக்குச் சென்று வழிபடும் பக்தி காண்டிகள், தம்முள் உள்ள சிவத்தை அறியமாட்டாதவராகையால் சிவமும் விரும்பும் வண்ணம் தூரத்திலேயே இருந்து அருள் பாலிப்பவனாக உள்ளான். தூரத்தில் உள்ள வரைத் தன்பால் இழுக்கும் சிவத்தின் திருவடிகள் வெற்றி பெறுக. இத்தகையோர் புராண நம்பிக்கையின் பேரில் தலயாத்திரை செய்பவராவர். இவர்களுக்கு ஒரே இறைவன் பலவாறாக விளங்குகிறான் என்ற ஞானம் உதியாமையே இவர்கள் யாத்திரைக்குக் காரணம்.*

**கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க:**

முன்னது சரியை பற்றியது. இது கிரியை வழி நிற்போரைப் பற்றியது. கிரியை வழி நிற்போர் புறத்தே மூர்த்தி, யந்திரம், யாதேனுமொன்றை எழுந்தருளப் பண்ணிப் பூ, புகை, விளக்கு, நீர், திருவமுது இவைகளைக் கொண்டு பூசித்தலாகும். இதற்கு உரிய மந்திரங்களுடன் பொருத்தி வழி படுவர். இவ்வாறு செய்வதில் செய்பவருக்கு மனமகிழ்வு உண்டாகிறது. சிவம் இவர்களை விட்டகலாததை இவர்கள் உணராவிடினும் இவர்கள் மகிழ்ச்சியில் இறைவனும் கரந்துள்ளான். அத்தகைய சிவத்தின் திருவடிகள் வெற்றி பெறுக. இம்முறையிலே அகவழிபாடு செய்வதும் உண்டு. அவர்கள் பல பொருள்களைச் சிருஷ்டித்துக் கொண்டு செயலைச் செய்துகொண்டும் உள்ளவர். சங்கற்பம் விட்டர் அல்லர் என்பதை அறியவும்.

காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.

— திருமந்திரம் 1848

**சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க:**

முன்னர்க் கூறியபடி கோகழியாண்ட குரு மணியை அறிந்து சிந்தனையை அவன்பால் செலுத்து பவரை உயர்த்தச் சிவம் திருவுளங்கொண்டு அவன் வருகையை ஒலியால் உணர்த்தும் நாத தத்துவத் தலைவனான சதாசிவத்தினது திருவடி வெற்றி பெறுக.

'சிரங்குவிதல்' என்பதற்கு 'சிந்தனையால் வழி படல்' என்று பொருள். இங்கு முன்னர்க் கூறிய முறையில், சிவ ஒளியைக் கண்டு அதிலே தியானத்திருத்தலே சிரங்குவிதலாகும். அவ்விதம் இருப்பின் சிவம் தனது வருகையை நாதத்தால் உணர்த்தும். இந்த நாதமே தியானப் பொருளாவதில் நாதாந்தம் என்ற சமாதியை அடைவர்.

இதை ஆகாய சம்மியம் அல்லது நாதசம்மியம் என்பர். சாதகனுக்கு மனவெளியில் ஒளியின் பெருக்கமோ, நாதமோ கிட்டுவதைப் 'பாத தரிசனம்' என்பர். ஒளிஞானமோ, ஒலிஞானமோ பெற்றவரைச் சிவம் ஓங்குவிக்கும். இதனை அருளின் வழி நிற்றல் என்று கூறுவர்.

சீர் - ஒலி. சீரோன் - ஒலிக்குத் தலைவன், சதாசிவம். சத்தம் ஆகாய பூதத்தின் இயல்பு. அதன் அதிபர் சதாசிவர்.

''சத்தத்தினுள்ளே சதாசிவங்காட்டி'' என்பது விநாயகரகவல்.

சிரங்குவிதல், தலைப்படுதல் என்பன ஒரு பொருளுடையன ஆகும்.

தலைப்பட் டிருந்திடத் தத்துவங் கூடும்
வலைப்பட் டிருந்திடும் மாதுநல் லாளும்
குலைப்பட் டிருந்திடுங் கோப மகலுந்
துலைப்பட் டிருந்திடுந் தூங்கவல் லார்க்கே.

— திருமந்திரம் 629

புலைய னேனையும் பொருளென நினைந்துன்
அருள்பு ரிந்தனைபுரிதலுங் களித்துத்
தலையி னால்நடந் தேன்விடைப் பாகா
சங்கரா எண்ணில்வா னவர்க் கெல்லாம்
நிலையனே அலைநீர் விடம்உண்ட
நித்தனே அடையார் புரம்எரித்த
சிலையனே எனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

— திருவாசகம்

மணிவாசகர் தலையினால் நடந்து சென்றதாக அவரைப் பற்றிக் கூறும் புராணம் ஒன்றும் கூறவில்லை என்பதை அறிக.

கண்ட யோகப் பயனாய் விளைந்த மணியோசை
கடலோசை யாழோசை செயகண்டி யோசை

வண்டோசை மதயானை பிளிறோசை நாத
வகையோசை கொம்போசை வந்து தோன்றில்
உண்டான பரையோகம் பரையில் அதீதந்தான்
ஓசையெலாம் அழியஅதில் உருகியிருப் பதுவாம்
மண்டுசிவ தரிசனம்இக் கேடுபடா விமல
வளரொளிக்குள் ஒளியாகச் சிவத்தைக்காண் பதுவே.

— *சித்தாந்தசாரம்*

இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந் துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய் - அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத்தோங்கும்
பருமிக்க நாதப் பறை.

— **திருத்தசாங்கம்**

நாத முடிவிலே நல்லாள் இருப்பது
நாத முடிவிலே நல்யோகம் இருப்பது
நாத முடிவிலே நாட்டம் இருப்பது
நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே.

— **திருமந்திரம் 609**

மாதவர் எல்லாம் மாதேவன் பிரான்என்பர்
நாதம தாக அறியப்படு நந்தி
பேதஞ்செய் யாதே பிரான்என்று கைதொழில்
ஆதியும் அந்நெறி யாகிநின் றானே. — *1542*

**ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி**
**தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி:**

*சிவமே உலகிலுள்ள சகல உயிர் வர்க்கங்களுக்கும் தலைவன் ஆனதுபற்றி ஈசன் என்று கூறப்பட்டது. அவனது திருவடிகளை வணங்குகின்றேன்.*

*சீவவொளி நிலைபெறச் சிவவொளி யாவற்றிலும் கலந்துள்ளது. சீவனது இருளைப் போக்கிச் சீவனைப் பேரொளியாக மாற்றுவது சிவவொளி வியாபகத் தினால்தான் நடைபெறுகிறது. தந்தையின் வீரிய அணுவே மகன் பிறவிக்குக் காரணமாக உள்ளது. அதுபோலச் சீவன் சிவரூபம் பெறுவதற்கும், சீவ நிலையை அடைவதற்கும்*

சிவவொளி அணுக்களே காரணமாதல்பற்றி எந்தை என்றார். அத்தகைய சிவனடியை வணங்குகின்றேன். ஒளி உருவாலான சிவத்தின் திருவடிகளை வணங்கு கின்றேன். சிவம் பேரொளி வடிவு. அவ்வொளி எங்கும் நிறைந்தது. அவ்வொளியே நிறை அறிவு பெற்றது. அத்தகைய ஒளி நிலையை மனிதன் அடைய முயல்வதே சிவயோகம். எல்லாத் தேவர் களும் ஒளி உருவினர்கள் ஆயினும், சிவவொளியின் உதவியாலேதான் எல்லாத் தேவர்களும் உள்ளார்கள். மனிதன் அவ்வொளியில் ஒரு சில அணுக்களுடன் உள்ளான்.

அவ்வொளி சமஷ்டி என்றும், வியஷ்டி என்றும் இரு பிரிவாக உள்ளது. சமஷ்டி என்றால் பல வியஷ்டிகளைத் தன்னுள் கொண்டது. ஒரு மரம் என்றபோது அதற்கு உள்ள ஒரு பெயர், குணம் சிறப்பாக விளங்குகிறது. தோப்பு, காடு பொதுமையில் விளங்குகின்றது. அது போலச் சிவத்தின் ஆளுகையில் சமஷ்டியிலும் வியஷ்டியிலும் பல தேவர்கள் உள்ளனர். அவ்வருக்கத்தினரின் ஆட்சியால் உலகம் நடைபெறுகின்றது. அவ்வருக்கத்தின் பெயராலேயே தேக தத்துவங்களுக்கும் பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவன், சூரியன், சந்திரன், ஆத்மஒளி என்று பிரித்து, அவைகளின் தன்மையையும் அறிந்து மனித சமுதாயம் சிறப்புறச் சமயக் கொள்கைகளையும் முன்னோர் விளக்கியுள்ளனர். ஆகாயமே ஏனைய பூதங்களுக்குப் பிறப்பிடமாகவும் தாங்குமிடமாகவும் உள்ளது. ஆகாயத்திலேதான் ஒளியும் இருளும் உள்ளன. ஒளி உள்ளபோது இருளில் உள்ள பிராந்தி ஞானமில்லை. இருளில் செயற்படும் வானவர்களும் உள்ளனர். அவர்களை அசுரர் என்றழைத்தனர். ஒளியில் செயற்படும் தேவவர்க்கத்தினர் மனித சமூகத்திற்கு நன்மையைச் செய்பவர். இருளில் உள்ள வானவர்கள் தீயவழியில் நிலைபெற்றுள்ளனர். மனிதனின் குணத்திற்கேற்ப அத்தகைய தேவர்கள், மனிதரை இயக்கி மனிதர்கள் இன்பம் அடைவதைக் கண்டு உடனிருந்து மகிழ்வுறுவார்கள். துன்பம் விளைவிக்கத் தூண்டும்

வர்க்கத்தையும், இன்பக் களிப்பில் செலுத்தும் வர்க்கத்தையும் விட்டுச் செல்ல உபாயம் சிவ ஒளி ஒன்றேதான் எனச் சைவம் அறுதியிட்டது. அதன் காரணம் சிவத்தினிடமும் நல்லவை கெட்டவை இரண்டையும் அடக்கி நிற்கும் நிர்க்குணம் சிறப்புற்றிருத்தலேதான். தாமத குண உருத்திரனிலும், சத்துவ குண விஷ்ணுவிலும், ராஜஸ குணப் பிரமனிலும் வேறாகவும், இவர்கள் வியாபகத்திற்குக் காரணமாகவும் சிவம் விளங்கும். அகண்டத்தில் பேரொளியாக விளங்குவதே சிவம் என்பதை அறிக. அதனாலேதான்,

"விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்
விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை இலாதானே"

"மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே"

என்றார். மற்றும் புணர்ச்சிப்பத்து, கோவில் திருவிருத்தம் பார்க்க விளங்கும். அத்தகைய சிவமும், அசுரரும் தேவரும் மனிதர்களிடம் உள்ளனர்.

நானென நீயென வேறில்லை நண்ணுதல்
ஊனென வூனுயிர் என்ன வுடனின்று
வானென வானவர் நின்று மனிதர்கள்
தேனென இன்பந் திளைக்கின்ற வாறே.

— திருமந்திரம் 1788

ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐயனே யென்றுன் அருள்வழி இருப்பேன்
நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே
நாத னேஉனைப் பிரிவுறா அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தம் தேவர் பிரானே
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

— செத்திலாப்பத்து, திருவாசகம்

குணமற்ற நிலையிலிருந்தே குணங்கள் பிரிகின்றன. குணத்தைப் பக்குவம் செய்வதில் ஞானம் அமையும் என்பது பக்திநெறி. மனத்தைப் பண்படுத்துவதில் ஞானநெறி அமையும் என்பது ஞானநெறி. சிவம் குணத்தையும் கடந்தது. மனத்தையும் கடந்து விளங்குவது. மனிதன் மனத்தை உடையவன். மனத்தைத் தொழிலினின்றும் நிறுத்தியவன் தேவன் ஆகிறான். மனித சமுதாயம் சீர்கேடடைவதற்கும் செம்மையுறுவதற்கும் எண்ண அலைகளே காரணம் என்பதை, மணிவாச்கர் திருப்பள்ளியெழுச்சியில் ''எண்ணகத்தே உலகுக்கு யிரானாய்'' என்றார். அச் சோப்பத்தில், ''எண்ணமிலா அன்பருளி எனை யாண்டிட் டென்னை யுந்தன் சுண்ண வெண்ணீறணிவித்துத் தூநெறியே சேரும் வண்ணம் அண்ண லெனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே'' என்றார். மனிதனுடைய தூலதேகம் பூதமயமானது. சூக்குமதேக அறிவில் ஒளியை நிலைநிறுத்துவதில் இருளின் காரியமான மாயையும் அதன் வலிவும் அகலும் என்றபடி.

**நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி**
**மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி:**

சிவம் எல்லா உயிர்களிடத்தும் அன்புகொண்டு பொருந்தியே உள்ளது. அப்படியிருப்பினும் சீவர் களின் மலத்தினால் அவன் தாக்கப்படாது விளங்கு பவன். அத்தகைய சிவத்தின் திருவடியைப் போற்றுகின்றேன். மலத்துடன்கூடிய சீவர்களுடன் பொருந்தியிருந்தாலும், அவனை நினைக்கும் சீவர்களின் பொய்த் தோற்றத் தையுடைய பிறவித் தளையை அறுக்கும் தலைவனது திருவடியைப் போற்று கின்றேன்.

**விளக்கம்:**

ஓர் உதாரணத்தால் இதை விளக்கலாம். கடலில் நீர், உப்பு, ஆகாயம் எல்லாம் உள்ளது. கடலில் உப்புத் தன்மை கடலைச் சார்ந்த நீரையேதான் பற்றியுள்ளது. கடல் நீர் ஆவியானபோது உப்பு ஆவியாக மாறவில்லை. உப்பினது

கனம் ஆகாயத்திற்குப் பரவக் கூடியதாக இருக்கவில்லை. அதுபோல மாயையின் காரியம், சீவன் இருள் வயப்பட்டபோதுதான் பிறப்பை உண்டாக்கிக் கொண்டிருந்தது. தேசோ மயனான சிவம் மாயையைக் கடந்ததாய் மாயையின் ஊடே விளங்குவதை ''நேயத்தே நின்ற நிமலன்'' என்றார். நேயம் - அன்பு. சிவவொளியைக் கண்டு அதில் நிலைபெற்றவர்க்கு 36 தத்துவங்களின் செயலும் விடுபடும். அதனால் பிறவாமையை அளிக்கும் மன்னன் திருவடி போற்றி என்றார். நிமலன் - மலங்களால் தீண்டப்படாதவன்.

**சீரார் பெருந்துறைநந் தேவன் அடிபோற்றி:**

சீர் - ஒலி; ஆர் - அகத்தில் உள்ள ஒளி. நாத மயமாகவும் தூல சூக்கும தேகங்களுக்கு ஒளியாகவும் விளங்கும். சிரசில் உள்ள சகஸ்ரதளத்தில் உறையும் ஒளி வடிவான நம்முடைய சிவத்தின் திருவடியைப் போற்றுகின்றேன்.

**விளக்கம்:**

ஆத்ம தத்துவம் 24ம் தேகத்துடன் முடிவுறும். வித்தியா தத்துவம் ஒளியுடன் முடிவுறும். சிவ தத்துவம் சமாதியுடன் முடிவுறும். அதனால் 36 தத்து வங்களும் பெருந்துறைச் சிவனிடம் லயமடையும்.

இக்கருத்தை நன்கறிந்துகொள்ளச் சித்தாந்தசாரம் என்ற ஒரு நூல் இங்கு ஆதாரமாகக் கீழே தரப் பட்டுள்ளது. சிவத்தைப் பெறச் சீவ முயற்சி வேண்டும். சீவ முயற்சி பூர்த்தியாகச் சிவத்தின் அருள்வேண்டும். இந்த இரு நிலைகளும் அமையச் சைவ சமயம் பல படிகளைக் கண்டு விளக்கியுள்ளது. இந்த நுட்ப விசாரணை சரியை, கிரியை, யோக, முயற்சியில் உள்ளவர்க்குத் தேவைப்படாத விஷயம். அவர்களுக்கு எடுத்துக் கூறினாலும் அறிந்து கொள்ளும் மனப்பக்குவம் இல்லாதவர் ஆவர்.

1. பூதப்பழிப்பு
2. பொறியற நின்றுணர்தல்
3. அந்தக் கரணசுத்தி

4. கலாதிஞான நிராகரணம்
5. சுத்த தத்துவ தூடணம்
6. பிராணவாயு நீக்கம்
7. தத்துவ ரூபம்
8. தத்துவ தரிசனம்
9. தத்துவ சுத்தி
10. கேவலம்
11. கேவல தரிசனம்
12. கேவலாதீதம்
13. ஆன்மரூபம்
14. ஆன்ம தரிசனம்
15. ஞான தரிசனம்
16. ஞானாதீதம்
17. பரை தரிசனம்
18. பரை யோகம்
19. பரை போகம்
20. பரையில் அதீதம்
21. சிவ தரிசனம்
22. சாக்கிராதீதம்

**சுத்தாவத்தை**

23. சுகரூபம்
24. சுகாதீதம்
25. சிவப்பேறு
26. ஆன்மசுத்தி
27. பரமானந்த தரிசனம்
28. பரமானந்த யோகம்
29. பரமானந்த போகம்
30. ஆன்மலாபம், ஆனந்தமேலீடு.

திருப்பெருந்துறை விஷயத்தை உணர்ந்துகொள்வதற்குச் சில பகுதிகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

என்றும் அருள் ஆன்மாவை நடத்தல் கேளாய்
இந்திரியங் களையும்அந்தக் கரணங்கள் தமையும்
நின்றறிய உயிருணர்த்த அறிந்து உடனாய்நிற்கும்
நெறிபோல வுயிர்ப்போதம் அறிவிக்கவறிதல்

அன்றியே சிவபோத முடனாய்நின் றுணர்தல்
   ஆதலால் அருளன்றிநமக் கோர்செய லிலைநாம்
இன்றளவும் நமது தொழில்என்ற தெல்லாம் அருளே
   என்றுருகி அவ்வருளைப் பிரியாமல் இருநீ.
— *சித்தாந்தசாரம் - 18*

அறிவு பற்றிநீ யிருந்தால் விடியற் காலத்
   தருண வுதயம் போலஅரவு கதிர்விழுங்கிப்
பிறியுமா போலவொளி மெல்ல மெல்லப்
   பெருகுங்காண் மனக்கவலை அற்றுக் காண
வுறுதிரோ தாயிமறைத் துனக்குக் காட்டும்
   ஒளிஞானம் தரிசனமாம் அசபைவிந்து நாதம்
பெறும் ஆதாரங்கள் பிராசாத வேதாகமங்கள்
   பின் யோகத்தால் ஒளிகள் பெறின் பிறப்பாய் விடுமே. *19*

உலவிய ஞானாதீதம் சிவஞா னத்தின்
   உள்ளொ டுங்கிஅதன் வசமாய் உன்விவகாரம்
பலவுமற இருத்தலாம் பரைதரி சனங்கேள்
   பகர்ஞானம் மிகுந்தத னுட்புக்க வொளியெங்கும்
நிலவியே பொதுவாக நிறைந்துசெழுங் கதிரோன்
   நீடொளிஉச் சிக்காலத்து எங்கும்நிரந் தரமாய்க்
குலவுதல் போல்புரை யறநின்றி டுதலாகும்
   கூறிய இப்பரை வியாத்தம் புகலக் கேளே. *20*

சாற்றுபரை திரோதைமுதல் அனேகம் அருவுருவாஞ்
   சத்திகளாய்ச் சிவனுக்கு வடிவாகிக் கரணம்
தேற்றுகுணம் இந்திரியந் தொழில்க ளாகிச்
   சேர்ந்த சாங்கோ பாங்கமாகி யிருப்பிட மாய்ப்
போற்றரிய சரீரிக் கிவ்வுலகமாய் அளிக்கும்
   பொருளாகிப் பீடலிங்க மாதல்பரை வியாத்தம்
மாற்றரிய பரையில் உரையாது நெகிழாமல்
   வசமாகத் தனைமறைய நிற்றல் பரை யோகம். *21*

கண்டயோகப் பயனும் விளைந்த மணியோசை
   கடலோசை யாழோசை செயகண்டி யோசை
வண்டோசை மதயானை பிளிறோசை நாத
   வகையோசை கொம்போசை வந்து தோன்றில்

உண்டான பரையோகம் பரையில் அதீதந்தான்
ஓசையெலாம் அழிய அதில் உருகியிருப் பதுவாம்
மண்டுசிவ தரிசனம்இக் கேடுபடா விமல
வளரொளிக்குள் ஒளியாகச் சிவத்தைக்காண்பதுவே.

*சித்தாந்த சாரம் 22*

இந்தத் தத்துவத்தை உலகினர் அறிந்து உய்யவே திருப்பெருந்துறை நிறுவப்பட்டுள்ளது. இங்கு அத்தல விளக்கம் அறிதல் நலம் எனக் கருதி விளக்குகின்றேன். தலவிருக்ஷம் குருந்த மரம். குருந்து என்றால் காட்டு எலுமிச்சை, காட்டு நாரத்தை, குருத்து, குழந்தை என்ற பொருள்கள் உள்ளன. முதுகந்தண்டின் மேல்கோடிக்கு முகுளம் என்று பெயர். அதைப் பிடரிக்கண் என்று கூறுவர். அங்கிருந்தே அறிவுருவாக ஆன்மா ஐம்புலனறிவையும் அறிந்து கொள்ளுகிறது. இது குருந்து போன்ற பிரதேசத்தில் இருப்பதை உணர்த்த அந்தப் பெயருடைய ஒரு மரத்தைத் தலவிருக்ஷமாக்கி உள்ளனர்.

உருவம் பற்றாத அறிவொளியினால் வழிபாடு செய்ய வேண்டும் என்றே சிவபீடமும் சத்திபீடமும் அமைத்துள்ளனர். எவ்வித உருவமும் அங்கு வைக்கவில்லை. ஆகாயத்தினிடம் ஒரு சூக்கும ஓசை இயல்பாக உண்டு. கைலாயம் சென்று வந்தவர்கள் அங்கு ஒரு மெல்லிய நாதம் இருப்பதைக் கூறுகின்றனர். மணிவாசகர்,

பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலையுயர் கிழவோனே.

*— கீர்த்தித் திருவகவல்*

ஒளிவடிவான சுழுமுனை நாடியிலே ஒலிக்கின்ற அடையாளமான சங்கொலி அல்லாமல், மற்ற வாத்திய ஓசைகள் ஒன்றும் திருப்பெருந்துறையில் கிடையாது. பரவெளியில் உமைகாண நடிப்பதாக அவ்வூர்ப் புராணமும் கூறுகின்றது.

அண்ட பிண்டம் என்று உலகத்திலே இரண்டு பொருள்கள் உண்டு. இவை இரண்டிலும் தத்துவங்கள்

சமமாக விளங்கும். அண்டமாகிய இந்த உடம்பிலே மூலாதாரத்திலிருந்து எழுந்த சுழுமுனைநாடி நிறைந்து மின்னல்போலப் பிரகாசிக்கிற ஒளியாகி, அந்த ஒளியிலே திருவைந்தெழுத்துகளால் உணர்த்தப்படும் ஐந்து வகை ஒளிகளும் ஒன்றிலொன்று அடங்குமுறையாலே முடிவிலே ஒன்றாக நிற்கக் குழலோசையாக நிற்கின்ற அவ்வோசை தானும் அடங்கி நின்ற இடம் எதுவோ? அதுவே இறைவன் திருநடனம் செய்யும் சிதம்பரம் என்ற ஆகாயக் குறிப்புத் தலமாகும். அதுபோலவே திருப்பெருந்துறையும் ஆகாயக் குறிப்புத் தலமாகும். சிதம்பரம் உருவத்தால் உணர்த்தப் பட்டது. இது உருவமற்று உணர்த்தப்பட்டுள்ளது. யோகம் என்ற சொல் சேர்க்கை என்ற பொருளையுடையது. இங்கு சீவனும் சிவனும் சேருவதை யோகமாக்கப்பட்டது. சீவன் சிற்றொளியுடன்கூடியது. இறைவன் பேரொளி. இரண்டும் ஒன்றாவதில் சிவயோகம். அவ்வொளி அணுக்களும் சிந்தனையால் அகண்டமும் அண்டமும் உரசுவதால் இந்த நாதம் இயல்பாக உண்டாகிறது.

மற்ற ஓசை செய்கையினால் அமைவதுபற்றி இதற்கு அநாகதம் என்று பெயர் வைத்துள்ளனர். ஆகதம் என்றால் அடித்தல். அன்+ஆகதம் = அடிக்காமல் எழும்பும் ஓசை என்று பொருள். மனிதனின் தூல உடலில் ஓர் ஓசை இயல்பாக இருப்பதை அநாகதம் என்று புறநிலையில் உள்ளவர் கொண்டனர். யோகிகள் ஆகாயத்தினிடம் ஒரு நுண்ணோசை உள்ளது என்று அறிவதில் ஆகாயபூத நாயகரான சதாசிவரை அறியலாம் என்று தியானத்தில் நாதத்தைக் கண்டனர். இதுவேதான் தியான யோகம். இது எவ்வித மூச்சுப் பயிற்சியும் இல்லாதது என்பதை அறியவும். தியானம் என்ற தலைப்பில் திருமந்திரத்தில் உருவாய சத்தித் தியானம் என்றும், உருவமற்ற அருவத் தியானத்திற்குக் குரு மண்டலத் தியானம் என்றும் விளக்கியுள்ளனர். இதை ''பரத்தியான முன்னுங் குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே'' என்றார். — திரு.598.

**கண்ணாக்கு மூக்குச் செவி ஞானக் கூட்டத்துட்**
**பண்ணாக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு**

அண்ணாக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே. 599

ஒண்ணா நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணாமல் நின்றது பார்க்கலு மாமே. 600

எண்ணாயிரத் தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதினைக் கண்டறி வாரில்லை
உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினாற்
கண்ணாடி போலக் கலந்து நின்றானே. 603

நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமும் இல்லை சிவனவ னாமே. 604

மணிகடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே. 606

கடலொடு மேகங் களிறொடும் ஓசை
அடவெழும் வீணை அண்டரண் டத்துச்
சுடர்மன்னு வேணுச் சுரிசங்கின் ஓசை
திடமறி யோகிக்கல் லாற்றெரி யாதே. 607

*இந்த நாதம் உண்டாவதற்கு நீண்டகால சாதனம் தான் காரணம். காணாத திருவுருவுக்குத் திருவடி ஏது என்பர். அவனது ஒளிக்கிரணமும் அணுக்களின் உரசலில் உண்டாகும் நாதமும்தான் அவனது திருவடிகள். அத்தகைய ஒளியும் நாதமும்தான் காணப்படும் உலகத்தைப் படைப்பதும், கருதப்படும் சிந்தனையில் வெளிப்படுவது மாகும். இந்தப் பூசை முறையை அறிவதில் உண்மை ஞானம் உள்ளது. திருமூலர் குருபூசை என்ற தலைப்புக் கொடுத்து விளக்கியுள்ளார்.*

ஆகின்ற நந்தி யடித் தாமரை பற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையும்
ஆகின்ற ஆதார மாறா றதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுவன் யானே. 1847

கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேர வொண்ணாதே. 1848

மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்
ஆவயின் ஞானநெறி நிற்றல் அர்ச்சனை
ஓவற வுட்பூசனை செய்யில் உத்தமஞ்
சேவடி சேரல் செயலறல் தானே. 1849

உச்சியுங் காலையும் மாலையும் ஈசனை
நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்
நச்சுமின் பேர்நந்தி நாயக னாமே. 1850

புண்ணிய மண்டலம் பூசைநூ றாகுமாம்
பண்ணிய மேனியும் பத்துநூ றாகுமாம்
எண்ணிலிக் கையமிடிற் கோடி யாகுமாற்
பண்ணிடில் ஞானியூண் பார்க்கில் விசேடமே. 1851

இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை
வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்
இந்துவும் பானுவும் இலங்காத் தலத்திடை
வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே. 1852

இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவும் நாதமு மாகிமீதா னத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே. 1853

மனபவ னங்களை மூலத்தான் மாற்றி
அனித வுடற்பூத மாக்கி யகற்றிப்
புனிதன் அருள்தன்னிற் புக்கிருந் தின்பத்
தனியுறு பூசை சதாசிவற் காமே. 1854

பகலும் இரவும் பயில்கின்ற பூசை
இயல்புடை யீசர்க் கிணைமல ராகப்
பகலும் இரவும் பயிலாத பூசை
சகலமுந் தான்கொள்வன் தாழ்சடை யோனே. 1855

இராப்பகல் அற்ற இடத்தே யிருந்து
பராக் கறஆனந் தத்தேறல் பருகி
இராப் பகலற்ற இறையடி யின்பத்
திராப்பகல் மாயை இரண்டிடத் தேனே. 1856

மூலாதாரத்தில் ஒளி காணும்போது திருவாரூர் என்றும், இருதயத்தில் ஒளி காணும்போது சிதம்பரம் என்றும், சிரசில் ஒளி காணும்போது திருப்பெருந்துறை என்றும் உருவகிக்கப் பட்டுள்ளது. இவை மூன்றும் உண்மையில் ஞான குருவினிடம் சீடன் பெறும் மூன்று தீக்கையின் பரிபாஷைப் பெயராகும். இருதயம் சூரியன் ஒளியைக் கொண்டது. மூலாதாரம் அக்கினி கண்ட ஒளியையுடையது. சிரசு சந்திரகண்ட ஒளியையுடையது. இவ்வொளியே சிரசைக் கடந்தும் விளங்குவது. இவ்வறிவே சாக்கிராதீதம் சென்று மேல் உள்ள நிலைகளை அறிய உதவுவது. சித்தாந்தம் உணர்த்தும் 21 நிலை சிவதரிசனம் என்பதை இங்கு அறிந்து கொள்ளவும். 'நம் தேவன்' என்ற சிவம் உலகில் வாழும் சகல மக்களுக்கும் உரிமை யுடையவராவர்.

எல்லோரும் இறைஞ்சு தில்லை
அம்பலத்தே கண்டேனே.
— கண்டபத்து, திருவாசகம்

**ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி:**

ஆர்தல் - அனுபவித்தல், பொருந்தல், மகிழ்தல். தூல வடிவாக உள்ள புறப்பொருளில் பொருந்திச் சாதாரண மனிதன் மனமகிழ்வை அடைகிறான். சிவம் புறப்பொருள் போலப் புறத்திலிருந்து இன்பம் தருவதில்லை. சாதகன் நினைத்தபோது அவனது அகவுணர்ச்சியில் புலப்பட்டுத் தேகத்தில் இன்பம் அளிக்கின்றான். அவ்வாறு பொருந்து

தலின்றியே சாதகனுக்குப் பெரிய மலைபோன்ற இன்பத்தை அளிப்பவனாக உள்ளவனே உன்னைப் போற்று கிறேன் என்று கூறியுள்ளார். ஆராத இன்பம் - பொருந்தி அனுபவிக்காத இன்பம். இந்த இன்ப உணர்வு பெருகுவதன் பயனே பிறப்பறுகையாகும்.

வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதாய் அமைந்தன்றே - சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி.

மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான் - மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்பம் மிகும்.

இருந்தென்னை ஆண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே எல்லாம் - தருங்காண்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத் தேவந்து.

— *திருவெண்பா, திருவாசகம்*

கிஞ்சுகவாய் அஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவும் மலைபகராய் - நெஞ்சத்(து)
இருளகல வாள்வீசி இன்பமரும் முத்தி
அருளுமலை யென்பதுகாண் ஆய்ந்து.

— *திருத்தசாங்கம்*

மலை காணப்படுபவைகளுள் மிகப் பேருருவம் கொண்டுள்ளதுபோல், சிவமும் விண்ணிறைந்து மண்ணிறைந்து விளங்கும் பேரொளி மலையாகும்.

**சிவனவ னென்சிந்தை யுள்நின்ற அதனால்**
**அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்**
**சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை**
**முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்**
**கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி**
**எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி:**

நெற்றிக் கண்ணுடைய சிவபெருமான் தனது அருட்கண் காட்ட, அதனால் அவன் என் முன்னின்ற படியால் நினைத்தற்குக் கூடாத அழகுடைய விந்து நாதங்களான (ஒளி, ஒலி), திருவடிகளை வணங்கிச் சிவபெருமான் எனது சிந்தையை இடமாகப் பெற்று, அதில் நின்றபடியால் அவனது அருட்சத்தியாலே சிவனது திருவடியை வணங்கி, மனம் மகிழும் படியும், முன்னைய வினை முழுமையும் கெடவும், அவனது அநாதி பழமையான வரலாற்றை யான் சொல்லுவேன்.

**விளக்கம்:**

சிவம் ஓர் அறிவுரு. சீவன் ஓர் அறிவுரு. சிவ அறிவு சீவனின் அறிவு பொருந்திய மூளையை இடமாகக் கொண்டே இயங்கிக் கொண்டுள்ளது. மூளையின் தன்மை சிவம் பிரகாசிக்குமாறு அதன் ஆணவம், கன்மம், மாயை அகன்றால்தான் சிவப் பிரகாசம் பெற முடியும். அதைச் சீவனே செய்து கொள்ள முடியாத நிலையில், சிவத்தை நினைவதால், சிவம் தனது சத்தியால் மூளைப் பகுதியைப் பக்குவம் செய்ய, நாத சத்தியை விழிப்பிக்க, சிரசில் நாதமுழக்கும் காரொளியும் அதில் சிறு வெண்ணிற ஒளியும் காணும். இந்நிலை கிட்டுவதைத் தொடர்ந்து சென்று பேரொளிப் பிழம்பைக் காண இயலுகிறது. இதைத்தான் முன்னர் காட்டிய சித்தாந்தசாரம் செய்யுள் 22 பார்க்க விளங்கும். இந்த நாதத்தை விட்டகலாது சிவவொளி தங்கும். இதன் மேலேதான் சிவதரிசனம் அமையும். இதன் நுட்பமே இவ் வரிகளில் உள்ள பொருள். சிவம் விளங்க ஆத்மாவின் சிவ தத்துவம் முதலில் விளக்கம் பெற வேண்டும். சிவ தத்துவம் சிறப்புறச் சுத்தவித்தை என்ற குண்டலினி மேல்முகம் கொண்டு சிரசை அடைய வேண்டும். அப்போதுதான் அகப்பார்வையில் ஒளிவிளங்கும். சிவமேதான் குண்டலினிநாதன் என்பது பற்றி ''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'' என்றார்.

## பரை இயல்பு

அப்பரை தான்உட்பர னுக்ககலா தாகும்
ஆதியந் தமும்பரக்கும் அகன்மறைப்பை யுடைத்தாம்
ஒப்பில் சூக்குமமாகும் எங்கும் தானாகி
ஒருவரால் அளப்பரிதாய் ஒளிரும் அதன்செயல்தான்
எப்பொழுதும் கருணைவடி வாகை சாந்தம்
இயல்பாகும் இச்சைஞானம் கிரியைக் கிடமாம்
கப்பிலா ஓங்கொளியாம் ஆங்கதுதான் இறைவன்
கருதுவடி வாம்என்னும் கற்றவர் நூற்கருத்தே.

*— தத்துவப்பிரகாசம்*

இதுசத்தி அனேகம் அருவுருவாயும் மிக்க
இறைவனார்க் குயிராகிக் கரண மாகித்
திதமுற்ற குணம்பொறிகள் ஆகிஉயிர் உடலாய்ச்
சேர்சாங்கம் உபாங்கமாய்த் தேசமொடு பொருளாய்க்
கதிவைத்த பொருளாய இலிங்க பீடமுமாய்க்
கருதியநற் குணமாதல்பரை வியாத்தம் காண்டல்
இதமித்த தநுவாதல் யோகம் போகம்
இதன்பயனாம் ஓசையின்பம் இசைதல் தானே.

**விண்ணிறைந்து மண்ணிறைந்து**
**மிக்காய் விளங்கொளியாய்**
**எண்ணிறந் தெல்லையிலா தானேநின் பெருஞ்சீர்**
**பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்.**

*சிரசுக்குமேல் உள்ள பகுதியிலும் சிரசுக்குக் கீழுள்ள தேகமான பகுதியிலும், ஏக ஒளியாய் மேலான ஒளியாக விளங்குபவனே! மன மண்டலமும் கடந்து அகண்ட சொரூபமானவனே! உன்னுடைய மேலான சிறப்பைக் கொடிய வினைகளால் பந்திக்கப்பட்ட நான் புகழும் விதம் சிறிதும் அறியேன். மண் என்றது பிருதிவிமயமான தேகமாகும். இது வியஷ்டி நிலை. சமஷ்டி நிலையிலும் சிவம் அவ்வாறேதான் உள்ளது. ''உலகெலாம் ஆகி வேறாய் உடனுமா யொளியாய்'' - சித்தியார்.*

அளவுக்கு உட்பட்டவன் மானிடன். அளவைக் கடந்தது சிவம். அளவு கடந்ததை மானிடன் வர்ணிப்பது குறைபாடு உடையதாகவே முடியும் என்பது பற்றிப் ''பொல்லா வினையேன்'' என்றார்.

**புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்**
**மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்.**

புல்லாகியும், பூண்டாகியும், புழுவாகியும், மரமாகியும், பல மிருகங்களாகியும், பறவையாகியும், பாம்பாகியும், கல்லாகியும், மனிதராகியும், பேயாகியும், பூத கணங்களாகியும், வலிய அசுரராகியும், முனிவராகியும், தேவராகியும் இயங்குகின்ற இந்த அசையாப் பொருள், அசையும் பொருள் என்னும் இருவகைப் பொருள்களுள்ளே எல்லாப் பிறவிகளிலும் பிறந்து யான் மெலிவடைந்தேன். எம்பெருமானே, இப்பொழுது உண்மையாகவே உன் அழகிய திருவடிகளைக் கண்டு வீடு பெற்றேன்.

**விளக்கம்:**

இங்கு அறியத்தக்க சில உண்மைகள் உண்டு. பிறவிக்கு வரும் உயிர் அறிவு பெறுவதற்காக வருகின்றது. ஆனால், அதன் வினைத்தொடர்பும் அதனுடன் கூடவே வருகிறது. அதன் காரணமாக இன்ப துன்பச் சூழ்நிலைகள் நியதிபற்றி அமைகின்றன. பிறவிக்கு வந்ததும் கால தத்துவத்திற்கு உடன்படுகிறது. மனத்தால், வாக்கால், காயத்தால் செய்யும் காரியங்களுக்கு ஏற்ப இறந்து பின் சொர்க்க நரகமடைந்து மீண்டும் பிறக்க நேருகின்றது. இங்கு எழும் வினா மனிதன் மனிதனாகப் பிறக்க வேண்டுமா? வேறு வகையாவதும் உண்டா?

இரண்டாவது ஓர் உயிர் இத்தனை வகையாகவும் பிறவி எடுத்து, முடிவில் மனிதப் பிறவியை அடைந்து நல்லறிவு பெற்று, இறைவன் திருவடியை அடைய நேரிடுகின்றது. உயிர் வளர்ச்சிக்கு விகாசமுறை அத்தியாவசியம் என்ற கொள்கை. தாழ்வதும் உண்டு. திரிகாலமுணர்ந்த திருமூலர் கூறுவதாவது:

மந்திரம் ஓரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே

ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை.
— திருவம்மானை - திருவாசகம்

இதனால் மனிதன் தன் செய்கைக்கேற்ப எதுவாகவும் பிறக்கலாம் என்றதை ஆன்றோர் முடிவு கண்டுள்ளனர். எடுத்த மனித உருவின் பயன் தன்னுண்மையை அறிந்து தலைவனை அறிந்து, மீளப் பிறவா நெறியைப் பெற முயலுவதே உண்மை அறிவாகும். அத்தகைய மெய்யாகிய திருவடிஞானம் கிட்டியபிறகு பொய்யின்பால்படுத்தும் பிறப்பறும் என்பதை ''எம்பெருமான் மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்'' என்றார். எல்லா வகை உயிரினங்களிலும் அறிவின் தாரதம்மியம் ஒன்றுபோல் இல்லாமல் இருப்பதால், மேலானவனாகக் கருதப்படும் மானிடன் எடுத்த பிறவியில் சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் அறிவின் ஆற்றலை உணர்ந்து, பேரறிவுப் பொருளான சிவத்துடன் ஒன்றுபடுவதே மனிதன் செய்ய வேண்டிய முக்கியக் காரியம் ஆதல் பற்றி அத்தகைய அறிவுப் பொருள் பிரணவம் என்பதைப் பின்வரும் வரிகளில் விளக்குகிறார்.

**உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற**
**மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்**
**ஐயா வெனவோங்கி ஆழந்தகன்ற நுண்ணியனே**
**வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா**

**பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி**
**மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே.**

*இந்த மேலே கண்ட வாக்கியங்களின் உண்மை அறிந்தவர் திருவாசகத்தைப் படித்து அனுபவம் அறிவர். அல்லாதவர் சொல்நயம் கொண்டு மகிழ்வதுதான் நடை பெறக்கூடும். இந்த உண்மையை வாய்ஞ்ஞானம் பேசுபவர் யாரும் பிறர்க்கு உணர்த்த முடியாது. திருவாசகத்தின் முதலும் முடிவும் இதை அறிவதில்தானுள்ளது. மணிவாசகரே கூறியுள்ளார்:*

ஆற்றேன் எம்ஐயா அரனே ஓவென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்.

................................... ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித்திரு வடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக் கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

— *சிவபுராணம்*

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட்டு ஓங்காரத்துட் பொருளை
ஐயனெனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே.

— *அச்சோபத்து*

*மணிவாசகர் பஞ்சாக்கர வழிபாடாகிய நமசிவாய என்றோ சிவாயநம என்றோ வழிபட்டுச் செல்லவில்லை. இந்த ஐந்தெழுத்தை ஓதிக் காண்பது பிரணவ ஞானமே. பிரணவ ஞானத்தை நேரே அருளாலோ, குருவாலோ பெறலாம். பஞ்சாக்கரம் செபித்தலில் சித்த சுத்தியாகி நாதவெளிப்பாடு கிட்டும். ஓங்காரம், ஒருமொழி, மௌனம், ஓரெழுத்து, ஓதாதுணர்த்தும் ஞானம், மந்திர மில்லா ஞானம், ஒரு சொல் என்ற பல பெயரால் வழங்குவர்.*

நாவியின் கீழது நல்ல எழுத்தொன்று
பாவிக ளத்தின் பயனறி வாரில்லை
ஓவிய ராலும் அறிய வொண்ணாதது
தேவியுந் தானும் திகழ்ந்திருந் தானே.

— திருமந்திரம் 956

பொருள்: நாபிக்குக் கீழ் உள்ள பன்னிரண்டு விரற்கடைப் பிரதேசத்தில் ஓங்காரம் உள்ளது. இதுவே உயிரைக் காப்பாற்றும் நல்ல ஓரெழுத்து. பாவிகள் அதன் பயனைப் பெற்று அனுபவிக்குமாறில்லை. ஆனால், இந்த உண்மையை மிக மேதாவியானாலும் அறிந்து கொள்ள முடியாது. அந்த ஓங்காரம் உள்ள நிலையிலே சிவமும் சத்தியும் உள்ளது.

அவ்வொடு சவ்வென்ற தரனுற்ற மந்திரம்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிகிலர்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிந்தபின்
அவ்வொடு சவ்வும் அனாதியு மாமே. 957

பொருள்: ஹம்சம் என்ற பிராசாத நெறி (சிவத்தை அடையும் நெறி) மந்திரத்தில் சிவம் நிலைபெற்றுள்ள மந்திரமாகும். ஹம்சம் என்ற மந்திர நுட்பத்தை யாரும் அறிகிலர். இதை அறிவார்களேயாகில் சிவமும் சத்தியும் எவ்விதம் அநாதியோ, அவ்விதமே சீவனும் சிவமாய் விடும். ஹம்சம் என்ற மந்திரத்தின் பொருள், நான் அவன். இதில் ஹ என்பது ஆகாய பீஜம்; ச என்பது மூலாதாரத்திலுள்ள அட்சரமாகையால் இது சத்திபீஜம். தேகத்தில் உள்ள எல்லா அசைவும் சத்தியின் ஆற்றல். அசைவினால் உண்டாகும் அறிவு சிவமாகும். அறிவின் வழி முதலானபோது சத்தி தொடரும். அதனால் ஹம்சம் என்றவைகளே சோகமாகும். ஹம்சஸ் சோகம் என்று கூறுவர்.

இதை உபநிஷத்துக்கள் ஹம்ச பக்ஷி என்றே சொல்லின. இது ஆகாயத்தில் சதா அசைந்துகொண்டே உள்ளது என்று கூறுவர். சீவன் உலகமான மாயையில் சிக்குண்டு அறியாமையில் மூழ்கிக் கிடக்கிறபோது இது

மூலாதாரத்தில் இடம் பெற்று உள்ளது. தேகத்தைக் கடக்க வேண்டும் என்றவனுக்கு உலக மாயை இல்லாதபடியால் இந்த ஹம்சமே சங்கார தர்மத்தை மேற்கொண்டு, சீவனை ஆகாய வடிவாக்கி விடுகிறது. ஆகாயமே மனிதன் பிறவிக்கு வரும்முன் உள்ள நிலை. இறந்த பிறகு அடையும் நிலையும் அதுவேயாகும். அறிஞன் உயிருடன் ஆகாயமய னாகின்ற படியால் அவன் சிவசமானன் ஆகின்றான். ஆகாய மயனானபோது ஆத்ம தரிசனம் கிட்டும். ஆத்ம தரிசனம் பெற்றவனிடம் எல்லாத் தத்துவங்களும் சேட்டிப் பின்மையால் நிஷ் பிரபஞ்சமாகிப் பக்ஷியின் நிலைமாறி ஹம்சோ என்றிருந்தது சோகம் ஆயிற்று. அதன் பொருள் சத்தியின் வழிப்பட்ட சிவம், சிவத்தின் வழிப்பட்ட சத்தியானபோது சத்தியும் தனதுருவை இழந்து சூக்கும பரையாயிற்று என்ற கருத்து. சோகம் என்றதில் மெய்யெழுத்துகளை நீக்கிவிடில் அதுவே ஓம் ஆகும்.

கண்டவிவையல் லேனானென் றகன்று காணாக்
கழிபரமும் நானல்லேன் எனக் கருதிக்கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி
விண்டகலும் மலங்களெல்லாங் கருடதியா னத்தால்
விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமது நானானே னென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

— *சிவஞானசித்தியார் 9ஆம் சூத்திரம்*

இதை விளக்கிவிட்டு இத்தகுதியில்லார்க்குத்தான் பஞ்சாக்கர வழிபாடு, இதன் அடுத்த சூத்திர மாகிய ஒன்பதில் கூறப்பட்டுள்ளது.

சத்தி சடமயமான ஆற்றலாக இருந்தபோது சிவமும் அந்த ஆற்றலில் உள்ள அறிவாக விளங் கியது. சத்தி ஒளிமயமானபோது சிவமும் அவ்வகையான ஆற்றலாகி விடும்.

சத்தியாய் விந்துசத்தியாய் மனோன்மணி தானாகி
யொத்துறு மகேசையுமை திருவாணி யாகி

வைத்துறுஞ் சிவாதிக்கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தியாகும்
எத்திற நின்றானீச னத்திற மவளும் நிற்பள்.

— சிவஞான சித்தியார், 2ஆம் சூத்திரம்

மந்திரம் ஒன்றுள் மலரால் உதிப்பது
உந்தியி னுள்ளே உதயம் பண்ணா நிற்கும்
சந்தி செய்யாநிற்பர் தாமறி கிலர்
அந்தி தொழுதுபோய் ஆர்த்தகன் றார்களே.

— திருமந்திரம், 958

பொருள்: இந்த ஹம்ச பக்ஷி என்ற பிரணவம் ஏகாக்ஷர வஸ்து. தேகத்தில் உள்ள நாபிப் பிரதேசத்திலிருந்து உதிப்பது. இந்த உண்மையை ஞானிகள் அறிவர். உலகினர் உடலிலுள்ள சூரியனைக் கண்டறியாது பௌதிகச் சூரியனை நோக்கி ஆரவாரத்துடன் தொழுது இறந்தொழிந்தனர்.

சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற
ஆவிக்குள் மந்திரம் ஆதார மாவன
பூவுக்குள் மந்திரம் போக்கற நோக்கிடில்
ஆவிக்குள் மந்திரம் அங்குச மாமே.

— திருமந்திரம், 959

பொருள்: இதை அறிந்து சாதனம் செய்தால் இம்மந்திரகதி கீழ்மேல் பக்கம் என்று எல்லாத் திசைகளிலும் பரவி, மேல் முகங்கொண்டு செல்லும். இது ஹம்ச என்ற உயிரால் குறிக்கப்படும் மந்திரம். இது தேகத்திலுள்ள ஆதாரங்களைப் பற்றித் தொழிற்படும். மூலாதார சுவாதிஷ்டான மணிபூரகங்களில் இது உள்முகங்கொண்டு விளங்கும். அவைகளைப் பிரித்து அவைகளின் நிலையினின்றும் மாற்றினால் இதுவே சீவனான யானையை (பிரணவத்தை)ச் செலுத்தும் அங்குசமாகும்.

அருவினில் அம்பரம் அங்கெழு நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவி யகார சிகார நடுவாய்
உருவிட ஆறு முறுமந் திரமே.

960

பிரணவம் மேலே சென்றால் ஆகாயத்தில் உருவங்கடந்த சிதாகாயத்தில் நாதம் உதிக்கும். அந்த நாதத்தினூடே விந்து மண்டலமும் விளங்கும். அகரகலை என்ற சோமகலை, விந்து மண்டலத்தில் விளங்கும். இவ்விதம் சென்று சென்று மோதுவதில் பிரணவம் வளர்ச்சியை அடையும்.

விந்துவும் நாதமும் மேவியுடன் கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம் வந்தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாமே. **661**

புருவ மத்திக்குமேல் விளங்கும் சந்திர மண்டலத்தில் ஒளியும் ஒலியும் பொருந்தில், ஆகாய நாயகரான சதாசிவருடன் கூடும் பேறு கிட்டித் தேகத்தில் சுகநிலை உதித்துவிடும். அங்கு இயல்பாக எழுகின்ற பிரணவத் தொனியே பரமேசுவரனுக்குத் தன்னை அர்ப்பணிக்கும் ஆகுதி மந்திரமாகும். இதுதான் இங்குக் கூறப்பட்ட விஷயம். சாகத முறையிலும் இதே கருத்துத்தான்.

மூலமணி பூரகத்தோ டிலிங்க மார்பு
முதுகளம்விற் புருவநடு மொழிவ தாறு
ஞாலமுமென் புனலும்அனற் பிழம்புங் காலும்
நாதமுறு பெருவெளியும் மனமு மாக
மேலணுகிக் குலபதத்தைப் பின்னிட் டப்பால்
மென்கமலத் தாயிரந்தோட் டருணபீடத்து
ஆலவிடம் பருகியதன் கொழுந ரோடும்
ஆனந்த முறும்பொருளை அறிய லாமே.

— ஆனந்தலகரி

1. இந்த சட்சக்கர பேதனம்தான் அந்தரியாகம் என்று சமயிகளால் கூறப்படுவது. மூலாக்கினி பிரகாசிக்கும் கண்டம் மூலாதாரமும் சுவாதிட் டானமும் ஆகும். இது அக்கினி கண்டம் பிரமக் கிரந்தியின் இடமாகும்.

2. மணிபூரகமும் அநாகதமும் அறிவாகிய சூரியன் பிரகாசிக்கும் இடம். இது சூரிய கண்டம் விஷ்ணு கிரந்தியின் இடமாகும்.

3. விசுத்தியும் ஆக்ஞையும் சோமகண்டம் ஆகும். இது சந்திர கலாயுக்தமான உருத்திரக் கிரந்தியின் இடமாகும்.

4. இவைகளுக்குமேல் மாயா தத்துவம் சுத்த வித்தியா தத்துவம், மகேஸ்வர தத்துவம், சதாசிவ தத்துவம் என்றவைகளைச் சேர்க்கப் பத்து ஆதாரங் களாகிவிடும். இவைகளைத் துரியகண்டம் என்று கூறுவர். இவ்வகையாகப் பத்து ஆதாரங்களையும் சேர்ப்பதற்கு மகாவேதா என்று பெயர்.

குண்டலினியைக் குலாங்கனை யென்றும், சட்சக்கரங்களடங்கிய சுழுமுனை மார்க்கத்தைக் குல பதம் அல்லது ராஜவீதி என்றும் கூறுவர். லலிதா சகஸ்ரநாமம் 90 முதல் 111 பார்க்க விளங்கும். (இவைகள் பின்னால் கொடுக்கப்பட்டுள்ளன). குண்டலினி சத்தியானவள் மூலாதாரத்திலிருந்து கிளம்பும்போது பிறந்த குழந்தைபோல் சப்தம் செய்வதால் அங்கே குமாரி என்றும், சூரிய கண்டத்தின் முடிவாகிய அனாகதத்தை விட்டுக் கிளம்பும் போது அந்த சூரியனின் உஷ்ணத்தால் பக்குவம் ஆகித் தகுந்த வயதுள்ளவளாய் தருணி என்றும், சகஸ்ரார பத்மத்தில் தன்பதியாகிய பரசிவனை அடைவதால் அங்கே பதிவிரதை என்றும் சொல்லப்படுவது வழக்கம். மூலமணி, பூரகத்தோடு, இலிங்கம் என்ற மூன்றையும் சேர்த்துக் கூறியதே பிரணவத்தின் நிலை.

90. குலாம்ருதைக ரசிகாயை - குலாம்ருதத்தில் ரசிப்பவள்.

91. குலஸங்கேதபாலின்யை - குலசம்பந்தமான ரகசியங்களைக் காப்பவள்.

92. குலாங்கணாயை - குலஸ்திரீ போன்றவள்.

93. குலாந்தஸ்தாயை - குலம் என்னும் திரிபுடியினுள் (ஞேயம்) அறியத்தக்கதாக இருப்பவள்.

94. கௌலின்யை - சிவமும் சத்தியும் சேர்ந்த வடிவினள். (குலம் என்றால் சத்தி; அகுல - சிவம்)

95. குலயோகின்யை - குலத்துடன் சம்பந்த முடையவள்.

96. அகுலாயை - குலத்துக்கு அப்பாலிருப்பவள்.

97. ஸமயாந்தஸ்தாயை - உள்ளத்தில் சிவனையும் சத்தியையும் உபாசிப்பது சமய அந்தஸ்து எனப்படும்.

98. சமயாசார தற்பராயை - கிரியை வழியி லுள்ளோர் மூலாதாரம் முதலாகப் பாவனையில் பூசை செய்பவர்கள். அவ்வித சமயபதத்தில் பிரியமுள்ளவள்.

99. மூலாதாரைக நிலயாயை - மூலாதாரத்தில் முக்கியமாயுறைபவள்.

100. ப்ரஹ்மக்ரந்தி விவேதின்யை - பிரமக்கிரந்தியைப் பிளப்பவள்.

101. மணிபூராந்த வதியாயை - மணிபூரக ஸ்தானத்தில் காட்சியளிப்பவள்.

102. விஷ்ணுக் கிரந்தி விபேதின்யை - விஷ்ணு முடிச்சைப் பிளப்பவள்.

103. ஆக்ஞாசக்ராந்தாலய தாயை - புருவ மத்தியில் ஆக்ஞாசக்கரத்தின் நடுவில் உள்ளவள்.

104. ருத்திரக்கிரந்தி விபேதின்யை - ருத்திரக் கிரந்தியைப் பிளப்பவள்.

105. ஸஹஸ்ராராம்புஜா ரூபாயை - ஸகஸ்ராரச் சக்கரத்திலேறியிருப்பவள்.

106. ஸுதாஸாராபிவர் ஷிண்யை - ஸுதா என்னும் அமிர்தத்தைப் பெருகும்படிச் செய்பவள்.

107. தடில்லதா சமருச்யை - மின்னல் கொடிபோல் பிரகாசிப்பவள்.

108. ஷட்சக்ரோபரி - ஸமஸ்திதாயை - ஆறு சக்கரங்களுக்கும் மேலே இருப்பவள்.

*109. மஹரா சக்த்யை - பக்தர்களிடம் மிகுந்த பிரியமுள்ளவள்.*

*110. குண்டலியை - குண்டலினி ரூபமாக உள்ளவள். பாம்புபோல் மூச்சுவிட்டுக் கொண்டிருப்பவள்.*

*111. பிஸதந்து - தநீயஸ்யை - தாமரை நூல்போல் மெல்லியவள்.*

ஆறெழுத் தோதும் அறிவார் அறிகிலர்
ஆறெழுத் தொன்றாக ஓதி உணரார்கள்
வேறெழுத் தின்றி விளம்ப வல்லார்கட்கு
ஓரெழுத் தாலே உயிர்பெற லாமே. 926

*பொருள்: பிரணவ சகிதமான பஞ்சாக்கரத்தைச் செபிப்பவர் இந்த உண்மையை அறிய மாட்டார்கள். பிரணவம் என்பது ஆறாதாரத்துக்குரிய ஆறு எழுத்துகளும் ஒன்றாவதில் உள்ளது என்பதை அறிந்து ஓதமாட்டார்கள். ஆறெழுத்தாகக் கொள்ளாது ஓரெழுத்தையே கொண்டு, சாதனம் செய்வாருக்கு அவர்களுடைய உயிரை நிலைநிறுத்திக் கொள்ளலாம்.*

ஓதும் எழுத்தோடு உயிர்க்கலை மூவைஞ்சும்
ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்
சோதி எழுத்தினில் ஐயிரு மூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக் கொள்ளீரே. 963

*பிரணவ உச்சாரணத்தினால் அதன் தொடர்பான பதினைந்து எழுத்துகளும் அமைகின்றன. அந்தப் பிரணவ உறுப்பான அகரமே ஐம்பத்தோரக்கரமாயிற்று. பிரணவத்தில் விந்து நிலையில் பதின்மூன்று நிலைகள் உள்ளன. நாதவெழுத்தாகிய மகாரத் தொனியால் இவைகளைக் கண்டறிந்து கொள்ளவும்.*

விளக்கம்:

*பிரணவம் அ, உ, ம என்றுள்ள மூன்று உறுப்புகளைக் கொண்டது. அதில் உள்ள அகரகலை உயிர் எழுத்துகளாகவும் ஸ்வரமாகவும் உள்ளது. அந்த எழுத்தே*

ஐம்பத்தோரக் கரமாக விரிகின்றது. அ, உ, ம என்ற மூன்றும் சேர்வதில் அர்த்தமாத்திரைப் பிரணவம் உதிக்கும். இதுவே சோதி எழுத்தாகும். இதனால் காணப்படுவது சந்திரகலையில் மீதமுள்ள பதின்மூன்று கலைகளுமாகும். இவைகள் நாத வெளிப்பாட்டினால் அறியத்தக்கது. சந்திரனின் சோடச கலைகள் பெயரும் இடமும்.

1. அகரம் - மேதை - தொப்புள்
2. உகரம் - அர்க்கீசம் - இருதயம்
3. மகரம் - விடகலை - கண்டம்
4. விந்து - புருவமத்தி
5. அர்த்தசந்திரன் - நடுநெற்றி

| | |
|---|---|
| 6. நிரோதினி<br>7. நாதம்<br>8. நாதாந்தம்<br>9. சத்தி | சிரசு |
| 10. வியாபினி<br>11. வியோமரூபினி<br>12. அநந்தை<br>13. அநாதை<br>14. அநாசிருதை<br>15. சமனை<br>16. உன்மனை | சிரசின் மேலுள்ள ஆகாயப் பகுதி. சிரசுக்கு மேல் பன்னிரண்டு விரற்கடைக்குள்ளாகும் நிலையாகும். |

உந்திச் சுழியின் உடனே பிராணனைச்
சிந்தித் தெழுப்பிச் சிவமந் திரத்தினால்
முந்தி முகட்டில் நிறுத்தி அபானனைச்
சிந்தித் தெழுப்பச் சிவனவ னாமே. 732

பிராணன் என்பது சூரிய சத்தியாகும். அபானன் என்பது சந்திர சத்தியாகும். சூரியன் அறிவுரு வானவன். அறிவு இச்சையின் தன்மையைப் பொறுத்து விஷய வாசனைகளைப் பற்றிச் செல்வது. உணர்வு என்பது முன்

அனுபவித்த பொருளின் இச்சையால் பொருளின்மேல் கொண்ட அவாவினால், பொருளை அடைவதில் உள்ள மகிழ்ச்சியாகும். மனிதனிடம் இந்த இரு தன்மைகளும் காமவயப்பட்டுள்ளன. காமமென்பது மூலாதார அக்கினியே யாகும். கழுத்துக்குக் கீழ் இடம் கொண்டவை, அக்கினி கண்டமும் சூரிய கண்டமும். உருவமாயினும் சரி, அருவமாயினும் சரி, சாஸ்திர ஆராய்ச்சியாயினும் சரி, அப்பியசிப்பதில் சிரசில் உள்ள அறிவணுக்கள் பக்குவமான முறையில் வளர்ச்சியடைவதில் மூளையில் சூக்குமப் பகுதியான மனமண்டலமும் வளர்ச்சி அடைகிறது. சூக்குமம் வளர்வதற்கேற்ற முறையில் சூக்கும உடலில் குணதர்மமும் அமைகிறது. குணங்கள் காமக் குரோதாதிகள் இருண்ட காரிருளைப் பெருக்கும். அன்பு நீல ஒளியையும் அறிவு மஞ்சள் ஒளியையும் பெருக்கும்.

சூரியனுக்குப் பிங்கலன் என்றே பெயர். பிங்கலன் என்றால் பொன்னிறம் கொண்டவன் எனப் பொருள். பிராணனை எழுப்புதல் என்றால் மூச்சு என்றே நுட்பம் அறியாதவர் இடர்ப்பட்டுக் கெடுகின்றனர். தேகத்தை விரும்பி நிற்பவனுக்குப் புருடன் என்று பெயர். யோக முறையில் புருடனுக்கு நெற்றிமுதல் உந்திவரையில் கீழாலவத்தை மேலாலவத்தையில் கூறப்பட்டுள்ளது. சுத்தாவத்தை பிறக்கப் புருடனை ஒளிமயமாகக் கண்டபோது சீவன் ஒளிபெறும். குரு உதவியால் இந்தச் சூரிய ஒளியை வலது கண்ணுக்கு மேல் பார்க்கக் கூடியதே. இதுவே முதல் தீக்ஷையாகும். இங்குக் கூறிய சிவமந்திரம் மூலமனு என்ற பிரணவமேயாகும். இது புருடனைச் சீவனாக மாற்றும் உபாயம். இவையெல்லாம் புறத்தில் காண்பதில்லை. உடலைச் சூழ உள்ள மன மண்டலத்திலாகும். இதை "உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா" என்றும், "மெய்யே உன் பொன்னடிகள்" என்றும் விளக்கினார். இந்த உண்மை அறிந்தவர் தன்னைச் சூழ உள்ள இருள் மண்டலத்தைக் கெடுக்கும் ஆற்றல் பெற்று விடுவதால் வீடுபேறு பெறுகின்றனர்.

பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்.

— *கீர்த்தித் திருவகவல்*

*உருவ வழிபாட்டில் செய்வதும் இதுவேதான். சதாசிவரின் தெற்கு முகம் அகோரமாகும். அவர் ஆட்சி இருதயமாகும். அதனால் "அகோர இருதயாய நம" என்று தியானிக்கின்றனர். கோரமான சம்சார விருத்தியைக் கெடுப்பவர் என்று பெயர்.*

*இதன்பிறகே சந்திரன் என்ற அபானனை எழுப்ப வேண்டும். அபானன் நீரை முகமாகவுடையவன். (அப்பு+ஆனனம்). நீர் முகத்திலிருந்து காமக்கழிவான இந்திரியம் ஏற்படுகின்றது என்றதை அறியவும். சந்திரன் குளிர்ந்த நீலவொளியில் இடதுகண் புறம் வெளிப்படுவன். இந்த உண்மையை அறிவதில் சிவயோகம் உள்ளது. இதைத் திருவாசகத்தில் உத்தரகோசமங்கை என்று விதந்து கூறியுள்ளார். இங்கேதான் சீவனும் சிவனும் சேரத் தொடங்கும் இடமாகும்.*

*உருவ வழிபாட்டினர் "வாமதேவ குஹ்யாய" என்று மந்திரம் ஆக்கியுள்ளனர். இரண்டிலும் விஷயம் ஒன்று தான். திருவாசகத்தில் பல இடங்களில் உத்தரகோசமங்கை இடம் பெறும். அவைகளில் சில இங்குக் காட்டுகிறேன். இது ஈசான திக்காகும். இந்த வாமதேவரே மேல் முகங்கொண்டபோது, மந்திர ராசனான ஈசான மூர்த்தியாவர் என்பது திருமந்திரம். அஷ்டதளகமல முக்குண அவத்தை என்ற தலைப்புப் பார்க்க விளங்கும்.*

உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்.

*இதுவே தேகத்தில் தூலமாகவும், அறிவில் சூக்கும மாகவும் உள்ள அசைவுகளைப் பதிப்பிக்கும் இடமாகும். காம உணர்வைக் காமக்கழிவின்றிச் செலுத்தும் ஆற்றல் பெற்றவர் ஸ்பந்த ரூபமான உணர்வை இங்குக் காணலாம். மனத்தில் இறைவனைத் தோத்திரம் செய்தாலும் ஸ்பந்த*

ரூபமான உணர்வை இங்குக் காணலாம். காம ஜெயத்தில் இருந்து காண்பவர்க்கும் சிவசிந்தனையில் காண் பவருக்கும் ஒரே இடமாகையால் தேகம் இன்பத்தை அடைகிறது. சிவமும் நுகரும் பொருளாகவே சிவயோகிக்கு உள்ளது.

இதை ஆங்கிலத்தில் Speech Centre என்பர். சிவபூசகர்களும் வாகீஸ்வரன் வாகீஸ்வரி என்று புறத்தில் வடகிழக்கில் இடமமைத்துப் பூசிக்கின்றனர். நீத்தல் விண்ணப்பம் முதல் 20 செய்யுள் உத்தரகோசமங்கை பற்றியதேயாகும்.

தாதாடு பூஞ்சோலை தத்தாய் நமையாளும்
மாதாடும் பாகத்தன் வாழ்பதிஎன் - கோதாட்டிப்
பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம் போற்கொண்டாடும்
உத்தர கோசமங்கை யூர்.

— திருத்தசாங்கம்

நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி எழுகோ கழிக்கரசைப் - பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண்.

— பண்டாய நான்மறை, திருவாசகம்

ஈசானிய பாகம் என்ற பகுதி தொழிற்பட்டு மூளையின் அணுக்கள் பரிசுத்தமான பிறகே திருப் பெருந்துறை என்ற ஊர்த்துவ சகஸ்ரதளம் செயல் படும். பசுகரணங்களின் செயல் மாற்றப்படுவதில் சிவகரணம் உண்டாகிறது. அவ்விதம் மாற்றப் படுபவரைச் சிவகுமாரர் என்றே திருமூலர் கூறுகிறார்.

உந்திக் கமலத்து உதித்தெழுஞ் சோதியை
அந்திக்கு மந்திர மாரும் அறிகிலார்
அந்திக்கு மந்திர மாரும் அறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன் பிறந்தானே. 869

ஆன்மஞானம் பெற்று அநுபவிப்பவரைச் சிவ குமாரர் என்றே கூறினார். ஆன்மா பிரணவத்தின் உச்சியில் 36

தத்துவங்களையும் கடந்துள்ளது. அதன் பிரதிநிதி குணங் களோடு கூடிய சீவன், சீவனுக்குப் பிரதிநிதி புருடன். புருட தத்துவம், சீவதத்துவம், ஆன்மாவின்கீழ் நோக்குதலற்ற போது அதன் பரநிலை அமைந்து சீவ பரசிவதுரியம் கூறப்படுகிறது. இயமானன் - உயிர், காரியத் தலைவன். ஆன்மா, அதிகாரி, சீவன் என்ற பல பொருள்களுள், அவைகளைப் பற்றி அறிய விளக்குகிறேன்.

மனிதன் உடலுடன் குணங்களுடன் பொருந்திக் காரியம் செய்யும்போது புருட தத்துவம் சிறப்புற் றிருக்கிறது. அதில் சீவ ஒளி மறைந்து உள்ளது. குணமயமான சீவன் சொப்பன சுழுத்திகளில் தனித்து உள்ளான். இங்கு ஆன்மா சிறிது விளக்கம் பெறும். ஆனாலும், சீவன் குண சமுகமான கஞ்சுகத்தில் விளங்குவதில் ஆன்மா முழு ஆதிக்கம் பெறாது. சிரசுக்கு மேலே ஒளிஞானம் பெறுபவரிடம் சாத்விக குணம் மேம்பட்டு நிற்கும். சிவத்தை ஏற்றுக் கொள்ளத் தயாராயுள்ள நிலையே தவிர அகங்காரம் மலினமாய் இருக்கும். 36 தத்துவங்களையும் விட்ட ஆன்மா, குணங்களை விட்டபடியால் சிவத்துடன் கலந்து வாழத் தகுதியைப் பெறுகிறது. புருடன் சீவன் ஆன்மா என்பவை இடம் நோக்கிப் பொருள் கொள்ள வேண்டியது. அதனால் ''இயமானனாம் விமலா'' என்றபோது உயிராகிய ஆன்மாவில் உறைபவன்தான் ஈசன். தண்மையான சந்திரனுடன், வெம்மையான சூரியனின் சேர்க்கையே ஆத்ம ஒளியாகும். ஆத்மா ஒளி அடையும்போது பந்தமுற்றிருந்து தேகமே தான் என்றும் விளங்கியது. தான் ஒளி புருஷன் என்றபோது தேகத் தொடர்பை விட்டு விட்டபடியால் ''இயமானனாம் விமலா பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே'' என்றார்.

சிவம் எப்போதும் பிரணவ கோஷத்தில் உள்ள படியால் அவன் மறையவன் எனப்படுவான். சீவன் தன்னிடமுள்ள பிரணவ கோஷத்தை அறிவதில் சிவம் உள்ளபடியால் ''உய்ய வென்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா, விமலா, விடைப்பாகா'' என்றார்.

இத்திறம் ஆன யோகசா தனையில்
இருந்து சாதிப்பவர் தமக்கிச்
சுத்தமா நாதத் தொனிகளும் பலவாத்
தோன்றிடு மணிகடல் மேகம்
மத்தளம் பேரீ யாழ்ஒலி சிலம்பு
வளையளி தாளம்என் றுமையாட்கு
அத்தனும் மொழிந்தான் அன்றியும் உரவோர்
ஆய்ந்தெடுத் துரைத்தனர் அன்றே.

— நிஷ்டானுபூதி

ஓங்காரமே சத்தியப் பொருள். அது மலத்துடன் சேர்ந்திருந்தாலும் மலக்குற்றங்களால் பாதிக்கப் படாது. அதுவே உயிரைச் செலுத்துவது.

வித்தகமாகப் பலகலை பயின்றும்
மேவுநற் பயன்களை யறிந்துந்
தத்துவ முழுதுங் கசடற வுணர்ந்துந்
தன்னிலை யறிவதற் கரிதாஞ்
சுத்த மெய்ஞ்ஞான தேசிகன் மகிழ்ந்தே
சொல்லாமற் சொல்லுமோர் மொழியாம்
முத்திரை மோன நிலையினா லன்றி
முத்தியின் நிலை கிடையாதே.

— நிஷ்டானுபூதி

பசுத்துவ நிலையில் சீவனின் விருப்பத்தால் தேகம் பலவித சக்திகளை அடைந்தது மல தோஷத்தினாலாயது. சீவனின் விருப்பம் சிவநாட்டமாகும்போது, தேகத்தைத் தான் என்று எண்ணும் எண்ணமில்லாதபடியால் எடுத்த தேகம் சிவகரணமாக மாறவேண்டும். அப்படியின்றி அறிவற்ற ஜட சமாதியால் எடுத்த தேகத்தினாலாய பயன் இல்லை என்பதே மணிவாசகர் விளக்கம். ஜடசமாதி பெறாமல் பிரணவ சமாதியைப் பெறும்படி கூறுகிறார்.

புற்றுமாய் மரமாய்ப் புனல் காலே
உண்டியாய் அண்ட வாணரும் பிறரும்
வற்றி யாரும் நின்மலரடி காணா
மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துப்

பற்றினாய் பதையேன் மனமிக உருகேன்
பரிகிலேன் பரியாவுடல் தன்னைச்
செற்றிலேன் இன்னுந் திரி தருகின்றேன்
திருப்பெருந் துறைமேவிய சிவனே.

— *செத்திலாப்பத்து*

*பிரணவம் என்பது என்ன? என்பதை விளக்கு கிறேன்.*

எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்
சொல்லா நடுநாடி யூடேதொடர் மூலஞ்
செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணி நிற்போரே. 857

பொருள்: *தேகத்திற்கு உரிய சகல அறிவும் இடைபிங்கல சுழுமுனை இவைகளை மூலமாகக் கொண்டுள்ளது. இயல்பாக நடு நாடி யாவருக்கும் சிறந்து தொழில்படுவதில்லை. அதைச் சிறப்புறும் முறையில் தொழில்படுத்திச் சிரசில் சேரச் செய்வதால் அமையும் விந்து நாதமாகிய திருவடிகளை நல்லோர் பொருந்தி நிற்பர்.*

அங்கியிற் சின்னக் கதிரிரண்டாட் டத்துத்
தங்கிய தாரகை யாகுஞ் சசிபானு
வங்கிய தாரகை யாகும் பரையொளி
தங்குநவ சக்கர மாகுந் தரணிக்கே. 856

*வங்கியம் - இசைக் குழல். தாரகை என்பது ஆத்மா வுக்குப் பெயர். அது அதன் இயல்பான ஒளியில் சிறுமையுடைய சூரியன் சந்திரன் இரண்டின் ஒளியில் உள்ளது. வளம்பெற்ற சந்திரன் சூரியன் பிரணவத் தொனியில் விளங்கும். அப்பிரணவமே பரையொளி யாகும். அதுவே எல்லாவித மண்டலங் களையும் தாங்குவதாகும்.*

தரணிசலங் கனல்கால் தக்க வானம்
அரணிய பானு அருந்திங்கள் அங்கி
முரணிய தாரகை முன்னிய ஒன்பான்
பிரணவ மாகும் பெருநெறி தானே. 859

பூமி, நீர், தீ, கால், ஆகாயம், அஞ்ஞானத்தில் செலுத்திய சூரியன், மேன்மையான சந்திரன், சீவவொளி, ஆன்மாவின் ஒளி இவை ஒன்பதும் முன்னர்ப் பசுத்தன்மையில் இருந்து அதற்கு மாறுபட்ட விதமாகப் பொருந்தினபோது பெரிய பிரணவ நெறி பொருந்தும்.

விடாதமனம் பவனத் தோடு மேவி
நடாவுசிவ சங்கின் நாதங் கொளுவிக்
கடாவிடா ஐம்புலன் கட்டுண்ணும் வீடு
படாதன இன்பம் பருகார் அமுதமே. 880

தேகசுபாவத்தை விடாத மனத்தையும் காற்றையும் பிரணவத்தொனியை மூட்டித் தன்போக்கில் செல்லும் ஐம்புலன்களையும் அங்குக் கொண்டு சேர்க்காதவர்கள் அமுதமாகிய இன்பத்தை அடையமாட்டார்கள். சிவசங்கின் நாதம் - பிரணவத் தொனி. கொளுவி - மூட்டி.

ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே. 2676

ஓங்காரத் துள்ளே யுதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்றும் உள்ளன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே. 2675

**இதுகாறும் விளக்கிய பிரணவத்தின் சாரம்:**

பரம்பொருளைத் தரிசிப்பதென்றால் நாம் கண்டு கேட்டு அறிந்தனவற்றை ஆதாரமாகக் கொண்டு நம்மனோர் கற்பனையில் உருவான ஒரு தோற்றத்தையோ, ரூபமற்ற அருவத்தையோ தரிசிப்பதோ உணர்வதோ அன்று. தரிசிப்பதென்றால் ஞானக்கண் கொண்டு பார்ப்பதும், அதனால் அடையும் ஒரு ஆத்மானுபவமும் வேண்டும். அது அகண்டமாய் ஏகமாய் சர்வ வியாபியாய், சர்வாந்தரியாமியாய் அனைத்திற்கும் ஆதாரமும் ஆதேயமுமாய் நாமரூப பேதங்களற்றதாய், குணங்

கடந்ததாய், நித்தியமாய் நிரந்தரமாய் உயிர்த் துடிப்புடையதாய், இடைவிடாது ஓமெனும் இன்பப் பரவச இன்னொலியுடன் கூடியதாய், வித்தில் மரம்போன்று சத்து சித்து ஆனந்த உணர்வுகளைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டுள்ளதாய் உள்ள ஓர் உணர்வுப் பொருளை நிலையான சத்துப் பொருளை கண்கூடாகக் காண்பது, நிதர்சனமாக உணர்வது, அதுவேதான் என உணர்த்த ஆனந்த பரவச நிலையில் என்றுமாய்த் தங்குவது. அப் பேருணர்வே பெரு வகையில் தன்னுள்ளும் வெளியிலும், வலுவுடன் சத்தியுடன் மகிழ்ச்சியுடன் தெய்வீகமாகச் செயலாற்றத்தான் என்பது அற்ற பெருநிலை.

தத்துவ தரிசனிகள் கருதுவது போன்று மெய்ப்பொருள் ஒன்றுமில்லாச் சூன்யமோ, அகண்டாகாரமான பாழ் வெளியோ, செயலற்ற நிச்சலன பர வொளியோ அன்று. ஒன்றுமில்லாத சூன்யத்திலிருந்து பேராற்றலுடன் விளங்கும் இப்பிரபஞ்சம் தோன்றி யிருக்க முடியாது. பிரணவமே மெய்ஞ்ஞானமென்றும் தேயு ரூபம் என்றும் விளக்கினார்.

**எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே**
**அஞ்ஞானந் தன்னை யகல்விக்கும் நல்லறிவே:**

எவ்வகையான அறிவும் இல்லாத எனக்கு இன்பம் அளிக்கும் இறைவனே, அறியாமையால் வரும் கேட்டை நீக்குகின்ற நல்ல அறிவுருவானவனே.

**விளக்கம்:**

பிரணவ சாதனை இன்பமளிப்பது. அறியா மையைப் போக்கிச் சீவவொளியைப் பெருக்கி அஞ்ஞானமான காரிருளை அகற்றுவது.

**ஆக்கம் அளவிறுதி யில்லாய், அனைத்துலகும்**
**ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்**
**போக்குவாய், என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்,**
**நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே**

மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்:

பிரணவ சொரூபத்தில் அ உ ம என்ற மூன்றெழுத்துக் கள் முறையே பிரமனையும் விட்டுணுவையும் ருத்திர னையும் குறிக்கும் அட்சரங்களாகும். அந்த ஒலியில் அந்தர்க்கதமாக உள்ளது அர்த்தமாத் திரைப் பிரணவம் ஆகும். அதுவே விந்துநாதங்களைத் தன்னகத்தே கொண் டது. விந்து நாதங்கள் கீழ்நோக்கு தலையுடையபோது சீவன் பஞ்சகர்த்தாக்களின் நியதிக்குள்படுகிறான். நாதாந்த தத்துவத்தால் உணர்த்தப்படும் சிவம் ஐந் தொழிலையும் கடந்தது. ஐந்தொழிலும் அதன் சந்நிதானத்தில் நடை பெறுகிறது. அது எவ்வித தோற்றக் கேடுகளும் அற்றது.

உதாரணம்: நிழற்படத் திரை வெண்ணிறமாய் அசைவற்றுள்ளது. ஆனால், அதிலேதான் சகல அசையும் காட்சிகளும் காணப்படுகின்றன. மகா சூக்குமமான ஒளிப்பதிவினால் திரையில் எவ்வித மாற்றமும் ஏற்பட வில்லை. அதுபோலச் சிவத்துடன் இணைந்துள்ள ஆத்மாவில் சீவனின் குணதோஷங்கள் பாதிக்கப்பட வில்லை. சீவனே தான் பிறவிக்கு வருகிறது.

சிவம் ஒரு விகாரமும் அடையாமல் உள்ளது. பெருகுவதும் இல்லை. அளவுக்கு உட்பட்டது மில்லை. அழிவதுமில்லை. அப்படியிருந்தும் எல்லா உலகங் களையும் படைத்தும் காத்தும் அழித்தும் அருள்புரிந்தும் பிறவிக்கு விடுத்தும், அவனது அடிமையாக்குவதையும் செய்து கொள்ளுகிறது என்பதனை முதல் மூன்று வரிகளின் பொருள் உணர்த்தும். பூவின் மணம் வெளியில் இருந்து அதனிடம் வரவில்லை. பூ பக்குவமானதும் மணம் வெளிப்படுகிறது. அதுபோல மனிதர் உள்ளத்தில் உள்ள பிரணவமும் சாதாரணர் அறிவுக்கு மிகவும் தூரத்திலுள்ள பொருளாக உள்ளது. பக்குவமான ஆன்மாக்களுக்கு அவனுடைய தொழும்பில் பிரணவம் அறியப்படு

பொருளாகவுள்ளது. இது ''நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே'' என்றதற்குப் பொருள்.

அதன் பயனாக மனம் புறத்தே செல்லுதலையும், அவ்வாசனைகளை அறிவதையும் விட்டபோது மறைந்திருந்த சிவம் வெளிப்படுபவனாக உள்ளான். இது 'மாற்றம் மனங்கழிய நின்ற மறையோன்' என்று கூறப்பட்டுள்ளது. ஆத்ம ஞானிகளுக்குத் தொண்டையில் ஓர் இனிப்புச்சுவையுண்டு. அது கறந்த பால் சர்க்கரை நெய் கலந்த சுவைபோல சிந்தனையில் உண்டாகும் என்றார். அந்தச் சுவையின் பயன் பிறப்பு அறுக்கையாகும் என்றார். இது பின் மூன்று வரிகளின் பொருள். பல நூல்களும் இவ்விதம் சுவை வருவதைக் கூறுகின்றன. இதை அமுதம் என்றும் கூறுவர். இதுவே ஞான உதயம்.

நம்பரமாம் குருவை வழிபாடு செய்தல்
நற்கருணை யடியவர்மேல் வழிபாடு நாளும்
உம்பன் அருச்சனை பலகால் உன்னல் ஓசை
ஒழித்தொடுங்கித் தனித்திருக்கின் உதிக்கும் ஞானம்
கம்பமொடு புளகங்கண்டந் தித்தித்தல்
களநீர் வந்துறுதல் களந்தழு தழுத்தல் புளித்தல்
வெம்பிநீர் பொழிதல் விதிர்விதிர்த்தல் உண்டேல்
மிக்கிருள்போய் அஞ்ஞானம் விட்டோடி விடுமே.

— தத்துவப் பிரகாசம்

சிந்தனையில் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்.

சிவத்தைப் பற்றிய சிந்தனையே சிவத்தைத் தன்னிடம் விளக்குவது என்பதே முக்கிய விஷயம். புறத்தே சென்று வழிபடும் பக்திகாண்டிகளுக்கு இக்கருத்து மட்டுப்படுவ தன்னியில் விளக்கமும் பெறுவதில்லை. அதற்குக் காரணம் மனம் புற உலகில் பற்றுக் கொண்டுள்ள உருவங்களை விட்டு நிற்க இயலாமையால் தெய்வத்திற்குத் தாம் விரும்பும் வண்ணம் பல உருவம் அமைத்து வழிபடுகின்றனர். மனமண்டலம் எவ்விதம் சிந்தனையால்

வலுவூட்டப்படுகிறதோ அதற்கேற்ற குணம் அதற்கேற்ற செயல் அமையும். அது நல்லதற்கென்றும் தீயதற்கென்றும் ஒரு நியதியில்லை. ஒரே நியதிதான். மனிதன் தன்னை எவ்வளவு அறிகிறானோ அவ்விதமே அவன் வழிபாடும் உள்ளது. ஞானியின் முதல்நிலை தேகம் தானல்ல. தான் தேகி என்ற அறிவு திடம் பெற வேண்டும். தான் தேகி என்றபோது தேகத்தால் செய்யவேண்டிய சடங்குகளையும், உபாய சாதனங் களையும் கைக்கொள்ள வேண்டும் என்ற நியதிகளினின்றும் விடுபடுகிறான். தேகியிடம் உள்ள கருவி அந்தக் கரணந்தான். தன்னுருவையே விட்டவனுக்குப் புற உருவைப் பற்றி நிற்க விருப்பமின்மையால் அகண்ட வழிபாட்டுக்குச் செல்லுகிறான். வேதம் கூறிய தத்துவமசிப் பொருளுக்கு இலக்கணம் அமையச் சீவனும் அந்த அளவுக்கு உயரவேண்டும். மந்திரம் சக்கரம் பூசைகள் செய்பவர் தேவதையின் உருவத்தைத் தியானித்து, அதைப் பிரகாசிக்கச் செய்யும் மந்திரங்களைச் செபிப்பர். அங்ஙனம் தேவதையைத் தியானித்து அதற்குரிய மந்திரங்களைச் செபித்தலினால் செய்பவருக்குத் தேவதாபாவம் உண்டாகும். அருளுண்டாகும். சித்தியுண்டாகும். பக்தன் இறந்து மீண்டும் பிறக்கும்போது தேவதையின் தொடர்பும் இருக்கும். அப்பிறவியில் உள்ள சூழ்நிலைக்கேற்ப மேலும் கேட்டை அடையலாம். நன்மையும் அடையலாம். இதுவே புராணங்களின் கூற்று. வரம் பெற்றவர் வாழ்வில்லை என்பது புராண முடிவு. அதனால் பிறவித் தளையை அறுத்துக் கொள்ள எவ்வுருவ வழிபாடும் பயன்படாது.

> ஆணவ மாதிமல மைந்தல ரோனுக்கு
> ஆணவ மாதிநான் காம்மாற்கு அரனுக்கு
> ஆணவ மாதிமூன் றீசர்க் கிரண்டென்ப
> ஆணவ மொன்றே சதாசிவற் காவதே. **2183**

உருவ நிலையில் சதாசிவபுவன வாசிகளைவிட மேலானவர் யாருமில்லை. அவர்களே ஆணவ மலத்தை விடாதவர்கள் என்றால் மற்றையோரைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? அவருக்குக் கீழான மகேஸ்வர மண்டல வாசிகள் கன்ம மலத்தையும் உடையவர்கள். தேவதைக்கு

என்ன கர்ம பலம்? என்று கேட்கலாம். வந்தித்தவனை வாழவும், வைதவனைத் தாழவும் செய்கிறதாகப் புராணம் கூறுகிறதே, அம்முறையில் உருத்திரர்களிடம் ஆணவம், கன்மம், மாயை பொருந்தும். விட்டுணுக்களிடம் ஆணவம், கன்மம், மாயை, மாயேயமும் பொருந்தும். பிரமனிடம் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம் திரோதை என ஐந்தும் பொருந்தும்.

சைவர் கூறும் சதாசிவ மண்டலமும், வைணவர் கூறும் வாசுதேவரும் ஒன்றேதான். இரண்டும் உருவம் கொண்ட நிலைதான். பிரணவோபாசனைக்கு எவ்வித சாதி சமய ஆண் பெண் பாகுபாடும் இல்லை. எவ்வித உருவத்தியானமும் இல்லை. அகண்டமே அதன் வழிபாடு. அகண்டத்தில் விளங்கும் ஸ்பந்த உணர்வுடன் (அசைவு அல்லது நாதம்) அங்குக் காணும் ஒளியேதான் அதன் வடிவம். அதனாலேதான் மணிவாசகர் கோயில் திருவிருத்தத்தில் தில்லைக் கூத்தனை உருவகம் செய்யாது தனது உள்ளக் கூத்தனையே காட்டினார். கோயில் திருப்பதிகம் பார்க்க நன்கு விளங்கும். அப்பதிகத்திலே சொல்லியுள்ள கருத்து சைவர்களுக்கு மட்டுப்படுவ தில்லை.

சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்
  ஒருவனே சொல்லு தற்கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
  அறுக்கு மானந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
  திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
  வந்துநின் இணையடி தந்தே.

— கோயில் திருவிருத்தம்

பந்தம் அறுப்பது சிவம் ஒன்றேதான். சதாசிவர்க்கு அருளோன் என்று பெயர். சீவர்களின் நல்வினை தீவினைக்கேற்ப நியதியை வகுப்பவர் சதாசிவரேதான். சதாசிவரே பசுக்களுக்குத் தலைவர். அவரே சிவத்தின் தூல

உரு. அவரே தான் என்ற ஓர் இருப்பு நிலையை விடாத போது (அகங்கார குணத்தை விடாதபோது) சீவனின் அகங்காரத்தை எவ்விதம் மாற்றக்கூடும் என்பதைச் சிந்திக்கவும். பஞ்சபிரமத்தில் மேல்முகம் ஒளி வடிவான முகம். அவ்வுபாசனை கிரியை வழிபற்றியவர்க்குக் கிட்டுவதில்லை. மேலுள்ள திருவாசகச் செய்யுளைக் கொண்டு முடிவுக்கு வரலாம்.

1. சோதியாக எங்கும் நிறைந்த உருவமே தோற்றம். திதி ஒடுக்க நிலைகளைக் கடந்த ஏக வஸ்துவான சிவம்.

2. அந்த ஏகவஸ்துவே பந்தமறுப்பது.

3. அதை அனுபவிப்பார்க்கு அது ஆனந்தக் கடலாக உள்ளது.

4. அது நிர்க்குணமாகையால் அதனிடம் ஒரு தீமையும் அணுக முடியாது.

5. சிதாகாயத்தில் சகஸ்ரதளத்தில் விளங்கும் சிவம்.

6. நீயே வந்து உன்னுடைய விந்து நாதங்களை என்னிடம் பதிப்பித்தாய். இதன் தொடர்பையேதான் வள்ளற் பெருமான் விளக்கமாகக் கூறினார்.

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்ற தொன்றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலன்ஓர் கைம்மாறே."

மணிவாசகர் இப்பதிகத்தின் தொடக்கத்தில்,

"மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்"

என்றே தொடங்கியுள்ளபோது, தில்லை என்ற ஊரை ஏன் வருவித்துக் கொள்ள வேண்டுமோ தெரிய வில்லை. திருவாசகத்தில் நடராசர் உருவமே காணவில்லை. ஈசான முக நடனத்தையே குறிப் பிட்டுள்ளார் என்பதையும் அறியவும்.

ஆதி நடஞ்செய்தான் என்பார்கள் ஆதர்கள்
ஆதி நடஞ்செய்கை யாரும் அறிகிலர்
ஆதி நடமாட லாரும் அறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே. *திருமந்திரம் 2187*

சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான ஐம்முகன் ஈசன் அரனும்
பவமுறு மாலும் பதுமத்தோன் ஈறா
நவமவை யாகி நடிப்பவன் தானே. *1807*

ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமும்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியுளே கண்டு தீர்ந்தற்ற வாறே. *2760*

ஆடிய காலில் அசைக்கின்ற வாயுவுந்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி யெழுகின்ற வேதாக மங்களும்
நாடியி னுள்ளே நான்கண்ட வாறே. *2731*

சிந்தனை எவ்விதம் அகண்டத்தில் நிலை பெறுகிறதோ அதற்கேற்பப் பிறர்க்கு உதவும் தயை பரோபகாரம், சாந்தம் முதலிய நற்பண்புகளே அங்கு உருவெடுக்க முடியும். சிந்தனைக்கு முரணான காமக் குரோதாதிகள் அங்குப் பொருந்தாது அகன்றுவிடும். சிந்தனையில் சிவம் வெளிப்படும் என்பதையே மேலுள்ள திருமந்திரம் விளக்கும். உள்ளத்தில் காண்பதும் நாடியில் காண்பதும் ஈசான மூர்த்தியின் ஒளிநடனமேயாகும். தியானத்திற்கு ஓர் உரு அமைய ஆகாய தத்துவங்களை விளக்கும் கூத்தன் குறியைப் பக்தி காண்டிகள் கொண்டனர். ஞானி நேரே தன்னில் தரிசிக்கிறான். இக்கருத்துகளையே திருமூலர் வாக்காலுங் காண்க.

## சிவ தரிசனம்

சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளிய வல்லார்கட்குச்
சிந்தை யினுள்ளே சிவனிருந் தானே. **2853**

வாக்கு மனமு மறைந்த மறைப்பொருள்
நோக்குமின் நோக்கப் படும்பொருள் நுண்ணிது
போக்கொன்றும் இல்லை வரவில்லை கேடில்லை
ஆக்கமும் அத்தனை ஆய்ந்து கொள்வார்க்கே. **2854**

பரனாய்ப் பராபர னாகியப் பாற்சென்
றுரனாய் வழக்கற வொண்சுடர் தானாய்த்
தரனாய்த் தனாதென வாறறி வொண்ணா
அரனா யுலகில் அருள் புரிந் தானே. **2855**

*சிவசொரூப தரிசனம்*

ஓதும் மயிர்க்கால் தொறும் அமுதூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்தம்
ஆதி சொரூபங்கள் மூன்றகன் றப்பாலை
வேதம் ஓதும் சொரூபிதன் மேன்மையே. **2856**

*பிரணவ கோஷத்தில் விளங்குவது, சதாசிவரின் ஈசான முகமாகும்.*

உணர்வும் அவனே உயிரும் அவனே
புணரும் அவனே புலவி யவனே
இணரும் அவன்தன்னை யெண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்த் துன்னி நின்றானே. **2857**

*துணர் - பூந்தாது.*

துன்னி நின்றான் தன்னையுன்னி முன்னாவிரு
முன்னி யவர்தங் குறையை முடித்திடும்
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியுள் நின்றதோர் தேற்றத்த னாமே. **2858**

மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்
தன்னுற்ற சோதித் தலைவன் இணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியும்
என்னுற் றறிவனான் என்விழித் தானே. **2859**

சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத் தினில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியே. **2860**

பரனல்ல நீடும் பராபரன் அல்ல
உரனல்ல மீதுணர் ஒண்சுட ரல்ல
தரனல்ல தானவையா யல்ல வாகும்
அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே. **2861**

முத்தியும் சித்தியும் முற்றிய ஞானத்தோன்
பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா
சத்தியுள் நின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்
சுத்திய கன்றோர் சுகானந்த போதரே. **2862**

துரிய அதீதஞ் சொல்லறும் பாழாம்
அரிய துரியம் அதீதம் புரியில்
விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன்
உருவுந் திரியும் உரைப்ப தெவ்வாறே. **2863**

பொருள்: *அகண்டமான சிவத்தை எண்ணுவதில் சுப இச்சை பெருகி, அதில் விசாரணை பெற்றுத் தெளிவடைவதில் பழைய வாசனைகள் அழியும். இதனால் முன்னர் விரும்பிய வாசனைகளின் இயல்பு கெட்டுவிடும். இவை மூன்றும் அப்பியாசிபெற வேண்டிய முதல் தகுதியாகும். இதன்மேல் சத்தை அடைதலும், முன்னர்க் காணப்பட்ட வாசனை உலகம் காணாதொழிதலும், சிவானந்தத்தில் திளைத்தலும் பெற்று மேலான துரிய பூமியை அடைவர்.*

**நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த**
**மறைந்திருந்தாய் எம்பெருமான்:**

ஐந்து நிறங்களை உடையவனே, வானுலகத்தினர் துதிக்க அவர்களுக்கும் புலப்படாமல் ஒளித் திருந்தவனே, எம் தலைவா!

நமசிவாயம் என்றபோது ஐம்பெரும் பூதங் களிலும் கலந்திருப்பவன். கலப்புத் தன்மைப் பொருளாகவோ குணமயமாகவோ இல்லை. இவைகளைக் கடந்த ஒளித்தன்மையில் உள்ளது. மண்ணுக்குப் பொன்னிறமும், நீருக்கு வெண்மையும், தீக்குச் செம்மையும், காற்றுக்குக் கருமையும், வானுக்குப் புகைமையும் நிறமாக ஆகமம் கூறும். நிலத்தைச் சேர்ந்த நீர் நிலத்துக்கேற்ப நிறம் பெறுவதுபோல மனிதனுடைய சூக்கும தேகம் குணத்துக்கேற்ப ஒளி பெறுகிறது. அவ்வொளிக்கேற்ப வானுலகவாசிகள் பொருந்தி இன்பந் திளைக்கின்றனர்.

வானுலக வாசிகளுக்குத் தூல உடல் இல்லாத படியால் அவர்கள் இன்ப துன்ப உணர்வுகளை மனிதர்களின் உடலையே வாகனமாக்கி மகிழ்வுறுகின்றனர். அவர்கள் விருப்பம் மண்ணுலகத்திற்கு வந்து சுகம்பெற வேண்டும் என்ற நோக்கமேதான். அவர்கள் விகாச முறையில் மேலிருந்து கீழிறங்குபவராகையால் நற்குணமோ துர்க்குணமோ வடிவாகக் கொண்டு மனிதனுடைய குண கஞ்சுகத்தை இடமாகக் கொண்டு ஆட்டுவிக்கின்றனர். நிர்க்குணமான சிவம் இவர்களுக்குப் புலப்படாத விஷயமாயிற்று. வானுலக வாசிகளுக்குப் பலம், இன்பம் இவற்றில் விருப்பமே தவிர முத்தியை விரும்பாதவர்கள்.

**வல்வினையேன் றன்னை**
**மறைந்திட மூடிய மாய இருளை**
**அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்**
**புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி**
**மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை**
**மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய**
**விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்**
**கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்**
**நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி**

**நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி**
**நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்**
**தாயிற் சிறந்த தயாவான தத்துவனே.**

*வலிய வினையால் பீடிக்கப்பட்டவனாகிய என்னை (உன்னுடைய ஒளியைக் காணாதவாறு) மறையும்படி மூடியுள்ள இருளாகிய அறியாமை கெடும் பொருட்டுப் புண்ணிய பாவங்கள் என்ற இரு வலிய கயிற்றால் கட்டப்பெற்று, தோலால் மூடப்பட்ட புழுக்கூட்டமும் அழுக்கும், அதை வெளிப்படுத்தும் ஒன்பது துவாரமும் உடைய உடலாகிய குடிசை குலையும்படி, ஐம்புலனும் வஞ்சனை பண்ணுதலால் அவற்றின் வழி கட்டப்பட்ட மனத்தால், உன்னுடன் பொருந்தின அன்பு இலாதவனாய், மனம் கசிந்து உருகும் நன்மையிலாத சிறியேனுக்கு, உன்னுடைய நீண்டு உயர்ந்து செல்லும் திருவடியைக் காண்பித்துப் பூமி தத்துவத்தினின்றும் மேலெழச் செய்தருளிய மலமற்றவனே! நாயினும் கடையனாகிய எனக்குக் கருணை பாலித்ததாயினும் சிறந்ததாய சொரூபமானவனே.*

விளக்கம்:

*மனிதன் ஆசையுடன் கூடியபோது பாசத்தால் பிணிக்கப்படுகிறான். நன்மைச் செயல்களைச் செய்வதால் புண்ணியம் என்ற கயிற்றால் கட்டப்பட்டுள்ளான். அதன் பயன் சொர்க்கம் சென்று மீளப் பூமிக்கு வந்து நல்ல சூழ்நிலையில் பிறந்தும், மேலும் செய்யும் வினைகளுக்கு ஏற்ப இறந்தபின் சொர்க்கமோ நரகமோ சென்று, மீளவும் பிறவிக்கு வருகிறான். பாவம் செய்தவன் நரகம் சென்று கெட்ட சூழ்நிலையில் பிறந்து, வாழ்க்கைப் போராட்டத்தில் வாடி வதங்கி இறந்து நரகமடைந்து பிறவிக்கு வருகிறான். இவ்விதம் புண்ணியமும் பாவமும் பிறவியை உண்டாக்குவதே தவிர அதை மாற்றாது. அதனால் அதனை 'அருங்கயிறு' என்றார்.*

*நல்ல விருப்பமோ கெட்ட விருப்பமோ உடலைப் பற்றியதாக இருந்தால், மனம் பிரகிருதி மயமாகவே*

இருப்பதால் ஆத்மசோதிக்கும் தேகத்திற்கும் இடையே மேகமண்டலம்போல் திரோதான சத்தி மறைப்பை உண்டாக்கிவிடுவதை 'மாயவிருள்' என்றார். ஆத்ம சோதியை அறிவுக்குப் புலப்படாமல் தடுப்பதால் 'வல்வினையேன் தன்னை மறைந்திட மூடிய மாய இருள்' என்றார். இருள் நிலையானதல்லாதபடியால் 'மாயவிருள்' என்றார். 'விலங்கு மனம்' என்றால் கட்டப்பட்ட மனம். எதில் கட்டப்பட்டுள்ளதென்பதை விளக்க 'புறம்தோல் போர்த்து புழுவழுக்கு மூடி, மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலைமலங்க' என்றார். மனிதன் இந்திரியங்களின் வழிச் செல்ல மனத்தை உபயோகிக்கிறான். மனம் பழைய வாசனைபற்றி அதன் வழியே செல்லுகிறது. அதனால் தேகம் சீர்குலைந்து மனிதன் சாவினை அடைகிறான்.

> இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
> அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்
> சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
> அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே.
>
> — *கண்டபத்து*

ஆத்மா மலமற்றது. அதில் உறைபவன் சிவன். அப்படியிருப்பினும் ஆத்மாவின் மயக்கம் தேகமேதான் என்றபோது, வானவர்களால் ஆளப்பட்டு அவர்களின் வாகனமாய் இன்ப துன்ப சுகத்தில் உள்ளபடியால் ஆத்மாவின் உணர்வு கீழான பிருதிவிமயமான தேகத்தையும், அதனாலடையும் சுகத்தையும் பற்றுக்கோடாகக் கொண்டு, பூமி தத்துவம் செழிப்பினை உடைய காமம் பொருந்திய நிலையில் சக்திகளை இழக்கிறான். இந்த நிலை மாற வேண்டியதற்கு உபாயம் சிவத்தின்பால் பொருந்திச் சிவ விருப்பத்திற்குத் தன்னை ஆளாக்க வேண்டும். இவ்வித அன்பு இல்லாமையே விலங்கின் தன்மையாகும். அவ்விதம் சிவத்தின்பால் அன்பு கொண்டவரை மீட்க வேண்டியது சிவத்தின் கடமை பற்றித் தன்னடியார்களின் தொடர்பு அமைக்கப்படுகிறது. விண்ணுலக அடியார் சாதகனைக் குழந்தையை

வளர்ப்பதுபோல் மனத்திலும் தேகத்திலும் மாற்றம் உண்டாக்குகின்றனர். அதனால் சிவம் பிரகாசிக்கத் தனது கலைகளைத் தூண்டுவிக்கிறது.

சிவகலைகளின் விவரம்:

1. இந்திகை - சகல அசுத்தங்களையும் பரிகரிப்பவள்.

2. தீபிகை - ஒளிகொடுத்துக் கொண்டிருப்பவள்.

3. ரோசிகை - அழகுக்குக் காரணமானவள்.

4. மோசிகை - சகல பந்தங்களிலிருந்தும் விடுபட்டவள்.

5. ஊர்த்துவகாமினி - மேல்முகங்கொண்டு செல்லுபவள்.

6. வியாபினி - எங்கும் விரிந்து பரவுபவள்.

7. வியோமரூபிணி - ஆகாய வடிவால் எங்கும் நிறைந்தவள்.

8. அநந்தை - அழிவற்ற நிலையை அருளுபவள்.

9. அனாதை - அவளை நடத்த வேறு நாதனின்றி அவளே சுதந்தரமானவள்.

10. அனாசிருதை - சிவதத்துவம் சத்திதத்துவம் என்றவைகளைப் பற்றாத நிலை.

இவ்விதமான பத்துக் கலைகளையும் விளக்க முறக் காமநிலை மாறி அமையவேண்டும். அதையேதான் ''நிலந்தன் மேல் வந்தருளி நீள் கழல்கள் காஅட்டி'' என்றார். இவைகள் பத்தும் மூலாதாரம் முதலாகத் துவாதசாந்தம் நோக்கிச் செல்வதால் 'நீள்கழல்கள்' எனப்பட்டது. இது ஆகாயமயமாய் விந்து நாதங்களாக உள்ளபடியால் 'கழல்கள்' என்றார். தாய் உணவு ஊட்டுவதுபோல் சிறுகச் சிறுக ஒளிபெருக்கிச் சிவம் உபகரிப்பவனாக உள்ளான்.

புறத்தில் உள்ளவர் யாரும் இந்த சகாயத்தைச் செய்ய முடியாது. கலந்த அன்பினருக்குத்தான் நடைபெறு வதென்றும், அவ்வளவு தகுதியில்லாத தனது சிறுமையில் நடப்பதாகத் தன்னைக் குறைத்தும் கூறியுள்ளார். நாய் தலைவனை மறவாதது. நன்றி மறவாதது. மனிதன் தலைவனான சிவத்தை நினைக்கவில்லை. நல்ல சூழ் நிலையை அமைத்துக் கொடுத்ததற்காக நன்றி காட்ட வுமில்லை. இரு தன்மையும் இருந்தால் தலைவனையும் துணை வனையும் அறிந்து இன்பம் பெறலாம்.

தனித்துணை நீநிற்க யான்தருக்
கித்தலையால் நடந்த
வினைத்துணை யேனைவிடுதி கண்
டாய் வினையே னுடைய
மனத்துணை யேயென்றன் வாழ்முத
லேயெனக் கெய்ப்பில் வைப்பே
தினைத்துணை யேனும் பொறேன்துய
ராக்கையின் திண்வலையே.

— நீத்தல் விண்ணப்பம்

'நிலந்தன் மேல் வந்தருளி நீள்கழல் காட்டி' என்று இங்குக் கூறி நிறுத்திவிட்டார். இப்படி நீண்டு செல்வதால் என்ன அமையும் என்பதைக் கீர்த்தித் திருவகவலில் கூறியுள்ளார். அதையே திருத்தசாங்கத்திலும் கூறியுள்ளார்.

1. மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை அருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்

2. ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்

3. ஊனந் தன்னை யொருங்குட னறுக்கும்
ஆனந் தம்மே யாறா அருளியும்

4. மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்

5. அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்

6. மூல மான மும்மல மறுக்கும்
தூய மேனிச் சுடர்விடு சோதி

7. காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்

8. அரியொடு பிரமற் அளவறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்

9. மீண்டு வாரா வழியருள் புரிபவன்

10. பாண்டி நாடே பழம்பதி யாகவும்

11. பத்திசெய் அடியரைப் பரம்பரத் துய்ப்பவன்

12. உத்தர கோச மங்கை யூராகவும்

13. ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்

14. இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை யருள்மலை யாகவும்

— கீர்த்தித் திருவகவல்

*புராணங்களில் யார் யாரோ பூசை செய்து, இன்னின்ன பேறுகளைப் பெற்றார்கள் என்று புராணங்கள் கூறிச் செல்லும். அவ்வரலாறு பக்தனைக் கவர்ச்சி செய்து அவ்வழியைப் பின்பற்றப் பயன்படுவது. இங்கு மணிவாசகப்பெருமான் தம் அநுபவத்தையே கூறுகின்றார். ஒரு விஞ்ஞான தத்துவம் செயல்முறைக்கு ஒத்துவருமானால் அது எக்காலமும் உண்மையாக அந்நுட்பப்படி செய்தால் பயன் அளிப்பதாகும். இறைவன் தன்னை ஆட்கொண்ட விதத்தை விளம்புவதில் அனுபோகிகள் உண்மையென்று கண்டு பயனடைவர். அல்லாதவர்கள் இறைவனைப் பாடும் புகழ் நூல்களில் இதுவும் ஒன்று என்று சொல்லி விடுவர். இதில் கண்ட கருத்தை ஒவ்வொன்றாக ஆராய்வோம்.*

1. 'மந்திரமாமலை' என்றது பிரணவம். மற்ற மந்திரங்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது பிரணவம் மலைபோலும். ஏனையவை சமவெளி போலும். மகேந்திரன் என்பது இந்திரனுக்குப் பெயர். அவன் வாழும் ஊர் சொர்க்கம் என்ற ஒளி மண்டலமாகும். ஒளி மண்டலம் தேகத்தில் முதல் உதிப்புநிலை புருவ மத்தியமாகும். சிரசு தேகத்தைப் பார்க்க மலைபோல் உள்ளது. பிரணவத்தின் உறுப்புகள் அ, உ, ம, விந்து, நாதமாகும். முதல் மூன்றாகிய அ, உ, ம என்பவை தேகத்தைப் பற்றியவை. பின்னைய விந்து நாதம் இரண்டும் தேகியைப் பற்றியவை. தேகியை அறிவதில் ஞானம் உள்ளது. இந்த இடத்திற்குரிய இடமென்றும் மகேஸ்வரத் தானம் என்றும் கூறுவர். மகேஸ்வரர் உருவ நிலையில் உயர்ந்த மூர்த்தமாகும். இது சாக்தம், சைவம், வைஷ்ணவம், யோகம் என்று எப்பெயர் கூறினும் தேகத்தைக் கடந்து செல்ல வேண்டும் என்பவர் தொடங்கும் நிலை இதுவாகும். புருவ மத்தியஸ்தானத் தியானம்.

அருளும்உனது ஆக்கினைத் திகிரிக்குள் உட்பட்டு
அருக்கன் மதிஅனைய வடிவாய்ப்
பருவமுதிர் பரசின்மயத் தோடுஉறு பான்மையாம்
பரமசிவனைப் பணிகுவாம்
ஒருபொழுதில் இப்பரமசிவனை எழுகதிர் மதிய
ஒளிகடந்து ஒளிரும் ஒருபால்
பெருகு பரமானந்த விழைவுஒளி, நினைப்பதுகொல்?
பெறுமுத்தி சத்தி ஒளியே.

— ஆனந்த லகரி

பொருள்: ஆக்ஞா சக்கரத்தில் மனதாக (த்வம்) நீ விளங்குகிறாய். உன்னுடைய ஆக்ஞா சக்கரத்தி லிருப்பவரும் கோடி சூரிய சந்திரர்களின் பிரகாசத்தை யுடையவரும் சகுண நிர்க்குண சத்தி வடிவான உன்னால் இரு பக்கத்திலும் அணைக்கப் பெற்றவருமான பரமசிவனைச் சேவிக்கின்றேன். அம்மாதிரி இருப்பவரைப் பக்தியுடன் ஒருவன் ஆராதித்தால் சூரியன், சந்திரன், அக்கினியாகிய மூவருடைய ஒளியாலும்

கண்ணுக்கு எட்டாததாயும், விளங்க வைக்க முடியாததாயும், கண்ணால் காணும் உலகத்தினின்று வேறுபட்டதாகவும் உள்ள பரஞ்சோதி வடிவான உனது சாயுஜ்ய பதவியில் வசிப்பான் என்பது நிச்சயம்.

மூலாதாரத்தில் காமகலை வடிவில் சிவசத்தி யுள்ளனர். காம என்றால் சூரியன். கலா என்றால் சந்திரன். அங்கு இடா நாடியும் பிங்கலா நாடியும் முதல் பின்னல் தொடங்குகிறது. இதுவே சிருஷ்டிக்கு முதல் நிலை. அதனால் பிரமன் நிலை சிருஷ்டி மயக்கத்தால் நடைபெறுவது. அதுவே விஷ்ணுவுக்கும் இடம். சிருஷ்டி கால எல்லையை நியதியாகக் கொண்டுள்ளது. அழிப்பவர் உருத்திரன் ஆதலால், அவரும் அங்கு இடம் பெற்றுள்ளார். அதனால் பிரணவத்தின் உறுப்புகளான அ, உ, ம என்றதில் மூவரும் உள்ளனர். சிருஷ்டி எப்படி பூமியை ஆதாரமாகக் கொண்டுள்ளதோ, அவ்விதமே சிருஷ்டியின் எதிர் நிலையான முத்தி ஆகாயத்தைப் பற்றியுள்ளது. மூலாதாரத்திலேயே இந்த மூவருக்கும் வேறான ஒரு சத்தியும் உள்ளது என்று ஆகமவாதிகள் கண்டனர். அது இந்த சிவசத்தியால் அமைவதாக இருப்பினும், அதனின் தன்மை மேல்நோக்கிச் செல்வதால் அதற்கு வேறு ஒரு பெயர் வைத்தனர். அப்பெயரே கந்தன். கந்தன் என்றால் ஒன்று சேரப்பெற்றவன் என்று பொருள். கந்தன் சிவசத்தி சேர்க்கையால் அமைந்த உருவம் ஆதலால் சோமாஸ்கந்தர் வடிவம் கண்டனர். ஸக+உமா+ஸ்கந்தர் = சோமாஸ்கந்தர். தானும் உமையும் கந்தரும் கூடிய நிலையை அறிந்தவர்க்கு இறைவன் தன்னையே தந்தருளுவான் என்பதே ஆரூர்த் தியாகராஜ தத்துவம். மனிதன் பூமியில் வந்த காரியம் பூமி தத்துவத்தை அறிந்து அதன் செயலை உடல் உள்ளபோதே மாற்றிவிடில் மீண்டும் பூமிக்கு வரும் வேலையில்லை என்பதேயாகும். குமரன் என்பது மூலாதாரத்திலிருந்து மூல வாயு அல்லது சுழுமுனா நாடி மேலெழுந்து செல்வதே யாகும்.

நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்தீக் கலந்துட் சிவனென நிற்கும்

முந்திக் கலந்தங் குலகம் வலம்வரும்
அந்தி யிறைவன் அதோமுக மாமே.

— திருமந்திரம் 523

உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை
அந்திக்கும் மந்திரம் ஆரும் அறிகிலார்
அந்திக்கும் மந்திரம் ஆரும் அறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன் பிறந்தானே. 869

இவ்விதமாக மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு சக்கர பேதனத்தால் மாற்றமடைந்து வெளிப்பட்ட புருவமத்திய ஒளியே ஆறுமுகத் ததிபதி. இவரே சமய குரு என்பதற்கு,

ஆறு முகத்தில் அதிபதி நானென்றுங்
கூறு சமயக் குருபரன் நானென்றும்
தேறினர் தெற்குத் திருவம் பலத்துள்ளே
வேறின்றி யண்ணல் விளங்கி நின்றானே. 2758

தெற்குத் திருவம்பலம் புருடன் வசிக்கும் வலது கண்புறமாகும். பிரணவ சொரூபமான அறிவு பொருந்திய சிரசில் உள்ள சிவபெருமான், அளவில்லாத பெருமையினையுடையவன். சத்தியைத் தன்பால் கொண்டவன், என்னை ஆண்டுகொண்ட விதத்தைக் கூறப்போனால் என்பது "மந்திர... பகரின்" என்ற வரையில் பொருளாகும்.

2. ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்:

மூலாதாரம், மேலுள்ள ஆதாரங்களுக்கும் ஆதாரமாகும். இங்கிருந்து சிவகலையில் ஊர்த்துவ காமினி மேனோக்கி ஏறுவதில் சுழுமுனா நாடியின் அடைப்பு திறக்கப்பட்டுக் கந்தர் தோன்றுகிறார். இவர் வாம தேவரின் குமாரர் ஆதல்பற்றி "அழகமர் திருவுரு" என்றார். தேகத்தின் கோடி உச்சியாகும். அதுவரை குண்டலினி சுருண்டு கிடந்தது நிமிர்ந்து தேகத்தைத் தாண்டி நீற்றொளி அமையும் வரையில் நின்று காட்டிய முறையும்.

வாமா-அழகு. வாமதேவர் சிரசில் இடப்பக்க மூளையிலும், உடலில் குறித் தானத்திலும் தொழிற்படுவர். காம நிலை மாற்றமே அமைவதெனினும் கந்தர் உற்பவம் சிவமும் சத்தியும் சேர்ந்த பிறகே உண்டானது என்றதிலும் சூக்ஷ்மம் உள்ளது. இது ரகசியப் பொருள்.

3. ஊனந் தன்னை யொருங்குட னறுக்கும்
 ஆனந் தம்மே யாறா அருளியும்.

ஆத்மா ஆகாய பூதசம்பந்தமானது. அது பிருதிவிமயமான தேகத் தொடக்கால் குறைபாடு உள்ள தாயிற்று. இதை அகற்ற உபாயம், ஆனந்த நிலைமாற்றம் அமையவேண்டும். ஆனந்தம் தேக சம்பந்தமானபோது காமமாக உள்ளது. அவ்விதமே சிவத்தின் மேல் காதல் முருகினபோது சிரசின் இடப்பக்கத்தில் ஈசானர் வெளிப்படுவார். முன்னர் வாமதேவராயிருந்தவரே சிரசின்மேல் பாம்பின் படம் எடுத்ததுபோல் நிமிர்ந்தபோது ஈசான மூர்த்தியாவார். அப்போது உடம்பில் ஒரு இன்ப நிலை இருக்கும். இதையே ஆனந்தம் என்று கூறுவர். முன்னர் 'ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி' என்றார். இதற்குத் திருமந்திரப் பகுதி அஷ்டதளகமல முக்குண அவத்தை விளக்கம்.

உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனுந்
துதிக்கும் நிருதி வருணன்நல் வாயு
மதிக்குங் குபேரன் வடதிசை யீசன்
நிதித்தெண் டிசையும் நிறைந்துநின் றாரே. **2527**

ஒருங்கிய பூவுமோ ரெட்டித ழாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுமுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே. **2528**

மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரிசுடர்
எட்டல ருள்ளே இரண்டலர் உள்ளுறிற்
பட்டலர் கின்றதோர் பண்டங் கனாவே. **2529**

ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே. **2530**

திகையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும்
வகையெட்டு மாய்நின்ற ஆதிப் பிரானை
வகையெட்டு நான்குமற் றாங்கே நிறைந்து
முகையெட்டும் உள்நின் றுதிக்கின்ற வாறே. **2531**

ஏழுஞ் சகளம் இயம்புங் கடந்தெட்டில்
வாழும் பரமென் றதுகடந் தொன்பதில்
ஊழி பராபரம் ஓங்கிய பத்தினில்
தாழ்வது வான தனித்தன்மை தானே. **2532**

பல்லூழி பண்பன் பகலோன் இறையவன்
நல்லூழி ஐந்தினுள் ளேநின்ற வூழிகள்
செல்லூழி யண்டத்துச் சென்றவ் வூழியுள்
அவ்வூழி யுச்சியு ளொன்றிற் பகவனே. **2533**

புரியும் உலகினிற் பூண்டவெட் டானை
திரியுங் களிற்றொடு தேவர் குழாமும்
எரியும் மழையும் இயங்கும் வெளியும்
பரியுமா காசத்திற் பற்றது தானே. **2534**

ஊறு மருவி யுயர்வரை யுச்சிமேல்
ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவின்றிச் சூடான் புரிசடை யோனே. **2535**

ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நின்றும் இருந்தும் நிலம்பல பேசினும்
வென்றுமிருந்து விகிர்தனை நாடுவர்
சென்றும் இருந்தும் திருவுடை யோரே. **2536**

பொருள்: *கிழக்கிலிருந்து (முகத்திற்கு முன்பக்கமிருந்து) இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசன் என்ற எண்மரும் நிறைந்து*

நிற்பர். அவர்கள் நிற்பதை மாயையாகிய தேகத்தின் இறுதியில் சுழுமுனையாகிய நாடியில் ஆறாதார சத்திகளையும் கொண்டு செல்வதில் எழும் சோதியை உய்யுமாறு நினைந்து எழுப்பவும். அங்கு எட்டு பத்மங்களாகக் காணவும்.

அவ்விதம் சுழுமுனை தொழிற்பட, சோமன், சூரியன், அக்கினி என்ற மூன்று பத்மங்களாகிய மொட்டுகளின் ஊடே ஒளி பாய்வதில் அமைவதாக உள்ளது. இரண்டு இதழினையுடைய ஆக்ஞையின் ஒளி எட்டு இதழுடைய சகஸ்ரதளத்தில் பாய்வதைக் கண்டவர்க்குத் தேகம் கனாப்போல் உண்மையற்றதாக ஆய்விடும்.

ஆறாதாரங்களின் ஆற்றல்களும் ஒருசேரப் பாய்வதில் மதுரமான சகஸ்ரதளம் பொருந்தும் (குளம் - வெல்லம்; சர்க்கரை). ஆறு ஆதாரங்களையும் சாறாகப் பிழிவதில் இந்த நுண்மையான சிவகதி அமையும். அங்கு சத்தியுடன் கூடியும், சத்தியைக் கூடாமலும் சிவம் உள்ளனர்.

எட்டுத் திசைகளும், எண்திக்குப் பாலகர்களின் வாகனங்களும் எண்திக்குப் பாலகர்களும், அட்ட மூர்த்தியுமான சிவம், சந்திர கலையான அகரமாயும், நான்கு உருவங்களாகவும் நிறைந்த எட்டு பத்மங்களில் இடம் பெறுவர்.

இந்திரன் முதலான ஏழு திக்குகளில் சகல உருவங்களும் இடம் பெறும். சகல உருவங்களையும் விட்ட நிஷ்களமாகிய பரம் எட்டாவதான ஈசான திக்கில் இடம் பெறுவர். அதையும் கடந்து கவிழ்ந்த சகஸ்ரதள மத்தியை அடைந்தால் சகல தேகபந்தங் களையும் ஒழிக்கும் மகா உருத்திர சத்தியுள்ளது. இதுவே மேலான பரமாகும். இதை அறிந்தபோது சீவன் தனது தனி வியக்தியைவிட்டுச் சிவனடியானாக ஆவன்.

சிவம் சீவனைப் பல பிறவிகளினின்றும் விடுவித்தது; சீவனுக்கு இதம் செய்வதையே தனது குணமாகவுடையது; இவனே சிவாதித்தன்; எல்லா உயிரினங்களுக்கும்

தலைவன்; பஞ்ச கிருத்தியத்தில் செய்யப்படும் ஊழிகள் யாவும் முடிவுபெறும் உச்சியிடம் பெறுவது சிவாதித்தனிடமேயாகும்.

உலகில் அட்டமூர்த்தமாக விளங்குவதும், அட்ட திக்குக் கஜங்களாகவும், மற்ற தேவர்களாகவும், ஜோதியாகவும், மழையாகவும், ஆகாயமாகவும்; ஆகாயத்தினின்றே இயங்குபவனாகவும் சிவமே உள்ளது. அட்டமூர்த்தி வடிவாக விளங்குபவன் தானே, அஷ்ட திக்குக் கஜங்களாகவும், தேவர் கூட்டமாகவும், ஜோதியாகவும், மழையாகவும், அசைவோடு கூடிய ஆகாயமாகவும், அசைவில்லாத ஆகாயத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு விளங்குகின்றான்.

இது சிரசில் உச்சியின்மேல் அருவமாக ஊறும் தன்மையதாகும். செல்லும் வழி விளங்காமல் அருமையான ஆனந்தத்தைத் தரும் இடம் ஒன்றுண்டு. அந்த நிமிர்ந்த சகஸ்ரதளம் மலக்குற்றமற்றது. அந்தப் பூவே அவன் விரும்பித் தரிப்பதாகும். சீவனும் சிவனும் பேதமன்னியில் விளங்கும்போது இவ்விதம் பொருந்தும். இந்த உண்மையை அறிந்தவர் நிற்கும்போதும் நடக்கும்போதும் பல்வேறு காரியங்களைச் செய்தபோதும் இந்திரியங்களை ஜெயித்தவராய் இறைவனை நாடியிருப்பர். இவ்வாறாக இருப்பது சிவத்தைப் பெற்றவர் தன்மையாகும்.

4. மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
 நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்:

கருணையே வடிவாக உள்ள பெருந்தன்மையையுடைய சிவம் தனது சத்தியை ஒரு பாகமாகக் கொண்டுள்ளது. அவள் ஆகாய சலனத்தில் நாதமயமாக (ஸ்பந்த ரூபமாக) சுழற்சி செய்து கொண்டும் அதனால் பேரோசையை ஒலித்துக் கொண்டும் உள்ளாள்.

5. அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்,
 கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்:

சீவனைப் பந்தப்படுத்தாது தன்னடியானாகக் கொண்டருள்பவன். சோம சூரிய அக்கினி என்ற முச்சுடர் வேலைத் தனது கையாயுதமாகக் கொண்டு துணை புரிந்தும்.

6. ஆணவம், கன்மம், மாயை என்ற மூல மலங்களான இருளைப் பிரித்துப் பரிசுத்தமான சுயஞ் சோதியாகியும்.

7. சீவனைப் புணரும் விருப்புடன் இந்திர நீல ஒளியில் (நீலமும் சிவப்பும் கலந்த ஒளி - ஊதா) கலந்து பொருந்துமாறு அழகுடன் விளங்கியும்.

8. பிரம தத்துவமும் விஷ்ணு தத்துவமும் எட்டாதவாறு வாசியான குதிரையின்மேல் ஆரோ கணித்துச் சீவனை நடத்தியும்.

9. மீண்டும் பூமியில் வந்து பிறவாதவாறு அருள் புரிபவன்.

10. பாண்டி நாடே பழம்பதியாகவும்; பண்டு என்ற தாதுவிலிருந்து வந்தது பாண்டி நாடு. அதாவது பழைமையான நாடு என்று பொருள். சீவன் சிருஷ்டியை நோக்கி வரும் முன் அதனது நிலை ஒரு ஒளிநிலையேதான். தனது நிலையை விட்டுக் கீழிறங்கித் தனது குணகஞ்சுகத்துடன் பொருந்தும் போதுதான் இருள் மயமாகிறது. பிறவிக்கு வராதவர் அவ்வொளி மண்டலத்திலேயே உள்ளார். அதனால் அது பழம்பதியே தவிரச் சீவனுக்குப் புது நாடல்ல.

11. பத்தியுடன் தன்னையுமறிந்து சிவத்தையு மறிந்து வழிபடுபவரை மிக மேலான நிலையில் வைப்பவன்.

12. அவனது நாடு பாண்டிய நாடாகிலும், அவன் பிறந்து வளர்ந்துள்ள ஊர் உத்தரகோச மங்கையாகும்.

உத்தரம் - பதில், வடக்கு; கோசம் - பை, பகுதி; மங்கை - சத்தி. சிவம் தேகப்பற்றுள்ளபோது இடக் கண்ணில் மேலான ஈசான பகுதியில் இடம்பெற்று விளங்கு வார். தேகப்பற்று விட்டவர்க்கு அதே பகுதியிலிருந்து ஸ்பந்த உணர்வு அமைந்து சிரசின் உச்சியை அடைவதால்

உத்தரகோசமங்கையை ஊராகவும், சகஸ்ரதளப்பகுதியைப் பாண்டிய நாடாகவும் கூறப்பட்டுள்ளது.

13. ஆதிமூர்த்திகளான பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்ற மூவர்க்கும், அவரவர்களுக்கு உரிய சத்தியை அளித்தவன் ஆனபடியால் தேவர்களுக் கெல்லாம் மேலான தேவதேவன் என்ற திருப் பெயரையுடையவனும்.

14. இருளை அழித்து இன்பத்தையே வானக மாகக் கொண்டு மேலெழுந்து விளங்கியவனின் பெருமை பெரிய பேராற்றலுடையதாகவும்.

**மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே**
**தேசனே தேனா ரமுதே சிவபுரனே:**

மலக் குற்றங்களற்ற சோதியே! விரிந்து விளங்கும் ஊர்த்துவ சகஸ்ரதளத்தில் விளங்கும் சுடரே! (சுடர் சோதிக்குக் காரணம்) தேஜஸையே தனது உருவாகக் கொண்டவனே! (குருமூர்த்தியே).

தேன் - கள். கள்ளுண்டவர் தமது நிலையை இழப்பர். சிவானந்தத் தேனை உண்டவர் அமுதமய தேகத்தைப் பெற்று விளங்குவர். அத்தகைய ஆனந்தத்தையே தனது உருவாகக் கொண்டவனே!

செழுந்தண் பாற்கடல் திரை புரைவித்து
உவாக்கடல் நள்ளுநீ ருள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்கு
அள்ளூ றாக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையு மிருப்ப தாக்கின னென்னிற்
கருணை வான்தேன் கலக்க

அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன் மாலறியாப் பெற்றி யோனே.

— *திருவண்டப் பகுதி*

கள்ளின் விளக்கம்:

*திருமந்திரத்தில் 'கள்ளுண்ணாமை என்ற தலைப்பில் இது கூறப்படுகிறது. அதில் சில பகுதி:*

சித்தம் உருக்கிச் சிவமாஞ் சமாதியில்
ஒத்த சிவானந்தத் தோவாத தேறலைச்
சுத்த மதுவுண்ணச் சுவானந்தம் விட்டிடா
நித்தல் இருத்தல் கிடத்தல்கீழ்க் காலே. **325**

காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகும்
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனிதன் இணையடி
ஓமய ஆனந்தத் தேறல் உணர்வுண்டே. **326**

இராப்பகல் அற்ற இடத்தே இருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகார்
இராப்பகல் அற்ற இறையடி இன்பத்து
இராப்பகல் மாயை இரண்டிடத் தேனே. **331**

சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி அழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானந் தன்னில் தலைப்பட்டுச்
சத்திய ஞானஆ னந்தத்திற் சார்தலே. **332**

சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாஞ்
சத்தி அருள்தரிற் சத்தன் அருளுண்டாஞ்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையு மாமே. **333**

தத்துவம் நீக்கி மருள்நீக்கித் தானாகிப்
பொய்த்தவம் நீக்கிமெய்ப் போகத்துட் போகியே
மெய்த்த சகமுண்டு விட்டுப் பரானந்தச்
சித்திய தாக்குஞ் சிவானந்தத் தேறலே. **334**

**பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே**
**நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சம்கெடப்**
**பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே:**

*சீவன் விலங்கு மனம் கொண்டு உலகப் பற்றி லிருந்தபோது பாசமாகிய இருள் சூழ்ந்து தன்னை யுணராதவனாக இருந்தான். சிவம் சீவனுக்குத் தோழமை முறையைத் தெரிவிக்கும் முறையில் தனது சத்தியைச் சிறிது சிறிதாகப் பதிப்பித்தலும், சீவனுக்கு விலங்கு மனம் மாற்றத்தைப் பெற்றுச் சிவன் தனக்குத் துணையென்பதறிந்து மேலும் விசுவாசிக்க விசுவாசிக்க, சிவமாகிய ஒளியும் சிறிது சிறிதாக வியாபகம் பெற்று ஒரு நிலையில் இருளைக் கீழ்ப்படுத்தும் அளவுக்குப் பெருகி நிற்கும். ஆரியன் என்றால் குருவுக்குப் பெயர். இங்கு சிவவொளிக்கு அப்பெயர் வந்தது. இதைப் ''பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே'' என்றார்.*

**விளக்கம்:**

*இங்குப் பல நுட்பங்கள் பொருந்திக் கிடக்கின்றன. உடல் பூதமயமானது. சூக்கும பிராண உடல் தன் மாத்திரையாலாயது. குணகஞ்சுகம் என்ற மனோமயகோசம் குணங்களின் தன்மைக்கேற்ப அமைவது. அதன் மேலான விஞ்ஞானமய கோசம், பருமனான தாமத இராசத குணத்தைவிட்டுச் சத்துவ குணத்தாலாயது. ஆனந்தமய கோசம் நிர்குண மயமானது. இதை முதலில் அறிந்துகொள்ள வேண்டும். குணங்கள் பற்றி நிற்கும் ஆகாயம் ஐந்து பிரிவாக உள்ளது. பூதாகாயம், குணமய ஆகாயம், குணரகித ஆகாயம், சூரியாகாயம், சித்தாகாயம் என்பனவாகும். குணத்தின் தன்மைக்கேற்ப இருளோ ஒளியோ உள்ளது. தாமத குணம் தரித்திரம், சோம்பு, நித்திரை, மயக்கம் முதலானவைகளாகும். இராசத குணம் யான் செய்தேன், என்னதென்றும், அதனால் மிகுத்துச் செய்யப்பட்ட கொலை களவு காமாதிகளின் முயற்சியும் பட்டுச் செல்வதாகும். சாத்துவிக குணம் ஞானம், நன்னெறி நடக்கை, சத்தியஞ் சொல்லுகை, அன்பு*

முதலான நற்பண்புகளாம். தாமதம் நல்ல இருளான அண்டகோசத்தைப் பொருந்தும். ராஜசம் சாம்பல் நிறமான அண்டகோச ஒளியில் சில நிறங்களும் காணப்படலாம். சாத்துவிகத் தன்மையினரின் அண்டகோசம் இருள் குறைந்து கொஞ்சம் ஒளியுடன் காணப்படும். சாத்துவிகத் தன்மையில் சாதகன் இறைவனின் விருப்பத்திற்குத் தன்னை ஒப்புவித்தல், பிருகிருதி மயமான ஆசையின்மை, ஈசுவரப் பற்று, சாஸ்திரப் பற்று, எல்லாரிடமும் அன்பாயிருத்த லாகிய குணங்கள் சிறப்புறுதலிலே சூரியாகாயம் என்ற ஒளியாகாயம் பெருகக் காரணமாக உள்ளது. சூரியாகாயக் கூறு வலுவடைந்தால் ஒவ்வோர் ஒளியணுவிலும் பூதாகாய அணுவையும் குணமயஆகாய அணுவையும் உள்ளடக்கினதாய்ச் சூரியாகாயம் விளங்கும். சூரியாகாயம் பற்றுள்ள அறிவும் சித்தாகாயம் என்பதில் அடங்கி அதன் கருவாய் விளங்கும்.

மனம் திருந்துவதால் குணம் திருந்துகிறது. மனம் பூமி, தேகம், போக போக்கியங்களில் பற்றுக் கொண்டபோது அவைகளின் சார்பான பூதாகாயம், குணமய ஆகாயம் சிறப்புற்றுக் குணரகித சூரிய சித்தாகாயங்களைக் கீழ்ப்படுத்தியுள்ளது. சிவம் இரண்டு நிலையிலும் இருந்தாலும், சீவ சுபாவம் உலக மயமானபோது அதன் பயனான கர்ம வினையைச் சீவன் தொலைக்கவேண்டிய நியதியில் கட்டுப்பட்டவனாக உள்ளான். சாத்துவிக குணம் அமைந்தபோது தெய்வ நியதியைப் புரட்சியின்றி ஏற்கத் தயாராகத் தன்னைத் தயார் செய்து கொள்வ துடன் தெய்வ விருப்பத்துக்கே தன்னை முழுதும் ஒப்புவித்து நிற்கிறான். இதைக் குழைத்த பத்து திருவாசகம் பார்த்தறிக. இதை ஆத்ம நிவேதனம் என்றழைப்பர்.

கூறும் நாவே முதலாகக் கூறுங்
  கரணம் எல்லாம்நீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை
  நன்மை முழுதும்நீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை
  உன்னை விரித்து ரைக்கில்

தேறும் வகைஎன் சிவலோகா திகைத்தால்
தேற்ற வேண்டாவோ.

வேண்டத்தக்க தறிவோய்நீ, வேண்ட
முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ, வேண்டி
என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாதருள் செய்தாய் யானும்
அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில் அதுவும்
உன்றன் விருப்பன்றே.

— குழைத்த பத்து, திருவாசகம்.

*அறிவுப் பொருளாகிய ஆன்மா நிர்க்குணம் பொருந்தியது. அது குணசம்பந்தத்தாலேயே பிருகிருதியைச் சேர்ந்து பிறப்புகளை அடைகிறது. ஆன்மா குணகஞ்சுகப் பிடியிலிருந்து விடுபடக் குணமற்ற சிவ வழிபாடு செய்ய வேண்டும். நிர்க்குணம் அமைய முதலில் சாத்துவிக குணம் இடம் பெறவேண்டும். மனிதன் தனது கஞ்சுகத்தைச் செய்து கொள்ளவும் முடியாது. அதை மாற்றிக் கொள்ளவும் முடியாது. இவைகளை ஆன்மாவுக்கு அளித்த இறைவனது அருளே இந்த மாற்றம் செய்ய வேண்டியுள்ளது. சிவத்தையே நினைந்தவர்க்கு மாற்றத்தை அவனே செய்து, சீவனுக்குத் தன்னை உணர்த்தவும், சீவன் சிவனை அறிந்து வழிபடவும் வழி அமைக்கப்படுகிறது. முன்னது அருள்; பின்னது அதற்கு வழி என்பதை அறிக.*

"தில்லை மூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குண மெழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகும்
துன்னிய கல்வி தோற்றியு மழித்தும்
என்னுடை யிருளை யேறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்."

இனி நேச அருளுக்கு வருவோம். உலகில் தான் பலகீனனாக இருந்தாலும் பக்கபலச் சிறப் புடையவன் பயமற்று வாழுகிறான் என்பது கண்கூடு. அதுபோலவே சிவத்தைத் தன்னிடம் உணர்ந்தவன் தனது பாதுகாப்பைச் சிவத்தினிடம் முழுதும் விட்டுவிட்டுப் பயமற்று வாழும் தன்மை உண்டாய் விடுகிறது. இதிலும் இரண்டு நிலைகள் உள்ளன. ஒன்று தனக்கு உதவி வேண்டும்போது இறைவனை வேண்டிப் பெறல். இதில் உதவியும் கிடைக்கும். கர்ம பலமும் தொடர்ந்து வரும். மற்றொன்று ஒன்றும் வேண்டாது இறைவன் விருப்பிற்கே தன்னை ஒப்புவித்திடல். இங்குத் திருவாசகம் கூறுவது பின்னைய நெறியாகும்.

ஒருகால், அர்ச்சுனன் கிருஷ்ண பரமாத்மாவை ஒரு கேள்வி கேட்டான். ''ஐயனே, நீ எங்களுக்கு எவ்வளவோ உதவிகள் செய்துள்ளாய். ஆனாலும் எங்களது கஷ்டங்கள் குறையாமல் நிறையத்தானே இருந்து வந்துள்ளது. இதன் காரணம் என்ன?'' என்று வினவினான். கிருஷ்ணன் அதற்குக் கூறிய பதில்: ''அருச்சுனா உன் பலத்தில் நம்பிக்கையுடன் என்னை உதவிக்குத்தானே வேண்டினாய். நீ விரும்பியபடி அளிக்கப்பட்டது. நீ என்னை முற்றிலும் சரணடைந்திருந்தால் இவ்வளவு கஷ்டங்களும் வராமலே செய்திருப்பேன்'' என்று விடை பகர்ந்தான். அதே பதில்தான் எல்லாருக்கும் உள்ளது.

தனித்துணை நீநிற்க யான் தருக்கித்
தலையால் நடந்த
வினைத்துணை யேனை விடுதிகண்
டாய் வினையேனு டைய
மனத்துணையே யென்றன் வாழ்முத
லேயெனக் கெய்ப்பில் வைப்பே
தினைத்துணை யேனும் பொறேன்துய
ராக்கையின் திண்வலையே.

— நீத்தல் விண்ணப்பம்

பித்தனென்றெனை உலகவர் பகர்வதோர்
காரண மிதுகேளீர்
ஒத்துச்சென்று தன்திருவருள் கூடிடும்
உபாயமது அறியாமே
செத்துப் போய்அருநர கிடைவீழ்வதற்
கொருப்படு கின்றேனை
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிச யங்கண்டாமே.

*திருமூலர் ஊழ் என்ற தலைப்பில் கூறியுள்ளவற்றை அறிய இங்குக் குறிக்கப்படுகிறது.*

செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்
வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரே. **2847**

தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை
கோன்முன்னஞ் சென்னி குறிவழி யேசென்று
நான்முன்னஞ் செய்ததே நன்னில மானதே. **2848**

ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டென் னுள்ளம்பிரிய கிலாவே. **2849**

வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதஞ் சண்டம் அடிக்கிலென்
நானொன்றி நாதனை நாடுவன் நானே. **2850**

ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்
ஏனைப் பதியினில் எம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை நானுழு வேனே! **2851**

கூடு கெடின்மற்றோர் கூடுசெய் வானுளன்
நாடு கெடினும் நமர்கெடு வாரில்லை
வீடு கெடின்மற்றோர் வீடுபுக் கால்ஒக்கும்
பாடது நந்தி பரிசறி வார்க்கே! 2852

சிவம் தன்னை வழிபடுபவனுக்குத் தனது உண்மை நிலையை உணர்த்துவதுடன் சீவனின் இயல்பான பிருதிவிமயமாய்ச் செல்லும் இயல்பையும் மாற்றிச் சீவனிடம் அவனை விட்டுப் பிரியாத தன்னிலையையும் உணர்த்திப் பெருங்கருணை வெள்ளமாய் நிற்பவன் என்று பொருள். சீவன் சொரியும் அன்பைவிட அவன் சொரியும் கருணை மிகுதியாகும் என்பதனால் 'பெருங்கருணைப் பேராறே' என்றார்.

தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும்
அன்ப போற்றி
பேர்ந்துமென் பொய்மை ஆட்கொண் டருளிடும்
பெருமை போற்றி
வார்ந்த நஞ்சயின்று வானோர்க் கமுதும்ஈ
வள்ளல் போற்றி
ஆர்ந்த நின்பாதம் நாயேற் கருளிட
வேண்டும் போற்றி.

— திருச்சதகம்

துர்ச்சங்க நிவர்த்திவந்து சிவஞானம்
விரும்புவது சுபேச்சை யாகும்
நற்சங்க மொழிவினவில் ஞானநூல்
பழகல்விசா ரணைஆம்நம்பி
முற்சங்க ஏடணைகள் வுடல்தநுமாநசி
இந்த மூன்றி னாலும்
சத்சங்கம் மனதில் உண்மை
அறிவுதித்தல் சத்துவா பத்திதானே.

— கைவல்லிய நவநீதம்.

**ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே:**

சீவன் ஆகாய மயமாய் ஒளியாகிறபோது பேரொளியான சிவம் பொருந்துகிறது. அது கண்ணுக்குப் புலப்படும் போகப் பொருள்போல் தூலக் கண்ணுக்குப் புலப்படாது போயினும், இன்பப் பொருளாக அமைகிறது பற்றி 'நுகராது நுகரும் அமுதம்' என்றார். விண்ணிறைந்து மண்ணிறைந்து என்றபோது எல்லாப் பூதங்களிலும் கலந்தும், அவற்றைக் கடந்தும் நிற்கின்ற எல்லையற்ற பெருமானே என்று கூறப்பட்டது.

**ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே:**

ஞானம் என்பது தன்னைப் பற்றியும் இறை வனைப் பற்றியும் பெறும் தெளிவான அறிவாகும். அவ்விதம் தெளிவு பெறாதவர்களின் மனமண்டலத்தில் ஒளியமையாது. ஒளி பெறாதவர்களிடம் சிவம் இருப்பினும், அஃது அவர்கள் அறிவுக்குப் புலப் படாதபடியால் ''ஓராதார் உள்ளத்தில் ஒளிக்கும் ஒளியானே'' என்றார்.

**நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே:**

இருள் மயமான குணங்களின் ஆளுகையிலிருந்த போது ஆகாயமய உயிர் தேகத்தில் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகங்களைப் பற்றுக் கோடாய்க் கொண்டு சைவ சித்தாந்தம் கூறும் புருடன் என்ற பேரினைப் பெற்றுக் காலம், நியதி, கலை, வித்தை, மாயை, அராகம் என்பவைகளுடன் பொருந்திக் குணகஞ்சுகத்தின் ஆளுகையில் தேகம் தொழிற்பட்டது. அப்போது சிவ தத்துவம் சிறப்புற விளங்கவில்லை. சிவதரிசனம் பெற்ற பிறகு இருள் மயமான குணகஞ்சுகமே ஒளிமயமான குணரகித ஆகாசம், சூரியாகாசம், சித்தாகாசம் என்றவைகளின் ஆளுகைக்குப் போய் மனோமயகோசமே விஞ்ஞானமய கோசமாகக் காட்சியளிக்கிறது. விஞ்ஞானம் என்றால் செய்முறைக்கு ஒத்த அறிவு என்று பொருள். புராண அறிவு விஞ்ஞான

அறிவாகாது. சமய அறிவு விஞ்ஞான அறிவாகாது. ஆத்ம சாதனையில் பிரத்யக்ஷமாய்க் காணும் பாக்கியமே சமயத்தின் உண்மை ஞானமாகும். இவ்விதம் இருளின் ஆதிக்க நிலையி லிருந்து ஒளியின் ஆதிக்க நிலைக்கு மாற்றம் அமையும்போது, தேகத்தில் ஒருவித உணர்வு மூலாதாரத்தி லிருந்து சிரசை வந்தடையும். இதை உணர்வு என்று கூறுவர். இதை வேதாந்த பாஷையில் அசம் சத்தி (பொய்யான உலகை மறத்தல்), பதார்த்தாபாவனை (பதார்த்த அபாவனை) உண்டாவதில் சிவானந்தம் பிரணவத்தில் லயித்தல் (துரிய பூமி அடைதல்) என்பர்.

உணர்வு என்றால் ஒருவித அறிவு என்றே கூறலாம். ஸ்திரீயிடம் பொருந்துவதில் ஒருவகை இன்ப அறிவு உண்டாகிறது. தேடின பொருள் கிட்டினபோது ஓர் இன்ப உணர்வு உண்டாகிறது. இவைகள் பொருள்களின் தொடர்பினால் அடைந்ததேயாகும். அதுபோல சிவதத்துவம் சிறப்புறும்போது செயற்பட வேண்டிய தத்துவங்கள் உள்ளன. அவைகள் சுத்தவித்தை, மகேசுவரம், சாதாக்கியம், விந்து நாதம் என்பனவாகும். சுத்தவித்தை என்றால், பந்திக்காத அறிவு என்று பொருள். முன்னர் வித்தியாதத்துவ வித்தை பந்தத்திற்குள்ளாக்குவது என்று பொருள். இவை இரண்டையும் வேறுபடுத்தி அறியவே சிவதத்துவத்தில் வரும் வித்தைக்குச் சுத்த வித்தை என்று பெயர் வைத்துள்ளனர். சுத்தவித்தை என்பது சிரசின்மேல் விளங்கும் ஒளி ஞானமாகும். இது முன்னர்ப் பிரணவத்தை விளக்கிய இடத்தில் கூறப்பட்டுள்ளது. பிரணவத்தின் விந்து நிலையிலிருந்துதான் உண்மையான ஞானம் பிறக்கின்றது. இங்கு நீராய் உருக்குதல் என்றால் என்ன என்பதை விளக்க வேண்டியுள்ளது. யோக முறையினர்க்கு அதிக விளக்கம் தேவையில்லை. சமயமுறையில் அதிக விளக்கம் வேண்டியுள்ளது. பஞ்சீகரண நியாயம் சிருஷ்டிக்கு வரும்போது முதற்கண் அமைவது பஞ்ச பிரமமாகும். குணமற்ற ஆகாயக் கூறு ஆன்மாவின் நிலையாகும். பிறவிக்கு வரும்போது ஒரு

அண்டாகாயமே சித்தாகாயம், சூரியாகாயம், குண ரகிதாகாயம், குணசகிதாகாயம், பூதாகாயம் எனப் பிரியும். அப்படிப் பிரிவதில் ஒவ்வொரு ஆகாயமும் அலமாரித்தட்டுபோல் மேல் கீழாக இருக்கவில்லை. எல்லாவித ஆகாய அணுக்களும் சதா சுழன்று கொண்டும், கீழும் மேலும் ஓடிக் கொண்டும் உள்ளன. அப்படி இருப்பதிலும் பூதாகாய அணுக்கள் கீழ்ப்பாகத்திலும் மூலாதார சுவாதிஷ்டான சக்கரங் களைச் சுற்றியும் அதிகமாகச் செயல்படுகின்றன. குணசகித அணுக்கள் அவைகளின்மேல் இடம் பெறுகின்றன. குணரகிதமான இருதயத்தை ஆசரிக்கின்றன. சூரியாகாச அணுக்கள் கண்டத்தை ஆசரிக்கின்றன. சித்தாகாய அணுக்கள் ஆக்ஞையைப் பற்றி அதிகம் தொழிற்படுகின்றன. ஓர் அணுவைப் பாதியாக்கினால் ஒரு பாதி சதாசிவக் கூறாகும். மற்ற பகுதியை நான்கு கூறாக்குவதில் மற்ற பூதநாயகர் கூறு அமையும். இவ்விதமாக சிரசைச் சூழ உள்ள சத்தியோசாதர், வாமதேவர், தத்புருடர், அகோரர், ஈசானர் என்ற மூர்த்தங்களின் ஆட்சி அமைப்பே உயிரில் அமைகின்றது. இது காரண நிலையாகும். காரிய நிலையில் பிரமன் பூதாகாயத் தலைவராகவும், விஷ்ணு குணசகித ஆகாயக் கூறிலும்; உருத்திரர் குணரகிதத்திலும், மகேஸ்வரர் சூரியாகாசத்திலும், சதாசிவர் சித்தாகாசத்திலும் தொழிற்படுவர். காரியம் என்பது தேகம். காரணம் என்பது ஆகாயம். இதனால் பிரமன் அரைப் பங்கு பூதாகாயமும், ஏனையவற்றில் அரைக்கால் அரைக்காலாகச் சேர்ந்த முறையில் பூதாகாயமான உடலை ஆட்சி செய்கிறார். அப்புத் தன்மையான அணுத் தன்மை அரையாகவும் ஏனையவை அரைக்கால் அரைக்காலாக உள்ளன. தேகத்திலுள்ள சுக்கிலம், இரத்தம், சிறுநீர் போன்ற நீர்ப் பகுதியை விஷ்ணு ஆளுகின்றார். காமாக்கினி, உதராக்கினி, ஞானாக்கினி, தேஜஸ் முதலிய அக்கினி தத்துவம் அரையாகவும் மற்றவை அரைக்கால் அரைக்காலாகவும் சேர்ந்து உருத்திரன் ஆட்சி செய்கிறார். காற்றின் பல பிரிவாக அரைப்பங்கும் மற்றவை அரைக்கால் அரைக்காலாகவும் சேர்ந்து மகேஸ்வரர் ஆட்சி

நடைபெறுகிறது. ஆகாய நிலைக்கு வந்த போது காரண நாயகர்களை அறியும் வாய்ப்பு உண்டாகிறது.

காரியமான பிரமனின் நிலையை உணரப் படுவது, காரணமான வாமதேவரிடமும் காரியமான விஷ்ணுவைத் தற்புருடராகச் சிரசிலும் காரியமான உருத்திரரை அகோரரிடமும், காரியமான மகேஸ்வரரை காரணமான பரிசத்தால் உருவச் சதாசிவரிடமும், காரியமான உருவ சதாசிவரைக் காரணமான ஈசானரிடமும் அறிவதிலும் லயக்கிரமம் முடிவுறும். உருவச் சதாசிவரே தேகத்திற்குக் காரணமாய் இருந்தவர். அவரே உருவமற்ற ஈசானனாகின்றபோது தேகத்தின் காரியம் முடிவுறும். இவ்விதமான காரிய நிலைக்கும் காரண நிலைக்கும் நேரே தொடர்பு சூக்குமமான ஆகாயத்தாலுள்ளது. இந்தத் தொடர்புக்குப் பெயர் உணர்வு. இது காரியத்திலும் காரணத்திலும் தேகத்திலேயே கண்ட பிறகுதான் ஈசானர் சிறப்புறுகிறார்.

இந்த வித்தையை விளக்கவே திருமூலர் தென்னாடு போந்ததாகக் கூறுகின்றார். சைவ சமயம் கயிலாய மரபு என்றும், மூலன் மரபு என்றும் இருவகையாகப் பிரிந்துள்ளது. திருவாசகம், திருமந்திரம் மூலன் மரபைப் பற்றியது. இது நேரே ஒளி நெறி செல்லுவது.

சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே. 84

நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. 85

பெற்றமும் மானும் மழுவும் பிறிவற்ற
தற்பரன் கற்பனை யாகுஞ் சராசரத்
தற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பதமும் அளித்தான் எங்கள் நந்தியே. 89

அற்றம் - சோர்வு.

விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன் சொற்போந்து
வளப்பில் கயிலை வழியில் வந்தேனே.

துளக்கறும் - அசைவை நிறுத்தும்.

நந்தி யருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி யருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி யருளால் மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தி யருளால் நானிருந் தேனே.

சதாசிவ ரூபம் என்ற நூலில், உயிரில் சதாசிவமாக விளங்குபவரே உடலில் விஷ்ணு என்று கூறப்பட்டுள்ளது. விஷ்ணு ஜலத்தில் உள்ளவர் என்றால் இரத்தம், சுக்கிலம், சிறுநீர், மூளை, மச்சை முதலியவை இவரின் ஆட்சி நிலை. இவர் சதா சிவரின் தத்புருட முகத்திலும், வாமதேவ முகத்திலும் கரணத்தில் லயமடைவர். இவ்விதமான உணர்வு மேலேறிச் செல்வது நீரோட்டம்போல் உள்ளதால் ''நீரா யுருக்கி என்னாருயிராய் நின்றானே'' என்று கூறப்பட்டுள்ளது.

தானொரு கூறு சதாசிவன் எம்இறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தானொரு கூற சலமய னாமே. 112

இந்த நீரை அறிவதில் சிவயோகம் உள்ளது. தீர்த்தம் என்ற தலைப்புள்ள திருமந்திரம் பார்த்தறிக.

உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்து நின்றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவ்ரே
கள்ள மனமுடைக் கல்வியி லோரே. 509

தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றும்
குளியறி வாளர்க்குக் கூடவும் ஒண்ணான்

வளியறி வாளர்க்கு வாய்க்கிலும் வாய்க்குந்
தெளிவறி வாளர்தஞ் சிந்தை யுளானே. **510**

உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்
கள்ளத்தி னாருங் கலந்தறிவார் இல்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பத்தருள் ளானே. **511**

அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானைச்
செறிவா னுறைபதஞ் சென்று வலங்கொள்
மறியார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார் புனல்மூழ்கப் புண்ணிய ராமே. **512**

பொருள்: *அமரத்துவம் பெற வல்லபமுடைய வர்கள் ஆதிப்பிரானை அறிவார்கள். சிவம் செறிந்த ஆகாய மண்டலத்தை அடைந்து இந்திரியங்களை வெற்றி காணும் முறையில் கீழ்நோக்குதலைத் தடுத்து, சங்கோசையுடன் சுழுமுனா நாடியில் பாயும் ஆகாய கங்கையில் பொறியறிவை அழித்து நின்றவர் புண்ணியராவர்.*

கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்
உடலுற்றுத் தேடுவார் தம்மை யொப்பாரிலர்,
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்
றுடலிற் புகுந்தமை ஒன்றறி யாரே. **513**

கலந்தது நீர துடம்பிற் கறுக்கும்
கலந்தது நீர துடம்பிற் சிவக்கும்
கலந்த்து நீர துடம்பில் வெளுக்குங்
கலந்தது நீர்நிலங் காற்றுது வாமே. **514**

*இந்நீர் கிரியைவழி பற்றியவர்க்குக் கிட்டாது என்றறியவும்:*

இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி
மலர்தொட்டுக் கொண்டேன் வரும்புனல் காணேன்
தலைதொட்ட நீர்கண்டு தாழ்ந்ததென் உள்ளந்
தலைதொட்டுக் கண்டேன் தவங்கண்ட வாறே.

இந்நீரின் அருமை பற்றியே சிவபூசைக்கு நீரின் அவசியம் கூறிய விஷயம்:

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. 1898

உணர்வினால் அமையும் ஒளியே நீர். அதுவே அறிந்து பூசிக்கத்தக்கது. கிரியை வழிபற்றியவர் கொள்ளும் புறநீரும் அல்ல புறப்பூவுமல்ல என்பதை அறியவும். புறத்திலுள்ள நீர் கிட்டாத பொருள் அல்ல. நீரில்லாவிடில் உயிர் வாழ்க்கையே இராது. இம்மந்திரத்திற்கும், சிவபூசை என்ற கிரியை வழி நிற்போருக்கும் ஒரு சம்பந்தமுமில்லை என்பதை நன்கறியவும்.

**இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே:**

சீவர்கள் பந்தமுற்ற நிலையில் அவர்களிடம் ஆணவமலம் சிறப்புற்று நிற்பதால், சிவம் அவர் களின் யோகக்ஷேமப் பொறுப்பை எடுத்துக் கொள்ளுவதில்லை. ஆணவத்தின் வழியே அவர்கள் செலுத்தப்பட்டு அதற்கேற்ற வினையை அனுபவித்தல் சீவனது உரிமையாகி விடுகிறது. தன்னுள்ளிருக்கும் சிவத்தை அறிந்து, அதையே நினைந்து கொண்டிருப்பவர்களின் மனத்தையும், அவர் களது கருவி கரணத்தையும் இயக்கும் பொறுப்பையும் அவைகட்கு வேண்டிய பராமரிப்பை அளிக்கும் கடமையையும் சிவமே மேற்கொள்ளுகிறது. இதுவேதான் "புகுவிப்பாய் நின்றொழும்பில்" என்று முன்னர்க் கூறப்பட்ட விஷயம். அதனாலேயே சிவன் இன்பமும் துன்பமும் இல்லானாகவும் உள்ளானாகவும் உள்ளான்.

**அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்**
**சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே:**

சிவம் தன்னை அன்பு செய்வார்க்குத் தன்னை அவனுடைய நண்பனாகக் காட்டியும், அவனுக்கு வேண்டியதை வேண்டியவாறு உபகரித்தும் வரு கின்றது.

*இங்ஙனம் அன்பர்களுக்கு அருளுபவனே! எல்லாச் சீவராசிகளாக அவர்களுடன் கலந்தும் அவர்களுடன் கலவாதும், சோதியாயும் பொருந்திய இருளாயும், இன்ன விதம் என்று உரைத்தற்கு அரிய பெருமையை யுடையவனே!*

*அன்பர்க்குச் சோதியாய் அறிவில் விளங்குவான்; அல்லாதார்க்கு இருள் மயமான அண்ட கோசத்தில் அவர்களறிவுக்குப் புலப்படாதவாறு நிற்பன்.*

*நேரே காட்சியிலேயே சிவத்தை முற்று மறிந்தவரில்லை. அப்படியிருக்க அவன் புகழை எவ்விதம் விளக்கிப் பிறர்க்கு அறிவிக்க இயலும் என்றபடி.*

*எத்தகைய உயிர் அறிவினாலும் அறிய முடியாதவன் இறைவன் என்பதற்கும் பெருமைக்கும் கீழே காண்க:*

பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க
இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதி லரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமு மாதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதுஞ் செல்வது மானோன் காண்க
கற்பமும் இறுதியுங் கண்டோன் காண்க
..........................................
..........................................
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்து
உற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்

கத்தந் திரத்தி னவ்வயி னொளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்.

— திருவண்டப் பகுதி

**ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே**
**ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே:**

*தூலவுடல் நம் கண்ணுக்குத் தெரிவது. சூக்கும தேகங்கள் வெற்றுக் கண்ணுக்குப் புலப்படாதது. எனினும் சூக்கும உடல் தேகத்தில் பொருந்தியுள்ள வரையில்தான் தூலதேகம் தொழிற்படுகிறது. தூலதேகத்தில் காணும் அறிவுநிலை சூக்குமம் பிரிந்தபோதே போய்விடுவதால் சூக்குமம் தேகத்தில் தான் அறிவின் நிலைக்களம் உள்ளது. சூக்கும தூலத்தில் தொடர்பு கொள்ளும்போது பிறப்பும், தொடர்பற்றபோது இறப்பும்,தேகத்திலுள்ளபோது திதி நிலையும் உள்ளன. இவைகளுக்குப் பிரமனும் உருத்திரனும் விஷ்ணுவும் சமஷ்டிநிலை அதிபர்களாவர். இவர்கள் நியதியில் அமைத்ததை நடத்தி வைப்பவர்களே தவிர, இவர்களாக ஒன்றும் செய்வதில்லை. அந்த நியதி சதாசிவரிடமும் மகேஸ்வரரிடமும் உள்ளது. இவர்கள் உயிரில் தொழிற்படுபவர்கள். தேகத்தில் தொழிற்படும் மூர்த்தங்களையும் தேகங்கடந்த உயிரில் தொழிற்படும் மூர்த்தங்களையும் கடந்து விளங்குபவனே!*

சோதித்த பேரொளிமுன் றைந்தென நின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்
நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் தவரைப் பிதற்று கின்றாரே. *110*

பரத்திலே ஒன்றாய் உள்ளாய்ப் புறமாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்

தரத்தினுள் தான்பல தன்மை யனாகிக்
கரத்தினுள் நின்று கழிவு செய்தானே. 111

நாபிக் கண்ணாசி நயன நடுவினுந்
தூபியோ டைந்தும் சுடர்விடு சோதியைத்
தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்
மூவரு மாக உணர்ந்திருந் தாரே. 2000

*சிவம் என்பது தூலத்தைத் தொழிற்படுத்தும் பிரம்மா விஷ்ணு உருத்திரனுமல்ல; சூக்குமத்தைத் தொழிற் படுத்தும் மகேசர் சதாசிவனுமல்ல. இவை களையெல்லாம் கடந்து விளங்குபவர் ஆதல்பற்றி 'அல்லானே' என்றார். சிரசுக்கு மேல் உள்ள சதாசிவரின் ஈசான முகத்தில் ஆதிக்கம் உடையது உருவமற்ற நிஷ்கள சிவமாகும். அதுவே அதன்பால் அன்பு பெருகும்படிச் செய்து தன்னை இழுத்துக் கொண்டதாகக் கூறுகிறார். சீவ வொளிக்குச் சிவவொளியே ஆதாரமாகையால் 'எந்தையே' என்று கூறியுள்ளார். பிறவிக்கு வருபவர்களுக்கு உரிய நியதி செய்வது சதாசிவரின் காரியமாகும். பிறவியை அறுப்பது சிவத்தின் காரியம் என்று அறியவும்.*

**கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்**
**நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே**
**போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே:**

*கூர்த்தல் - உவர்த்தல், மிகுத்தல். ஞானமே மிகுந்தபோதுதான் சிவமாவர். இதை இங்கு அறியத்தக்கது. உயிரின் உண்மையையும் இறைவனின் வியாபகத்தையும் அறிவதில் பலபடிகள் உள்ளன. ஞானம் மிகுந்தும் கிரியை குறைந்தும் காணப்படும் போது சுத்தவித்தை தொழிற்படத் தொடங்கும். ஞானம் குறைந்து கிரியை மிகுந்திடில் மகேசுவரர் பதம். இதுவே சிவபூசகர்நிலை. ஞானமும் கிரியையும் ஒத்து இருப்பின் சதாசிவலிங்க வழிபாடு. ஞானமேயாய் விளங்கினபோது சிவமேயாவர். ஞான சிந்தனையால் தன்னுண்மையையும் தலைவனையும் அறிதலே சிவபூசையாகும். இதில் புறப்பூசை யாதும் இல்லை என்பதை அறியவும். சுத்த தத்துவம்,*

மாகேசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்பவை சுத்த தத்துவ மாகும். இதுவே சிவன் விளங்குஞ் சுதந்திர வடிவாகும். இவைகள் காரண சரீரமாயிருத்தல்பற்றிக் கால வேறுபாடுகளுக் குள்ளாகாதது. தத்துவங்களின் விளக்க நிலை பற்றியும் தூல சூக்கும நிலை பற்றியும் முன்பின்னாகக் கூறப்படுகின்றது.

ஞானமே யானபோது சிவன்றொழின் ஞான மொக்கி
லீனமில் சதாசிவன் பேரீசனாந் தொழில தேறி
னூனமேற் கிரியை வித்தை யுருத்திர னிலய போகம்
ஆனபே ரதிகா ரத்தோ டதிகர ணத்த னாமே.

— *சிவஞான சித்தியார், சூ.1*

வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்க ளைந்துஞ்
சுத்த தத்துவஞ் சிவன்றன் சுதந்தர வடிவ மாகும்;
நித்தமென் றுரைப்பர் காலம் நீங்கிய நிலைமை யாலே
வைத்தனர் முற்பிற்பாடு வருவித்தார் கருமத் தாலே.

ஒருவனே யிராவ ணாதி பாவக முற்றாற் போலத்
தருவனிவ் வுலக மெல்லாம் தன்மையுந் திரியா னாகும்
வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்.

விளக்கம்:

ஒரு முட்டையில் உள்ள குஞ்சு அது வெளிவரும் பருவம் வரையில் உள்ளேயே வளர்ந்து கொண் டுள்ளது. அது எதற்குமேல் வளர இடமில்லையோ அப்போது முட்டை ஓடு உடைந்து குஞ்சு வெளி யாகிறது. அதுவரையில் அதற்கு வேண்டிய போஷக ஏற்பாடு முட்டைக்குள்ளேயே அமைக்கப் பட்டுள்ளது. அதுபோலவே மனிதனின் அண்ட பித்திகை தன் சிருஷ்டியில் உள்ளாகவே அமைக்கப்பட்ட எல்லைக்குள் மனிதன் உழலுகிறான். சிவமும் சத்தியும் அகண்டப் பொருள். ஆன்மாவும் அகண்டப் பொருள் என்பதை அறியாது பொய்த் தோற்றமாகிய உலகத்தை நினைவில்

கொண்டு அதை விட முடியாமல் அண்டப் பித்திகைக்குள்ளேயே உழலு கிறது. அகண்டமான சிவசத்தியுடன் தன்னை ஒன்று படுத்திக் கொள்வதில் ஆன்மாவின் அகண்டத் தன்மை சிறிது சிறிதாக உணரப்பட்டு அண்டப்பித்திகையை மோதி மோதி அண்டப் பித்திகை முட்டையின் ஓடு உடைந்து குஞ்சு வெளியாவதுபோல், ஆத்மனும் தனது கட்டான தத்துவத் தளைகளை நீக்கி வெளியாகிறான். அதனால் அங்கு வேண்டியது தன்னைப் பற்றிய அறிவும், தலைவனைப் பற்றிய அறிவுமே முக்கியமாகும். ஆத்மாவை அறிவதில் பிரபஞ்சம் உவர்ப்பை யடைகிறது.

இங்கு வாசகர்களுக்குப் பிரபஞ்ச உவர்ப்பை முதலில் பெறுவதா? ஞான சாதனையை முதலில் பெறுவதா? என ஐயம் எழலாம். அறிவாராய்ச்சி யினால் ஞான விசாரணை செய்து பிரபஞ்சத்தின் மாயை துன்பமே தரும் என்று வைராக்கியத்தால், இன்னலைத் தரும் பிரபஞ்ச மயக்கத்திலிருந்து ஒதுங்கி ஞான விசாரணையில் ஈடுபடுவது ஒருமுறை. இது துறவு நெறியாகும். சிவசக்தியின்பால் அன்பு கொண்ட அத்தகுதி சீவனுக்கு அமைய வேண்டும் என்றோ பிரபஞ்சத்தை விடவேண்டுமென்ற முயற்சியோ இல்லாது நிற்பதில் சிவசத்தியின் வியாபகம் அருளால் சீவனுக்குப் பதிக்கப்படுவதில் முன்னர் இனித்த பிரபஞ்சம் புளித்த பிரபஞ்சமாய்விடும். இவர்களது முயற்சியில்லாமலேயே பிரபஞ்சம் பற்றுந் தன்மையிலிருந்து விடுபடுவர். இந்த முறையையே வேதகால ரிஷிகள் கையாண்டு சித்தி பெற்றுள்ளனர். வேதாந்த அடிப்படையான உபநிஷத்துக்களைப் படைத்தவரெல்லாம் இல்லறத்தார்களே என்பதை அறியவும். கூர்த்தல் இரு முறையிலும் பொருள் கொள்ளத்தக்கதாக உள்ளபடியால் இவ்விதம் விளக்கப்பட்டது.

இரு நெறிகளைப் பற்றியவர்களுக்கும் தங்கள் மனமண்டலமான சிதாகாயத்தில் மனத்தை எதிரிட்டுக் காண முடியாத சிவத்தை மகாசூட்சுமமான ஆகாய

உணர்வால் மகாநுட்பமாய் உணரப்படும் உணர்வு மயமானவனே! சீவனை விட்டுப் போதலையும் வருதலையும் செய்யாது எப்போதும் சீவனில் புணர்ந்திருக்கும் மலமற்ற புண்ணிய சொரூபமே!

'பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்' என்ற தலைப்பில் சீவனது ஒளி பசுவின் உரோமத்தின் கனத்தை ஒரு கோடி கூறிட்டால் சீவ அணுப்பிரமாணம் அளிக்கப்பட்டது. அதனால் வெற்றுக் கண்ணுக்கு அத்தகைய சூட்சும ஒளியைக் காணச் சத்தியில்லை என்பதுபற்றி 'நோக்கரிய நோக்கே!' என்று கூறி விளக்கினார். கண்ணறிவிற்குப் புலப்படாத அவ்வொளி கருத் தறிவுக்குச் சூட்சுமமாய் விளங்கும் என்பது பற்றி 'நுணுக்கரிய நுண்ணுணர்வே' என்றார்.

ஒளிக்கிரணத்தைத் தூலக்கண்ணால் பிரித்துக் காண முடியாது என்பதை அறியவும். சிவம் சீவர்களை விட்டு அகன்றால்தானே மீண்டும் புணர்வு ஏற்படும்; வரவு ஏற்படும். சீவர்களை விட்டு அகலாதபோது போதலுமில்லை; வருதலுமில்லை; புணர்தலுமில்லை.

**காக்கும்எம் காவலனே காண்பரிய பேரொளியே**
**ஆற்றின்ப வெள்ளமே யத்தா மிக்காய்நின்ற**
**தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்**
**மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்**
**தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்**
**ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே.**

1. போதலும் வருதலும் புணர்தலுமற்ற சிவாதித்தனே, எல்லா உயிர்களையும் கலந்திருப்பதாக உள்ளது பற்றிக் 'காக்கும்எம் காவலனே!' என்றார். பிரணவ வடிவில் விளங்கும் சிவமே எல்லாவுயிர் களையும் காத்து நிற்கிறது.

2. சிவாதித்தன் நமது வெற்றுக் கண்ணினால் காண முடியாத பேரொளியாகவுள்ளது. அவ்வாறு பேரொளியாக உள்ளவனே!

3. ஆனால், அதை அறிபவருக்கு ஆற்றின் வெள்ளம் போல் எங்கும் பரந்து இன்பமாய் இருப்பவனே!

4. அதுவே சீவவொளிக்குத் தந்தையாகும்.

5. மிகுத்து நின்ற சுடரொளியாய் விளங்குபவனே!

6. விளக்க முடியாத சூட்சும உணர்வுமயமானவனே!

7. மாறிக் கொண்டிருப்பதே மாயையின் செயல். எல்லா உயிருள்ள பொருள்களும் பிணி, மூப்பு, நலிவு, மரணம் முதலியவைகளை அடைகின்றன. சீவாணுக்கள் ஒவ்வொரு நிமிஷமும் மாறிக்கொண்டே இருக்கின்றன. இவ்விதம் மாறிக் கொண்டிருக்கும் உலகில் ஒவ்வொரு வகை அறிவாய்த் தோன்றி மறைந்து தெளிவினைப் பெறச் செய்பவனே! அவ்வகையாகத் தேற்றப்பட்டவர்களின் தெளிந்த ஞான சொரூபமே!

8. என் சிந்தனையுள் ஊறி விளங்கும் உண்ணத்தக்க அமுதமே!

9. என்னை அடிமையாக உடையவனே!

(1) **சிவாதித்தன் - திருமந்திரம்**

தானே விரிசுடர் மூன்றுமொன்றாய் நிற்குந்
தானே யயன்மாலென நின்று தாபிக்கும்
தானே யுடலுயிர் வேறின்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. 2003

தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே! 2004

(2) அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே!
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக்கடந்த
போகமே போகத்தின் பொலிவே!
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே!

ஒப்புனக் கில்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே!
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே!

அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட,
பிஞ்ஞகா! பெரியஎம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை உகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே
ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

*— பிடித்தபத்து, திருவாசகம்*

(3) நீரின்ப வெள்ளத்துள் நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி
மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்ப வெள்ளத்துருக் கொண்டு
தொண்டரை உள்ளங் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ
லேசென்று பேணு மினே.

*— திருப்பாண்டிப் பதிகம், திருவாசகம்*

**வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப**
**ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று**
**போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்.**

வெவ்வேறு விதமான விகாரங்களையுடைய ஊனாலாகிய உடம்பினுள் அடைபட்டுக் கிடத்தலை, நான் பொறுக்கமாட்டேன். எம் தலைவா! ஓங்கார சொரூபமான உன்னைப் புகழ்ந்து நினைந்து பொய்யான உடலைக் கடந்து சிவதத்துவமாக மாறினவர்.

சிவதத்துவம் என்பது குண்டலினிமேல் எழுந்த சிரசை அடைந்து, மகேசர் நிலையான ஒளியைக் கடந்து, சதாசிவ நிலையான நாதத்தைக் கடந்து, அழியாத சிவசத்தியில் அறிவுருவாக நிற்றல் என்ப தாகும்.

இந்நிலை கைவரப் பெற்றால், சைவ சித்தாந்தம் கூறும் 36 தத்துவத்தையும் கடந்தவரே யாவர்.

**மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே**
**கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே.**

மறுபடியும் பூமிக்கு வந்து வினைகளை அனுபவிக்கும் வஞ்சகத் தன்மையுடைய ஐம்புலனுக்கிடமான உடலுக்குரிய கட்டை அழிக்க வல்லவனே.

தேகத்தைக் கடந்து சிரசின்மேல் பன்னிரண்டு விரற்கடையில் விளங்கும் சிவாதித்தனை அறிந்தவர், உருவத்தில் மகேசுவரர்களாகவே ஆவர். அதாவது உருவ மூர்த்தியில் உயர்ந்த திருவுருவுள்ள மகேசுவரர் ஆவர். அத்தகையோர் நிலையும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

1. தன்னையும் தலைவனையும் அறிந்து நிட்டை கூடல்; இலயமடைந்து விடுதல்.

2. சிவத்துடன் இலயமடையாமல் தன்னையும் தலைவனையும் அறிந்து சதாசிவத்தைத் தொட்டுக் கொண்டிருத்தல்.

3. இவ்விரு வகையினரும் இந்திரியங்களை வென்ற வர்களேதான். முன்னவர் பிறவிக்கு 'வராமல் இலய மடைந்துவிடுவர். பின்னவர் பிறவிக்கு வரவும் கூடும், வராமலும் சூக்கும உலகங்களில் இருக்கலாம். இந்தப் பின்னவர் வகுப்பில்தான் அஷ்ட வித்தியேசுவரர் அணுசதாசிவர் முதலிய ஞானிகள் உள்ளனர்.

**நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே**
**தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே**

அண்டாகாயத்தில் விளங்கும் இருளின் நடுவில் நடனம் செய்து கொண்டு ஒலியை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் தலைவனே.

பயிறல் - ஒலித்தல், பழகுதல்.

தேகமாகிய இருதயத்தில் நடித்துக் கொண்டிருப் பவனே.

அஞ்ஞான இருள் சூழ்ந்த பழைமையான சீவ வொளியில் விளங்குபவனே.

தென் - கருமை, தென்புறம்.

சிரசின் தென்புறம் அகோரரது ஆட்சி நிலை. இவரேதான் சீவனின் இருளில் விளங்குபவர். இது காரணநிலை - இருதயமான தில்லை காரிய நிலையாகும்.

சீவன் உலகமயமாயிருந்தபோது அதன் அண்ட கோசம் இருண்ட காரிருளாக இருந்தது. அந்த இருளின் நடுவில் சிவம் சூக்கும அசைவால் கீழுள்ளவைகளை இயக்கிக் கொண்டிருந்தது. கொடிய விஷய வாசனைகள் அடங்கிய இருதயச் சக்கரத்தில் இருந்தும் தேக அசைவினைச் செய்தது. அதுவே சீவனாக உள்ள நிலைமையில் அகோரராக இருந்து சீவமண்டலத்தை அசைத்துக் கொண்டிருந்தது.

நள்ளிருளில் நட்டம் செய்யும் சிவநடனமே கீழுள்ளவைகளுக்குங் காரணம்.

**அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று**
**சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்**
**சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்**
**செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்**
**பல்லோரும் ஏத்தப் பணிந்து.**

*துன்பத்தைத் தரும் பிறவியை வராமல் செய்பவனே.*

*ஓங்கார சொரூபனானவனை வாக்குருவமான வசனங்களால் புகழ அருமையானவனைப் புகழ்ந்து அவனது திருவடியின்கீழ்ப் பொருந்தும் வகையை அறிந்து சொல்லப்பட்ட திருவாசகக் கருத்துகளை அறிந்து சொல்லுபவர், சிவபுரத்தில் வாழும் சிவ நேயச் செல்வராவர். அவர்கள் இறைவன் திருவடியின் கீழ்ப் பலரும் வணங்கும்படியாக நித்திய முத்தராக வாழ்வர். இவ்வரிகளில் திருவாசகத்தை அறியும் முறைமையையும், அறிந்தவர் அடையும் பயனையும் கூறிச் சிவபுராணம் முடிவு பெற்றுள்ளது. சிவத்தின் அடி தெரிந்தவர், சிவத்தின் அடிக்கீழ் வாழ்வார் என்று முடித்துள்ளார். மணிவாசகர் சிவத்தின் திருவடியே பூமியாகவும் வானமாகவும் மக்களுக்குத் தாரகமாயுள்ளது என்றார். சீவர்களின் அறிவில் பொருந்தி இயக்குபவனே என்றார். அறிவு விளங்கும் இடமும், சிவம் விளங்கும் இடமும் ஒரே இடமாதல் வேண்டும். இதைத் திருமூலர் கூறியது கொண்டு ஆராய்வோம்..*

ஓங்காரத் துள்ளே யுதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்
ஓங்கா ராதீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சிவபர சிவ ரூபமே. **2677**

*பஞ்சபூதங்களும், சோம சூரியாக்கினியும் பொருந்தி அசையும் பொருளும் அசையாப் பொருளும் உண்டாயின. ஓங்காரத்தின் உச்சியில் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானாகலர் என்ற மூவகை ஆன்மாக்களும் உள்ளன. ஓங்காரமே சீவனாகவும் ஆன்மாவாகவும் சிவமாகவும் உள்ளது.*

அதாவது ஒவ்வோர் உயிரின் அண்ட எல்லையில் சிவமும் ஆன்மாவும் உள்ளது. சிவம் வியாபகமாய் அறிவு மயமாய் உள்ளது. ஆன்மா வியாபக மில்லாமல் இருளில் உள்ளது.

ஆன்மாவின் இருளான அண்டகோசத்தில் உச்சியில் நடிப்பதே சிவம். அதற்குக்கீழ் ஆன்மாவின் இச்சை கிரியை ஞானம் என்ற சத்திகள் தூண்டப்படுகின்றன. உருவமற்ற ஆன்மா செயலுக்கு வரும்போது உருவத்தைத் தரிக்கிறது ஆதிசத்தியாகும். அவ்வுருவ சத்தியின் செயல் திறனே - இச்சை, ஞானம், கிரியை என மூன்றாயிற்று. இம்மூன்றும் ஒன்றுக் கொன்று தொடர்புடையன.




கிரியை என்பது ஞானேந்திரியம் கன்மேந்திரி யங்களை உள்ளடக்கிக் கொண்டு, சிரசின் கீழ்ப்பகுதிகளிலிருந்து அறிந்தும் செய்துகொண்டும் உள்ள சத்தியாகும். இச்சையும் ஞானமும் மூளையிலும் அதன் மேலும் தொழிற்படும் நிலைகளாகும். சிறப்பு நிலை ஆகாயக் கூறாகும். ஆன்மா அஞ்ஞான நிலையில் வினைக்கேற்பச் செலுத்தப்படுகிறது. அப்படிச் செலுத்தப்படும் நிலை ஆகாயக் கூறாலான காரண சரீரத்தில் உள்ளது. காரணம் மரத்தின் வித்து போலவும், காரியம் மரம்போலவும் அமைகிறது. காரணம் கலக்கும் ஆகாய

வழிபாட்டில் தான் இறைவனை அறிந்து வழிபட்டவர் சிவபுரத்திற்குச் செல்வர். அங்கு தங்குவார் என்றார்.

சிவபுராணம் தொடக்கத்திலும்

| | |
|---|---|
| தாள் வாழ்க என்று | 4 வரிகள் |
| அடி வாழ்க என்று | 2 வரிகள் |
| கழல்கள் வெல்க | 3 வரிகள் |
| கழல் | ஒரு வரி |
| அடிபோற்றி | 7 வரிகள் |

இறுதியில் திருவடிக் கீழ் என்றார். திருவாசகம் முற்றிலும் கூறப்போனால் திருவடிப் புகழ்ச்சியேதான். எவ்வளவு எடுத்துக் கூறினாலும் மக்கள் ஐயம் தெளிவுறுவதில்லை.

திருமூலர், "திருவடிப்பேறு" என்று ஆறாந் தந்திரத்தில் ஒரு தலைப்புக் கொடுத்து 15 மந்திரங்களில் விளக்கியுள்ளார். "அடிதலை அறியும் திறங்கூறல்" என்ற தலைப்பில் எட்டாந்தந்திரத்தில் பத்து மந்திரங்களால் விளக்கியுள்ளார். சதாசிவமூர்த்தி தனது சத்தியோசாத முகத்தினால் தேகத்தில் எட்டுறுப்புகளை ஆளுகிறார் என்று முன்னர்க் கூறப்பட்டது. அவைகளுள் கைமூலம் கால் மூலம் என்ற நான்கு பாகங்களும், தேகத்தின் கீழ்ப்பகுதியாகும். இரண்டு புயங்களும் முகத்தின் முன் பக்கமும் பிடரியும் அறிவதில் மேல்பாகம் உள்ளது. மேல்பாகம் தொழிற்படும்போது அதற்குக் கீழான வாமதேவரின் அகோரர் பகுதிகள் வலுவிழக்கும். எஞ்சியவை சத்தியோசாதர் தற்புருடர் ஈசானர் என்ற மூன்று முகங்களே ஆகும். இவைகள் சிரசைச் சூழவும் சிரசின் மேல் நோக்கிய முகமான ஈசானர் தொழிற்படுமிடங்களுமாகும். இவைகளே சதாசிவரின் விரிந்த நிலையாகும். மிகப் பழைமையான ரிக்வேத கால ரிஷிகள் இதை அறிந்திருந்தனர்.

தைத்ரீயம் 4ஆவது பிரச்சனத்தில் இம்மந்திரம் கூறப்படுகிறது.

"ஈசானாஸ் சர்வ வித்யானாம் ஈசுவரசர்வ
பூதானாம் பிர்மாதி பதிர் பிரஹ்மணோதிபர்
பிர்மா சிவோமே யஸ்து சதாசிவோம்"

இம்மந்திரத்தால் நியாசம் முறை ஈசான கலா பஞ்சகம்.

1. ஈசான சர்வ வித்யானாம் சசனியே நம ஊர்த்துவ மூர்த்தினி.

2. ஈஸ்வர சர்வபூதானாம் அங்கதாயை - கிழக்கு சிரசு.

3. பிர்மாதிபர் பிரஹ்மனோதிபதிர், பிர்மேஷ் டாயை - தெற்கு சிரசு.

4. சிவோமே அஸ்துமரீசியே - வடக்கு சிரசு.

5. சதாசிவோம் ஜ்வாலின்யே - மேற்கு சிரசு.

**தத்புருட நியாசம்**

"தத்புருடாய வித்மஹே மஹா தேவாய தீமஹி
தன்னோ ருத்ரப் பிரசோ தயாத்"

இது ருத்ர காயத்திரியாகும்.

1. தற்புருடாய வித்மஹே சாந்தியை - கிழக்கு முகம்.

2. மஹா தேவாய தீமஹி வித்யாயை - தெற்கு முகம்.

3. தன்னோ ருத்ர பிரதிஷ்டாயை - வடக்கு முகம்.

4. பிரசோதயாத் நிவ்ருத்தியை - மேற்கு முகம்.

**சத்யோஜாத நியாசம்**

"சத்தியோ ஜாதம் பரபத்யாமி சத்யோ ஜாதாய
வை நமோ நம: பவே பவே நாதிபவே
பவஸ்மாம் பவோத் பவாய நம:"

1. சத்தியோஜாத் பிரபத்யாமி சித்தி - வலது பாதம்.

2. சத்தியோஜாத யவை நம ருத்தியை - இடது பாதம்

3. பவேத் யுத்யை - வலது கை

4. அபவே லக்ஷ்மியை - இடது கை

5. அநாதிபவே மேதாயை - மூக்கு

6. பவஸ்வமாம் காந்தியை - பிடரி

7. பவ ஸ்வதாயை - வலது தோள்

8. உத்பவாயநமோ ருத்ரை - இடது தோள்.

இவ்வாறு மந்திரங்களாகக் காட்டி விளக்கியுள்ளனர். மந்திரம் வடமொழி. பொருள் யாரும் சுலபமாய் அறியாது பழக்கத்தால் நியாசம் செய்து கொண்டுள்ளனர். அவ்விதம் சொல்லும் ஆற்றல் வாக்கு ரூபமாகத் தொழிற்படும் என்பது வைதிக கர்ம வாதிகள் நியாயம். மனம் பதியாதபோது ஒரு மந்திரமும் தொழிற்படாது என்பதை அவர்கள் அறியவில்லை. சிலருக்குக் கிரியை பயனளிப்பதற்குத் திடசங்கல்பமேதான் காரணம்.

இம்மந்திரக் கருத்தை ஆராய்வோம். ஒரு தேங்காய் எடுத்து விளக்குவோம். தேங்காய்க்கு ஆதாரம் தென்னை மரத்தின் குலையாகும். தென்னை மரத்தின் குடுமிப் பகுதியில் குலையுள்ளது. தென்னை மரம் பூமியில் வேரூன்றி நின்றாலும், தேங்காய்க்கு ஆதாரம் தென்னை மரத்தின்மேல் பாகமே தவிர, கீழ்ப்பாகம் அல்ல. அதுபோல சிவம் ஏழுலகங்களையும் ஊடுருவி மேலேயும் உள்ளது. ஏழு பாதாள உலகங்களையும் ஊடுருவிக் கீழேயும் உள்ளது. மனிதன் பிறவிக்கு வரும் காரணம் ஆகாயத்திலே யுள்ளது. அங்கிருந்து சிருஷ்டியின்போது பூமிக்குத் தள்ளப்பட்டும், ஒழிவின்போது மேலே இழுக்கவும் படுகிறான். பூமியில் உள்ள வாழ்க்கைக் காலம் ஏதோ ஒரு கால அளவுதான். ஆகாயம் கீழும் மேலும், உள்ளும் பக்கமுமாகச் சூழ்ந்திருக்கிறதில் மனிதனின் வாழ்க்கை நடைபெறுகிறது. மேல்பகுதியை அறிவதில் ஞானம் உள்ளது. பேரறிவுப் பொருள் ஆன்மாவின் அறிவில் சில அறிவை விளக்கத் திட்டமிட்டுப் பிறவிக்கு விடுகிறது.

சகல அறிவும் மனிதனிடம் அவனுடைய மூளையில் அடங்கியுள்ளது. அசையும் கருவிகளுக்கும் அறியும் கருவிகளுக்கும் ஆட்சிப் பீடம் மூளையேயாகும். நமது அறிவில் சிவத்தை எழுந்தருளச் செய்வதே சரியான ஞானமாகும்.

### திருமந்திரம் எட்டாம் தந்திரம்

#### அடிதலையறியும் திறங்கூறல்

காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந்த சத்தி யருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே. **2445**

பொருள்: அறிவிலிகள் கால் என்பதையும் தலையென்பதையும் அறிய மாட்டார்கள். கால் என்பது சிவத்தின் சத்தியாகும். அது விளக்குவதற்கு அருளே காரணம் என்பர். அவ்வித அருள் கிட்டிய பிறகு அத்துடன் ஒன்றுவதே ஞானம் என்று கூறுவர். ஆனால், இப்படிக் கூறுபவர்கள் ஞானத்தைக் காட்டுவதில்லை. தேகத்துக்குடைய ஆத்மன் உயிராகத் தலையில் பொருந்தியுள்ளான். அதைக் காட்ட அது உண்மையான ஞானமும் வீடாகவும் அமையும்.

விளக்கம்:

ஆத்மா துவாதசாந்த வெளியில் உள்ளது. அதன் கருவிகளான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் சீவனில் பொருந்தி அறிவு பொருந்திய மூளையை இடமாகப் பெற்றுள்ளது. சீவனே ஆத்மாவின் கால் என்றறிக.

தலையடி யாவ தறியார் காயத்தில்
தலையடி யுச்சியில் உள்ளது மூலம்
தலையடி யான அறிவை அறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே.

பொருள்: தேகத்தில் தலையை அடிப்பாகம் என்பதை அறியமாட்டார். அத்தகைய அடிப் பாகமான தலையில்

தேகத்தின் மூலம் உள்ளது. இவ்விதம் தேகத்தைத் தாங்குவது தலையில் உள்ள சகஸ்ரதளம் என்றிந்தவர், தலையாலறியப்படும் ஞான சொரூபமாகவே இருந்தவ ராவர். சம்சார விருக்ஷம் தலை கீழாக உள்ள ஒரு மரம். அது அதன் விழுதுகளாகவே பூமியில் நிலை பெற்றுள்ளது என்பது பகவத் கீதை. எல்லா அறிவும் செயலும் தலையிலிருந்தே தொழிற்படுகிறது.

நின்றான் நிலமுழு தண்டமும் மேலுற
வன்றாள் அசுரர் அமரரும் உய்ந்திடப்
பின்றான் உலகம் படைத்தவன் போர்நந்தி
தன்றா ளிணையென் தலைமிசை யானதே. 2427

பொருள்: சிவம் கீழேழு உலகங்களையும் மேலேழு உலகங்களையும் தாங்கும்படியாக யாவற்றிலும் ஊடுருவியுள்ளது. அசுரர் பலங்கொண்டு பூமியில் இருப்புக் கொள்வர். தேவர்கள் ஒளி மண்டலத்தில் உள்ளனர். இவ்வாறாக உலகைப் படைத் தவன் பெயர் நந்தியாகும். தேவாதிதேவனாகிய சிவத்தின் திருவடி என் தலையின் மேலே உள்ளது: தேவன் என்றாலே ஒளியுடையோன் என்று பெயர். எல்லா ஒளிகளுக்கும் சிவமே காரணம். மனிதன் ஒளி புருஷனாவதற்கும் சிவவொளியேதான் காரணம்.

சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையும் என்னை யறியகில னாகில்
எந்தையை யானும் அறிய கிலேனே. 2428

பொருள்: எனது மனமண்டலம் நிறைந்த சிரசில் எனது தந்தையின் திருவடியைப் பதிப்பித்துள்ளேன். என் மனம் அவன் திருவடிக்குக் கீழாகும். எனது தந்தை என்னையறியாவிடில், நான் என் தந்தையை அறிய மாட்டாதவனாவேன்.

முற்றிலும் சீவ விருப்பப்படி செல்லாமல் சிவ விருப்பப்படி நடத்தலே, சிந்தையினுள்ளே எந்தை திருவடி என்றதன் கருத்து. சிவம் வியாபக அறிவுடன் கூடியது.

சீவன் சிற்றறிவுடன் கூடியுள்ளபடியால் தன்னையும் காணாது தலைவனையும் காணாது மயங்கும்போது, சிவமே தேடும் சீவனுக்கு அறிந்து உபகரிக்கும் என்றபடி.

பன்னாத பாரொளிக் கப்புறத் தப்பால்
என்னா யகனார் இசைந்தாங் கிருந்திட
முன்னா ஒளியு முரைசெய்யா மந்திரஞ்
சொன்னான் கழலிணை சூடி நின்றேனே. 2429

பொருள்: பூமியில் உள்ள ஒளி பெளதிக சூரிய னாலும் சந்திரனாலும் அமைவது. இவ்வொளிகள் அகவிருளைப் போக்காது. பூமியில் காணப்படும் எல்லா ஒளிகளையும் கடந்தும் அதற்கப்பாலும் யாராலும் வரையறை செய்து விளக்க முடியாத இடமே, என் நாயகனார் பொருந்தியிருக்கும் இடம் ஆகும். நினைத்தற்கு அரிய ஒளியையும் வாயினால் உபதேசிக்காத பிரணவ உபதேசத்தையும் எனக்கு அளித்தான். நான் அவனது திருவடியான விந்து நாதங்களை எனது சிரசில் தரித்து நின்றேன்.

பதியது தோற்றம் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பத மோது
நதிபொதி யுஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயுங் காலங்கள் கண்டுகொ ளீரே. 2430

பொருள்: பசுக்களுக்குப் பதி சதாசிவராவர். அவரை உணர்த்தும் பிரணவத் தியானத்திலிருங்கள். சந்திர மண்டல அறிவினால் இறைவனின் திரு வடியைத் தியானியுங்கள். அவன் சர்வ பாபங்களையும் போக்கும் கங்கையைச் சடையிலும், உமாதேவியை ஒரு பாகத்திலும் கொண்டவன். இம்முறையில் சிவகதி பெறுமாறு கண்டு கொள்ளுங்கள்.

தரித்து நின்றானடி தன்னிடம் நெஞ்சில்
தரித்து நின்றான் அமராபதி நாதன்
கரித்து நின்றான் கருதாதவர் சிந்தை
பரித்து நின்றானப் பரிபாகத் தானே. 2431

பொருள்: மேலே கண்டவாறு தியானிப்பவர் நெஞ்சில் அவன் நிலையாகத் தரித்து நின்றான். தேவர்களுக் கெல்லாம் தலைவனான சிவன் நிலைபெற்றிருந்தான். அவனை நினையாதவர் நெஞ்சில் அவன் ஒளியைக் காட்டாது இருளாகவே நின்றான். பக்குவ ஆன்மாக்களை அவன் தாங்கிக் கொள்பவனாக இருந்தான். பரித்தல் - தாங்குதல்.

ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள
தன்தாதை தாளும் இரண்டுள காயத்துள்
நன்றாகக் காய்ச்சிப் பதஞ்செய வல்லார்கட்
கின்றே சென்றிதனை யெய்தலு மாமே. **2432**

பொருள்: சகஸ்ரதளம் என்ற ஒரு தாமரையுள்ளது. அது விரிந்தால், சோம சூரிய அக்கினி என்ற மூன்று ஒளிகள் முறையே இடது கண், வலது கண், பிடரிக்கண் என்பவைகளில் உள்ளன. இவைகள் விளங்க இறைவன் திருவடி என்ற விந்து நாதங்கள் இரண்டுள்ளன. உடலில் இவைகளை அறிந்து நன்றாக வெதுப்பித்துப் பக்குவம் செய்ய வல்லவர், இன்றே சென்று ஈசனை அடையக்கூடும்.

கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
பால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றுயக்கறப்
பால்கொண்ட வென்னைப் பரன்கொள்ள நாடினான்
மேல்கொண்ட டென்செம்மை விளம்ப வொண்ணாதே. **2433**

பொருள்: விந்து நாதங்கள் என் சிரசில் மோது வதால் கீழ் நோக்குதலையுடைய என்னுடைய அறிவு விடுபட்டுப் பிரகிருதியின் வழித்தாய மயக்க, அறிவு சோர்வு நீங்கச் சிவத்தின்பால் மனங்கொண்ட என்னை ஆட்கொள்ளும்படி நாடினான். அதன்மேல் நான் அடைந்த நன்மைகளை அளவிட்டுக் கூற முடியாது.

பெற்ற புதல்வர்போற் பேணிய நாற்றமும்
குற்றமுங் கண்டு குணங்குறை செய்வோர்
பற்றைய வீச னுயிரது பான்மைக்குச்
செற்ற மிலாச்செய்கைக் கெய்தின செய்யுமே. **2434**

பொருள்: தந்தை தாம் பெற்ற புதல்வர்களின் நற்செய்கைகளைப் புகழவும், தீச் செயலைக் கண்டு திருத்தவும் செய்வதுபோல, ஈசனைப் பற்றிய உயிருக்கு இறைவனார் செய்யும் தன்மையாகும். இவ்விதம் செய்வதனால் எவ்வித வெறுப்புணர்ச்சியும் இன்றி உயிரின் தன்மைக்கேற்றதைச் செய்வன். இதே கருத்துகளைத் திருவாசகம் அற்புதப்பத்து சென்னிப்பத்தில் காணலாம்.

அற்புதம் - ஞானம்.

திருமூலர் ''அற்புதப் பத்து'' என்ற தலைப்புக் கொடுத்து 82 மந்திரத்தில் விளக்கியுள்ளார்.

பிறவிக்குக் காரணம் உருவம் பற்றிய பொருள்களின் பற்றுதலேதான். அதையேதான் வேறு பாஷையில் அகங்காரம் என்றனர். உருவிலாச் சத்தியப் பொருளான சிவத்தைப் பற்றினவர் தனது உருவை விடுவர். அகண்ட சிவத்திற்கும் மந்திரம் பிரணவமேதான். அதனால் அது மௌன வித்தையாயிற்று.

உருவரு வாவது யாதென் றுரைத்
திடின் அகங் காரந்தான்
மருவிய வடிவதாகும் வடிவது
மறவே விட்டால்
உருவிலா சத்தியத் தாலுல
கெலாந் தோன்ற லாலே
பொருளிலாச் சத்தித் தியானம்
பொருந்திட் வுரைத்த தன்றே.

— தேவிகாலோத்திராகமம்

யானென மதனை நீக்கி யேகமாய் நின்ற ஞானம்
ஆனவவ் வெளியாய்த் தோன்றுமது முத்தி வித்து மாகித்
தேனமர் கரிய கூந்தற் செய்யவாய் பரந்து நீண்ட
மானமர் விழியாய் மேலாம் யோகவத் தகமு மாமால்.

சக்கர நாடி சான்றோர் வழித்தெய்வ ரூப மூல
அக்கர மண்டலங்கள் ஞானம்போல் அழகிதன் றாகும்
மக்கள்தோய் மாயா விச்சை மந்திரம் பிராணா யாமம்
தொக்கசீர் ஞானஞ் சேரத் தொடங்குவார் தொடங்கலார்கா.

மந்திரஞ்செபந் தியானம் பூசனை வணக்கம் வேண்டா
அந்த மிலாத முத்திக் குபாயமே யறிய வேண்டும்
சிந்தனை புறமே செல்லிற் றுயரமே திரிய மீட்கின்
பந்தமாந் துன்ப நீங்கிப் பரமான இன்பஞ் சேர்வர்.

புறனகங் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளு மில்லைத்
திறனுடை யுருவ மெல்லாந் தானாகித் தேக மின்றாய்
அறன்முறை யடங்கு ஞான யோகினா லறியப் பட்ட
விறன்மலி ஞானா நந்தம் மேன்மையாய் விளங்கா நிற்கும்.

எந்த வாருயிர் யாதோர் பொருளினைச்
சிந்தை யாற்பற்றிக் காரியம் செய்திடின்
அந்த யோனி யதாமென் றறிவினால்
பந்த மில்பொருள் பற்றுதல் தக்கதே.

வானம் போல வடிவிலதா யெங்கும்
ஆன தாகத் தியானம் பண்ணாதவன்
கானந் தன்னி லுலண்டெனக் கட்டுப்பட்டு
ஈன மான பிறப்பிறப் பெய்துமே.

*உலண்டு என்பது ஒருவித வண்டு. அது தன்னையே தனது எச்சில் கொண்டு நூல்போல் சுற்றிக் கொண்டு வெளிவர முடியாது இறந்துவிடும்.*

*உயிரின் வளர்ச்சி முறையைப் பற்றிய பழைய கீதையிலும் வேதாந்த நூல்களிலும் கூறப்படவில்லை. உயிர் வளர்ந்து பக்குவமாகித் தேகம் இல்லாது நிலைபெறக் கூடும் என்ற கொள்கையை வலியுறுத்தியது திருவாசகமே ஆகும். அதற்கு முந்தைய தமிழ் நூல்களிலும் அக்கொள்கையைக் கூறவில்லை என்பதை அறியவும்.*

நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை
குரம்பை யிற்புகப் பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து
நுகமின்றி விளாக் கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத்
தெழுதரு சுடர்ச் சோதி
ஆக்கி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. — *அதிசயப்பத்து*

(சிவபுராணம் முற்றும்)

# கீர்த்தித் திருவகவல்

**தில்லை மூதூ ராடிய திருவடி**
**பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி**
**எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி**
**மண்ணும் விண்ணும் வானோ ருலகும்**
**துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்**
**என்னுடை யிருளை ஏறத் துரந்தும்**
**அடியா ருள்ளத் தன்புமீ தூரக்**
**குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்.**

தில்லையைப் பற்றி முன் சிவபுராணத்தில் விளக்கப் பட்டுள்ளது. மானிடர் தேகத்தில் இது அநாகதம் என்ற இருதயத்தைக் குறிக்கும். அங்கிருந்து அசைவினைச் செய்து கொண்டிருப்பவரும் ஈசானரேதான். அவர் தொழில் மயமாகச் சீவர்களை இயக்கும் போது ஐந்து நிலையிலிருந்து இயக்குவதாக ஆகமம் வரையறை செய்துள்ளது. அவைகள் சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், நடராசர், இடபாரூடர், கல்யாணசுந்தரர் என்பனவாகும்.

1. சந்திரசேகரர்: சந்திரனை முடியில் தரித்து விளங்குபவர். சேகரம் - தலை, முடி, கூட்டம். சந்திரன் சுவாதிஷ்டானத்தில் விளங்கும்போது ஒரு கலையுடன் விளங்கும். சிரசின் நாதமாக விளங்கும்போது ஏழாவது கலையாக விளங்கிச் சத்தி பொருந்து மிடமாகும். இதன் மேல் பரையோகம், பரைபோகம், பரையில் அதீதம் உள்ளன. இவ்வகையாகச் சந்திரன் 16 நிலைகளைத் தேகத்தில் வகிக்கிறான்.

பாலிக்கும் நெஞ்சம் பறையோசை ஒன்பதில்
ஆலிக்கும் அங்கே அமரர் பராபரன்

மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்கும்
காலைக்குச் சங்கு கதிரவன் தானே. 867

இது சந்திரயோகம் என்ற ஸ்திரீயுடன் பொருந்திக் காமக் கலையை மேலேற்றுவதில் உள்ள நிலை. சந்திர மண்டலம் தோள்களுக்கு மேலே விளக்கம் பெறும் ஒளி மண்டலமாகும். இவர் சந்திரனொளியைப் பெருக்க உதவி வருகிறார். 'சோமசேகராய' என்பதே மகா நிர்வாண தந்திரத்தில் உள்ள மூர்த்தியாகும். மானிட உடலில் சோம மண்டல ஒளியில் சிரசில் விளங்குபவர் என்று பொருள்படும்.

2. சோமாஸ்கந்தா்: ஸக - உமா ஸ்கந்தர் என்ற மூன்று உருவும் ஓர் உருவாகத் தியானிக்கும் முறை. இது கந்தபுராண தத்துவ விளக்கம். இவ்வுலகில் அறிவான சிவமும், ஆற்றலான சத்தியும் எல்லா மண்டலங்களிலும் நிறைந்துள்ளது. தூல உடலில் ஐம்முகச் சிவனார் அதோமுக சத்தியுடன் ஒன்றுபட்டு மேலெழும் சோதியில் சிவம் சத்தி ஸ்கந்தர் மூன்றும் பிரிப்பின்றி உள்ளது என்ற கொள்கை. இது காலத்தாற் பிற்பட்ட சமய எழுச்சி நிலை. இதன் வழிபாடும் இல்லற நெறியைத் தழுவியதே. திருவாரூர்த் தியாகராசர் சோமாஸ்கந்தர் மூர்த்தமேதான். எவ்விதம் சிதம்பர இரகசியம் அமைத்துள்ளார்களோ அவ்விதமே இங்கும் சில இரகசியங்கள் வைத்துள்ளனர். தியாக ராசரின் உடல் பார்க்க முடியாதபடி மூடப்பட்டிருக்கும். வாசனையற்ற பூ சாத்த மாட்டார்கள். பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ அரைத்த சாந்து, தினம் ஒரு காலம் சாத்துபடி ஆகும். இதற்கு இரகசியம் என்பர். தியாகராசர் வெளியில் வரும்போது ஆடாமல் வரமாட்டார். ஆடுவதற்கு ஒரு யுத்தி செய்துள்ளனர். அதற்குப் பெயர் இரகசியம். தியாகராசர் திருவிழாவில் இரதோற்சவத்தில்தான் வெளியிற் புறப்படுவார். அதற்கு முன்னுள்ள திருவிழாக்களில் சந்திரசேகரரேதான் புறப்பாடு. இதுவும் ஸ்திரீயுடன் கூடிய வித்தைதான்.

இங்குள்ள பராசக்தி பீடம் கமலாம்பாள் சந்நிதானம், ஈசான பார்வையாக இருக்கும். இது மூலாதாரத்திலுள்ள ஆற்றலை ஈசான திக்குக்குக் கொண்டு செல்வதேயாகும். ஸ்திரீ வித்தையின் பிரபாவத்தால் சுந்தரமூர்த்தி நாயனார் தொடர்பு அங்கு ஏற்பட்டது. சைவம் கண்ட இரண்டு ராஜ வித்தைகளில் தியாகராஜ வித்தை ஒன்று. நடராஜ வித்தை ஒன்று.

3. நடராஜர்: இது இருதயத்தில் தியானிக்கப்படும் உருவம். ஸ்திரியுடன் அப்பியசிப்பவரும் இந்த வித்தை அறிந்திருக்க வேண்டும். இதுவே துறவு நிலையிலுள்ள வருக்கும் அடிப்படையான தத்துவ விளக்கமாகும். பஞ்சாக்கரத்திற்கும் கூத்துக்கும் தொடர்பு கொண்டு விளக்குவதே சைவ சமயக் கொள்கையாகும். திருமூலர் கிரியை வழிபற்றியவர்க்குத் திருவம்பலச் சக்கரம் விளக்கி, ஞானநெறிக்கு ஒன்பதாந் தந்திரத்தில் தூல பஞ்சாக்கரம் சூக்கும பஞ்சாக்கரம் அதிசூக்கும பஞ்சாக்கரம் என்பவைகளை விளக்கித் திருக்கூத்துத் தரிசனம், சிவானந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றிலைக் கூத்து, அற்புதக் கூத்து என்று விளக்கியுள்ளார். 82 திருமந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. உருவ வழிபாட்டினர்க்கு இதுவே சிறப்பு உருவமாகும். ஆனால் நிராதார யோகத்திற்கும் இக்கருத்து வைக்கப்பட்டுள்ளது, இதன் பெரிய விளக்கமாகும். தூல வடிவத்தை மணிவாசகர் கூறவில்லை. திருமூலர் தூலமும் கூறிச் சூக்குமத்துள்ள தத்துவங்களையும் அற்புதக் கூத்து என்பதில் விளக்கியுள்ளார். அற்புதக் கூத்து 42 திருமந்திரங்களாக உள்ளது. அவைகளை விளக்கப் புகின் அதுவே ஒரு நூலாக ஆகிவிடும். அவைகளில் சிலவற்றை மட்டுமே எடுத்துக் கூத்தப் பெருமானை விளக்குகிறேன்.

அற்புதம் என்பது ஞானத்திற்கு ஒரு பெயர். இருக்கு வேதத்தில் அக்கினிக்கு அப்பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. திருவாசகத்தில் அற்புதப் பத்து இந்த ஞான நடனத்தையே விளக்கிக் கூறும். அற்புதத்திற்குப் பிரபஞ்ச சிருஷ்டி என்றும் பொருள் உண்டு. சிருஷ்டியின் முதல் நிலையும்

ஞானத்தின் இறுதி நிலையும் நேரே தொடர்புடையன. சிருஷ்டியில் மேலிருந்து கீழ் இறங்கல் நடைபெறுகிறது. ஞானத்தில் கீழிருந்து மேலேறல் நடைபெறுகிறது.

உருவத்தோடு வழிபடும் முறை ஒன்று, யாதொரு உருவும் இல்லாத ஒளி வழிபாடு ஒன்று. அதைக் குருத் தியானம் என்பர். குரு - ஒளி, ஆசான், சிவன்.

குருவுரு வன்றிக் குனிக்கும் உருவம்
அருவுரு வாவது அந்த அருவே
திரிபுரை யாகித் திகழ் தருவாளும்
உருவரு வாகும் உமையவள் தானே. **2762**

அருவமே உமையவள், திரிபுரை. அவளே எல்லா உருவாகவும் விளங்குபவள்.

சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்
ஒருவனே சொல்லு தற்கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்கும் ஆனந்த மாகடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் இணையடி தந்தே.

— **கோயில் திருவிருத்தம்**

திருவழி யாவது சிற்றம் பலத்தே
குருவடி வுள்ளாக் குனிக்கும் உருவே
உருவரு வாவதும் உற்றுணர்ந் தோர்க்கு
அருள்வழி யாவதும் அவ்வழி தானே.

பொருள்: இது நடராசர் திருவுருவைச் சிரசில் தியானிக்கும் முறை பற்றியது. இருதயத் தியானம் போல் உருவத்துடன் கூடியதல்ல. ஆனால், உருவத்தின் தத்துவம் இங்கு இடம்பெறும். சிவநெறி யாவது சிற்றம்பலத்தே ஒளிவிடும் திருவடிகளைக் கொண்டு தியானிக்கும் திருவுருவமாகும். குருவடிவு என்பது ஒளிக்கிரணங்களுக்கு அடிப்படையான கண்களாகும். எல்லா உருவங்களும்

அருவமாகக் காண்பது நல்ல ஞான முதிர்ச்சி பெற்றவர்க்கு அமையும் அருள் வழியாகும். தியானம் இதுவேயாகும்.

நீடுஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
ஓடும் உயிரெழுந் தோங்கி யுதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்து
ஆடும் இடந்திரு அம்பலந் தானே. **2764**

பொருள்: சிரசின்மேல் பன்னிரண்டு விரற்கடையளவில் விளங்கும் சீவப் பிரகாசத்தில் மனத்தை நினைத்துத் தியானம் செய்யுங்கள். உலகில் உள்ள சகல அசைவுகளையும் நிறுத்தும் நம்பெருமான் விரும்பி ஆடுமிடம் இந்தத் திருவம்பலமேயாம். இருதயத் தான தியானம் இல்லை என்பதை நன்கு அறியவும்.

வளிமேகம் மின்வில்லு வானக வோசை
தெளிய விசும்பின் திகழ்தரு மாறுபோல்
களியொளி யாறுங் கலந்துடன் வேறாய்
ஒளியுரு வாகி ஒளித்து நின்றானே. **2765**

பொருள்: ஆகாயத்தில் காற்று, மேகம், மின்னல், இந்திர வில் ஓசை முதலானவை இல்லாதிருந்து ஒரொரு சமயம் நமக்குத் தெளிவுபட விளங்கிக் காட்டுவதுபோல, நமது சிரசின் மேலுள்ள ஆகாயத்தில் ஆனந்தம் ஒளி முதலான ஆறும் இடம் பெறும். இறைவன் இவைகளோடு கலந்தும் இவைகள் அல்லாத ஒளியுருவாகவும் சீவ அறிவில் பக்குவமற்றபோது ஒளித்தும் நிற்பவனாக உள்ளான்.

தீமுதல் ஐந்தும் திசையெட்டுங் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக்கு அப்புறம் ஆனந்தம்
மாயைமா மாயை கடந்துநின் றார்காண
நாயகன் நின்று நடஞ்செய்யு மாறே. **2766**

அக்கினி வாயு ஆகாயம் நுண்பூமி நுண்நீர் எட்டுத் திசைகளும் கீழும் மேலும் ஆராய்ச்சியறிவுக்கு அப்பாற் பட்ட ஆனந்த வடிவில் விளங்குபவன். மாயை, சுத்த மாயைகளைக் கடந்து நின்றவர் காணும்படி உலகநாதன் நிலைபெற்று நடஞ்செய்யும் முறைமையாகும்.

கூத்தன் கலந்திடுங் கோல்வளை யாளொடுங்
கூத்தன் கலந்திடும் கோதிலா ஆனந்தங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஞானத்துக்
கூத்தனுங் கூத்தியும் கூத்ததின் மேலே. **2767**

*சிதாகாய நடனத்தில் சிவம் உமையவளோடு பொருந்தியுள்ளான். அவன் குற்றமற்ற ஆனந்த நிலையில், குற்றமற்ற ஞான சொரூபமாக ஆன்ம சத்தியின் அசைவுக்கு மேலே சிவசத்திமுறையில் நின்று நடனம் செய்தருளுவன்.*

இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலும் தாமாய்நின் றாடுகின் றாரே. **2768**

*தேகத்தை இடமாகக் கொண்ட சத்தியும் அறிவான எந்தைபிரானும் என்னிடம் நடங்கொண் டுள்ளதை நானும் அறிந்தேன். பாதத்தை ஆதாரமாகக் கொண்டு பூமியில் வாழ்வனவற்றிற்கெல்லாம் அறிவு, செயல், இச்சைகளை எழுப்பும் வகையில் தாம் ஒருவரே நின்றாடுகிறார்.*

*படங்கொடு நிற்றல் - பூமியை ஆதாரமாகக் கொண்டு நிலைபெறுதல்.*

சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்டு
ஒத்த ஆனந்தம் ஒருநட மாமே. **2769**

*தேகம் சீவன் ஆன்மா அடையும் சகல ஆனந்தங் களும் சத்தியின் உருவாற்றலினால் விளைந்தவை களாகும். சிவத்தோடு பொருந்தியடையும் சிவானந்தம் ஆன்மப் பிரகாசம் என்ற உமாதேவியின் காரியமாகும். அத்தகைய சத்தி வடிவு, தேக தத்துவத்திலிருந்தே திரண்டு எழும்பி ஒளிபெற்றுச் சிவ நடனத்தில் பொருந்துவதாகும்.*

நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்

பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ்
சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே. 2770

நெற்றிக்கு நேரே இரு புருவங்களுக்கு இடையில் உற்று உற்றுப் பார்க்கப் பிரணவ மந்திரம் ஒளி பெறும். அதுவே விரும்புவதிலெல்லாம் மேலான பரமன் இருக்கும் இடமாகும். இதுவே சிற்றம்பலமென்று அறிந்து நான் அதில் சேர்ந்து கொண்டேன்.

அண்டங்கள் தத்துவ மாகிச் சதாசிவந்
தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனந்
தெண்டினில் எழுஞ் சிவாசன மாகவே
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. 2771

தேகத்திலுள்ள புவனங்கள் தத்துவமாகி முதுகந் தண்டினில் உள்ள சத்திகள் உமையவளாக ஒளிமயமாக விளங்குவதைப் பீடமாகக் கொண்டு சுழுமுனை எழுவதைத் தனது ஆசனமாக்கிக் கொண்டு பரஞ்சோதி தனது கூத்தை நடித்தருளினன்.

சாத்தவி - சத்தி. தண்டு - முதுகந்தண்டு; தெண்டு - தண்டு

மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்
நன்றிது தானிதழ் நாலொடு நூறவை
சென்றது தானொரு பத்திரு நூறுள்
நின்றது தானெடு மண்டல மாமே. 2772

பொருள்: சிதாகாயத்தில் அறிவை விளக்கும் பெரிய சகஸ்ரதளம் நன்மையைத் தருவது. இது மூலதாரத்தில் உள்ள நாலிதழ்ச் சக்கரம் விரிந்து கவிழ்ந்துள்ள நூறு நாடிகளையும் பேதித்துக் கொண்டு சித்ரணி என்ற ஒரு நாடி வழியாக மேலேறி இரு நூற்றுப் பத்து புவனங்களையும் பேதித்துக் கொண்டு தனது நீண்டு உயர்ந்த சோதி மண்டலத்தை அமைத்தது. இந்த நெடிய மண்டலத்தில் விளங்குவது சிவகலை பத்துமாகும். அவை இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி, வியாபினி, வியோமரூபினி, அநந்தை, அனாதை, அனாசிருதை என்பனவாகும்.

அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி
தெண்டிசை சூழ்ந்த திசைகள் எழுகோடி
எண்டிசை சூழ்ந்த இலிங்கம் எழுகோடி
அண்ட நடஞ்செயும் ஆலயந் தானே. **2773**

*ஆகாயக் கூறாலாய அணுக்கள் ஏழு கோடி யாகும். தேகக் கூறாலாய அணுக்கள் ஏழு கோடியாகும் (இதனால் மேலுலகங்களையும் பாதாளத்தையும் குறிப்பிட்டுள்ளார்). முதுகந்தண்டைச் சூழ உள்ள திக்குகளின் அணுக்கள் ஏழு கோடியாகும். தேகத்தைச் சூழ உள்ள எண்திக்குகளிலும் ஆகாய அணுக்கள் ஏழு கோடியாகும். இவ்விதம் அண்ட நாயகன் யாவற்றையும் தனது இருப்பிடமாகக் கொண்டு நடித்தருள்வன்.*

ஆகாச மாமுடல் அங்கார் முயலகன்
ஏகாச மாந்திசை யெட்டுந் திருக்கைகள்
மோகாய முக்கண் மூன்றொளி தானாக
மாகாய மன்றுள் நடஞ்செய்கின் றானே. **2774**

*கூத்தப் பெருமான் உடல் ஆகாய மயமானது. அதில் உள்ள கருமை ஒளியே முயலகன். எட்டுத் திசைகளும் கூத்தனது திருக்கைகளாகும். அவையே அவனது மேலாடையாகும். விருப்பத்தை விளை விக்கும் சோமசூரிய அக்கினியே அவனது மூன்று ஒளிகளையுடைய நேத்திரமாகும். இவ்விதமாகப் பெருமை பொருந்திய சீவர்களின் சிதாகாய வெளியில் சிவன் நடஞ் செய்கின்றான்.*

அம்பல மாவது அகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத் தீமண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாமே. **2775**

*கூத்தப்பெருமான் நடஞ்செய்வது அசைவன வற்றுள்ளும் அசையாதனவற்றுள்ளுமாகும். அத் தகைய ஆகாயமே ஆதிப்பிரானது திருவடியாகும். அவ்வாகாயம் பிராண சத்தியான நீரையும் ஒளியையும் கொண்ட*

மண்டலமாகும். இந்த ஆகாய விளக்கமே பஞ்சாக் கரமாகும். இவ்வகையாக விளங்கும் கூத்தப் பெருமான் விளக்கமே இங்கு அறியத்தக்கது.

அப்புவின் தன்மை - குளிர்ச்சி. தீயின் தன்மை - ஒளி. இங்குக் குளிர்ந்த சந்திர மண்டல ஒளியில் நடிப்பவன் என்று பொருள்.

4. இடபாரூடர்: சைவத்தில் இடபத்தை உயிர் என்பர். வேதத்தில் வாக்கு கம்பீரமாக ரிஷப கர்ஜனை போல் உள்ளதால் வாக்கை ரிஷபமாகக் கூறப் பட்டுள்ளது. உயிரின் வெளிப்பாடும்,. வாக்கின் வெளிப்பாடும் சிரசின் மேலுள்ள ஆகாய மண்டலந்தான். இது ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமானைக் குறிக்கும். இதன் தத்துவமும் சிரசில் வெளிப்படுவது தான்.

5. கலியாணசுந்தரர்: இது சிவசத்தி மணக் கோலத்தைக் குறிப்பிடும் அவசரம். மூலாதாரத்திலுள்ள குண்டலினி சத்தி சூரியமண்டலத்தைக் கடந்த பிறகு தருணி என்றும், சகஸ்ரதளத்தை அடைந்தபோது பதிவிரதை என்றும் கூறப்படுவாள். இவ்விதமான மணக்கோலத்தை நடத்தி வைப்பவர் பிரமனும், மணப்பெண்ணைக் கொடுப்பவர் திருமாலும் ஆவர். இது துவாத சாந்த வெளியாகும். இவ்வைபவத்தை அமைத்துக் காட்டும் தலம் மதுரை ஆகும். துறவி வழிபடும் ஆனந்தக்கூத்தனும், இல்வாழ்வான் வழிபடும் கால்மாறி ஆடிய கூத்தப்பெருமானும் அங்கு இடம் பெற்றுள்ளனர். மதுரை சத்திப் பிரபாவம் பொருந்திய தலமாகும். பிரணவகலைகள் 64க்காக 64 புராணக் கதைகள் அமைத்துள்ளனர். திருமணக் கோல வழிபாடு சாக்த மத தத்துவத்தைக் கொண்ட சமய மதத்தினர் வழிபாடு. சாக்த சமயத்தில் இதைத் துவாத சாந்தவெளி என்பர். திருவிளையாடற் புராணமும் அவ்விதமே கூறுகிறது. இவ்விதம் வேறு வேறு பெயர்களால் பெயர்களும் வழிபாடும் இருந்தாலும் இவை எல்லாம் சிரசின் மேலுள்ள ஈசானரை வழிபடும் முறைகளேயாகும்.

மீனின் கண் மற்ற எந்த ஜந்துக்களின் கண் போன்றும், உறங்கும்போது மூடிக் கொள்வதில்லை. எப்போதும் விழித்த கண்ணுடையவள் என்ற கருத்தை மீனாக்ஷி என்னும் பெயர் விளக்குவதாகும். அக்ஷி மார்க்கத்தினர் எப்போதும் அக நோக்கம் உடையவராக இருப்பதே இதன் கருத்தாகும்.

சீவர்களின் அஞ்ஞான திசையில் பழைமையாக உள்ள இருள் மண்டல ஆகாயத்தில் எல்லா உயிர் களுக்கும் அறிவினைக் கொடுக்கும் ஆற்றலுடைய வனாய், அளவிட முடியாத குண சமூகங்களுடன் பொருந்தியும், அவ்வக்குணங்களால் பெறவேண்டிய அறிவு கிட்டியதும் அவைகளினின்று மீட்பதுமாக மண்ணுலக வாசிகளுக்கும் விண்ணுலக வாசிகளுக்கும் செய்தருளுகின்றான். அவனுடைய அடியார்களது உள்ளத்தில் அன்பு மிகவும் மேம்பட்டதும், அவன் சிறப்பாக அவர்களுடைய அறிவுக்குப் புலப்படும்படி எழுந்தருளி இருப்பன். அம்முறையில் என்னை அவ்விதமே அநுக்கிரகம் செய்து எனது சிதாகாய இருளை முழுமையும் அகற்றி ஒளிமயமாக்கினன்.

தில்லை - சிதாகாய இருள் மண்டலம். மூதூர் - பழைமையான ஊர். அதுவே பிறப்புக்கும் இறந்த பின்னடையும் இடமான சீவவொளி பொருந்திய அண்டாகாயம். இதுவே தில்லை என்றறிக. அதாவது அண்டகோச இருளே தில்லையால் குறிக்கப் பட்டுள்ளது என்று அறிக.

**விளக்கம்:**

1. சீவன் பெறவேண்டிய அறிவு பெறும் வரையில் பல்வேறு குணங்களுடன் கூட்டப்படுகிறான்.

2. அவ்விதம் கூட்டப்பட்ட குணத்தினால் பெற வேண்டிய அறிவு வந்ததும் அதினின்றும் மீட்கப் படுகிறான்.

3. இறைவனிடம் மாறாத அன்பு வந்த பிறகு இருள் முற்றிலும் கெட்டு ஒளிமயமாக அமைய அருள் செய்யப்படுகிறது.

4. இதுவே சிறப்பு வழிபாடு. இந்நிலை கிட்டியதும் இறைவன் அகலாது அவர்களிடம் உள்ளான்.

இது கர்ம நியதியின் தத்துவம். குணதத்துவம் தன்து தன்மைக்கேற்பச் சீவனை நல்வழியிலோ தீய வழியிலோ அழைத்துச் செல்லுகிறது. அத்தகைய குணங்கள் சடமயமானவை ஆதலால் தானாக வந்து பற்றிக் கொள்ளவில்லை. அத்தகைய குணங்களுடன் சீவனை இணைத்தவன் கூத்தன் என்றார். தீயவினை செய்தவன் தீய பலனை அனுபவித்து மீண்டும் செய்யக் கூடாது என்ற அறிவு வந்தபிறகு அத்தகைய குணங்களுடன் இணைக்கப்படுவதில்லை. குணமும் மனமும் பிரிக்க முடியாதவாறுள்ளது. தாமத ராஜச குணத்திற்குச் சுயநலம் கருதித் தீய வழியில் மனம் செல்லுகிறது. சாத்துவிக குணத்தினருக்குப் பக்தி வழியில் மனம் பதிகிறது.

திருவாசகத்தில் வந்துள்ள சுமார் நாற்பது ஊர் களும், காரண அடிபடையில் தேகத்தில் அமைந்த சக்தி வெளிப்படும் நிலையங்களாகும். அவை புறத்தே தேசத்தில் உள்ள ஊர்களோடு ஒப்பிட்டுப் பல சிவ மூர்த்தங்கள் வெவ்வேறு இடங்களில் மையங்கொண்டுள்ளது என்று பத்தி காண்டியின் புராணக் கூற்றைக் கொண்டு மயங்க வேண்டாம். புராண விளக்கங்கள் தேகத்தில் அமைவதையே பாமரர்களுக்குச் சொல்ல அமைந்தது என்றறிக.

விண்ணுலகவாசிகள் அசுரரும் தேவருமாவர். அவர்களுக்கும் வினைக்கேற்பக் கர்மபலன் உண்டு. அசுரர் இருள் மண்டலத்தில் விளங்குபவர். தேவர் ஒளி மண்டலத்தில் விளங்குபவர்.

**மன்னு மாமலை மகேந்திர மதனிற்**
**சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்:**

மகேந்திரன் என்பது தேவ அரசனான இந்திர னுக்குப் பெயர். தேவர்கள் ஒளி உலகவாசிகள். ஒளி விளங்குவதும் அறிவு விளங்குவதும் ஒன்றேதான். இவைகள் மூளையின்

முன் பகுதியில் செயல்படும் நிலையாகும். நிலைபெற்ற பெருமையுடைய பிரணவம் விளங்கும் உயர்ந்த இடமான விந்துநாத மண்டலங்களிலிருந்து சீவர்களை அழைத்துப் போகும் முறையைச் சீவனுக்கு உணர்த்தியும்.

மாமலை - பெருமையுடைய பிரணவ மேரு வாகும். அதுவே கீழ்முதல் மேல்வரையில் வியாபித்துள்ள மலை போன்ற தத்துவமாகும். அதுவேதான் இருட்டையும் ஒளியையும் உள்ளடக்கி நிற்பது. அதனால் மகேந்திர மாமலை.

ஆகமம் = ஆ + கமம் - பசு போதல். ஆகமம் நூலுணர்வு. அதைத் தேகத்தில் தோற்றுவிக்க விந்துநாத நிலைகளைக் கண்டால்தான் சாத்தியமாகும். பிரணவத்தின் விந்து நாத நிலைகளே ஆகமம் சொன்ன பயனை உணர்த்துவதாகும். விந்துநாத ஞானம் இல்லாவிடில் ஞானநெறி இல்லை என்றறியவும்.

மனிதர்களின் உடலைச் சூழ உள்ள அண்ட கோசத்திற்குப் பிரணவம் என்று முன்னர் விளக்கப் பட்டுள்ளது. அது அ, உ, ம, விந்து, நாதம் என்ற ஐந்து பகுப்புகளையுடையது. நாம் செய்யும் செயல்கள் குணத்தையும் மனத்தையும் சார்ந்தவை. அதுபோல் எண்ணும் எண்ணமும் குணத்தைச் சார்ந்துள்ளன. நமது எண்ணம் ஒவ்வொன்றும் மனம் குணம் தேகம் இவைகளில் ஒருவித உணர்வை எழுப்பிக் கொண்டே இருக்கிறது. இவை பொருள் பற்றியவையாகில் பொருளை நுகரும் தேகம், விருப்பத்தைச் செய்யும் மனம் இவைகளில் உணர்வைப் பெருக்கிக் கொண்டே தடித்த வாசனையினின்றும் விடுபடாத நிலையை உண்டாக்கிக் கொண்டேயுள்ளது. யாதொரு பொருளையும் பற்றாது, எக்காலமும் நிலை பெற்றுள்ள சத்தியப் பொருளை நினைக்க நினைக்க மன மண்டலத்தில் குணரகித ஆகாயக்கூறு பெருகிக் குணசகித ஆகாயக் கூறைத் தாழ்த்தியும் மேலோங்கியும் அமைந்துவிடுகிறது. இவ் விதம் மாறுவதில் ஆகாயக் கூறில் இருந்த இருள்

தன்மைபோய் ஓர் ஒளியும் உண்டாகிறது. இதற்குச் சூரியாகாயம் என்று பெயர் வைத்துள்ளனர். சிரசின் மேலுள்ள இவ்வொளி அணுக்கள் மிகவும் வேகமான ஒரு கதியுடையதாகிக் கீழ் மேல் பக்கம் என்று ஓடிக் கொண்டிருப்பதில் அவ்வணு மோதலில் ஒரு நுண்ணோசையும் அமையும். தேகத்தில் உண்டாகும் உணர்வுகள் செயலைத் தூண்டி நிற்பதுபோல, ஆகாயக் கூறில் உண்டாகும் இந்த ஸ்பந்த உணர்வைக் கவனிப்பதில் ஆகாயக் கூறு சிறிது சிறிதாக மாற்றத்தை அடைகிறது. ஒரு நிலையில் தேகம் தானல்ல, தான் ஒரு ஆகாய மயன் என்ற அறிவு திடம் பெற்றுவிடும். ஆகாயமயமான சிவத்தையோ, ஆத்மாவையோ நினைப்பதில் ஆகாய மயமான சூரியாகாசம் சித்தாகாசம் அதிவிரைவான சலனத்துக்குள்ளாகி ஆகமம் கூறிய விந்து நாதங்களை உண்டாக்குவிக்கின்றது. உலகில் உள்ள சகல அறிவு நூல்களும் எழுத்தோசையால் ஆயினவைகளே.

அவ்வோசைகளை மூன்று நிலையாக வரையறை செய்துள்ளனர். அங்காத்தலினால் உண்டாகும் நாதம்; அங்காத்தல் நிலைபெறுவதில் உள்ள நாதம்; அங்காத்தல் முடிந்தபோது உள்ள நாதம். இவைகளை முறையே அ, உ, ம என்று கண்டனர். இவை மூன்றும் தூல நிலையாகும். அங்காத்தலின்றி மனம் எண்ணும்போது உண்டாவதை அர்த்தமாத்திரைப் பிரணவம் என்றனர். அதாவது ஓர் எழுத்தோசைக்கும், மறு எழுத்தோசைக்கும் உள்ள ஓர் இடைப்பட்ட நிலை என்பர். சொல்வதைவிட எண்ணுவது விரைவில் நடைபெறுவதால் தோத்திரம் பக்தனுக்கும் சிந்தனை ஞானிக்கும் அமைந்தது. இங்கு சிந்தனையே சூக்கும வாக்கை உண்டாக்குகிறபடியால், தூலவைகரி, மத்திமை முதலிய நிலைகளைக் கடந்த பைசந்தி சூக்குமையே இடம் பெறும். பைசந்தி வாக்கு மயிலின் முட்டையில் உள்ள கருவில் மயிலின் தோகை நிறம் காணப்படாது போயினும், முட்டை நீரில் அது சூக்குமமாக உள்ளது. அதுபோலத் தேகத்தில் உள்ள பூதகாரியம், குணம் வெளிப்படச் சூக்கும ஆகாயத்தில் கருநிலை உள்ளது. அங்கு சூக்கும தேகத்தை உண்டாக்கவும் ஆற்றல்

அங்கேயே உள்ளது. இதையே சப்தப் பிரமஞானம் என்று வடநூல் வல்லார் கூறுவர். இதுவே ஆகமந் தோற்றுவித்த ஞானம்.

> வேற்றுமைப் பட்டவன்னம் வெவ்வேறு விபாகமாகித்
> தோற்றுத லடைவொடுக்கிச் சொயம் பிரகாசமாகிச்
> சாற்றிடு மயிலின் அண்டந் தரித்திடு சலமே போன்றங்
> காற்றவே யுடையதாகிப் பைசந்தி யமர்ந்து நிற்கும்.
>
> — *சிவஞான சித்தியார், சூத்திரம் 1*

> சூக்கும வாக்கதுள்ளோர் சோதியா யழிவதின்றி
> யாக்கிடு மதிகாரத்திற் கழிவினை தன்னைக்கண்டால்
> நீக்கமிலறி வானந்த முதன்மை நித்திய முடைத்தாய்ப்
> போக்கொடு வரவிளைப்பும் விகாரமும் புருடனின்றாம்.
>
> — *சிவஞான சித்தியார்*

*புருட தத்துவமே பூதாகாயம், குணசகித ஆகாயம் இவைகளில் சிறப்புறும். சீவன் சிறப்புறுவது சிவ தத்துவம் பொருந்தும் சுத்த மாயையிலாகும். சுத்த மாயையில் பற்றுக்கோடாகக் கொண்டே சீவனுக்குக் குரு உபகாரம் நடைபெறுகிறது. சுத்த மாயை விந்து நாதங்களாலாயது. இதில் சாந்தி கலையும் சாந்தியதீத கலையும் இடம்பெறும். குருவாகிய சிவம் ஆகமமாகிய வாக்கைச் சீவனுக்கு அளிப்பது இங்குக் கூறப்பட்ட விஷயமாகும். விந்து நாத வெளிப்பாட்டுக்குப் பின் சீவன் ஆகாயத்தில் சம்மியம் செய்யத் திடம்பெறும்.*

**கல்லா டத்துக் கலந்தினி தருளி**
**நல்லா ளோடு நயப்புற வெய்தியும்:**

*கல் + ஆடு + அகம் - கல்லாடகம் என வந்துள்ளது. சீவன் விளங்கும் அண்டகோசத்தில் ஒளி அணுக்கள் பல்வேறு வண்ணங்களுடன் உரசுதல் நடைபெறுகின்றது. எண்ணும் தன்மைக்கேற்ப அறிவும் ஒளியும் அண்டாகாயத்தில் சதா நடைபெறு கின்றது. ஒளியே சத்தியின் வடிவாகும். அதிலுள்ள அறிவே சிவமாகும். இவை பிரிப்பின்றி உள்ளவைபற்றி 'நல்லாளோடு நயப்புற*

வெய்தியும்' என்றார். அறிவின் தகுதிக்கேற்பச் சூக்குமமும் மாறுபடுகின்றது. சூக்குமத்திற்கேற்பத் தூலமும் மாறுபாட்டைப் பெறுகிறது. தேகம் தூலசத்தி. ஒளி சூக்கும சத்தி நிலைகளாகும். சிவம் இரண்டிலும் உள்ளதெனினும் தூல சீவன் தன்னுண்மையை மறந்தவன். சூக்கும சத்தியை அறிந்தவன். குறைந்த அகங்காரத்துடன் சாத்துவிக குணம் மிக்கவராயிருப்பவனாக உள்ளவன். ஞானத்தின் ஆரம்பமே தன்னையறிய உபாயம். பின்னில் தலைவனை அடைந்து ஒன்றுபடலில் முடிவுறுவ தாகும்.

**பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்**
**எஞ்சா தீண்டு மின்னருள் விளைத்தும்:**

பள்ளி என்பது கோவிலுக்குப் பெயர். ஆத்மா அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்த மயகோசம் என்ற ஐந்து கோசங்களைக் கொண்டு வாழ்கிறது. ஆத்மாவை விட்டு நீங்காத சிவமும் சத்தியும் அவ் விதமே ஐந்து தேகத்திலும் பான்மொழி என்ற நாத சத்தியுடன் குறைவில்லாது பொருந்திச் சீவனது விருப்பத்திற்கு ஆற்றலை அளித்தும்.

அருள் - ஆற்றல். பான்மொழி - பால் போன்ற மொழியினையுடையவள். இது நாத சத்திக்காயிற்று. பால் எவ்விதம் தேகத்தைப் போஷிக்கின்றதோ அவ்விதம் நாதம் சீவனைப் போஷிக்கின்றபடியால் பான்மொழி என்று கூறப்பட்டுள்ளது.

**கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்**
**விராவு கொங்கை நற்றடம் படிந்தும்:**

மனிதர்களைச் சிவம் பக்குவம் செய்வதை நான்கு விதமாக்கி விளக்கியுள்ளார்.

1. தாமத குணமதிகமுள்ளபோது, கொடுந்தன்மை யுடைய வேடன், மறைந்திருந்த பக்ஷி விலங்குகளை வஞ்சித்துப் பிடிப்பதுபோல உள்ள நிலையே, கிராத வேடன்.

2. சீவன் தனது அறியாமையை உணர்ந்து அருளை நாடினபோது செம்படவன் வலையை வீசி இவனை அறியாமலே மெல்ல இழுக்கும் நிலை, கடலில் வலைவாணன்.

3. சிவனால் கவர்ந்து இழுக்கப்பட்டபோது தேகத்தில் உள்ள பிராண சத்திகளின் நிலை மாறு பாடடைந்து உட்புகும் சுவாசமே ஊர்த்துவ கதியுடன் சிரசை நோக்கிப் பாயத் தொடங்கும் நிலை, பரிப் பாகன்.

4. வினைகள் கெட்டு ஆகாயக் கூறு வலுவடைந்தபோது குருவாக வெளிப்படுபவன்.

காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிப்பாகன் நம்வினையை - வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளுங்கெட நெஞ்சே வாழ்த்து.

— பண்டாய நான்மறை

மனிதர்களிடம் கிராதன் போலப் பொருந்திச் சிவந்த அதரத்தையுடைய தன் மனைவியின் நெருங்கின தனங்களில் பொருந்தி ஆழ்ந்தும்.

விளக்கம்:

காமம் பற்றுதலினால் மனைவி என்றும் மக்கள் என்றும் மறைமுகமான ஓர் அன்பை விளைவித்தவன் சிவமேயாகும். இந்த அன்பைக் கொண்டே இறைவனை அடையக் காமேஸ்வரன் காமேஸ்வரி வழிபாடும் சோமாஸ்கந்த வழிபாடும் குமரன் வழிபாடும் பெருகின.

**கேவேட ராகிக் கெளிறது படுத்து**
**மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்:**

கெளிற்று மீன் ஒரு சாண் நீளத்திற்கு உட்பட்டுச் சேற்றில் தலை வைத்துக் கொண்டு இருப்பதுவாகும். கேவேடர் - செம்படவர். சிவம் செம்படவனாகச் சீவர் களின் காமக் கருவி சோர்ந்து போதலையோ அதன் விருப்பத்தை அடைய முடியாத சூழ் நிலையையோ

உண்டாக்கிப் பெரிய வேட்டையாகிய பசுத்தன்மையுடைய சீவனைக் காம செயத்தினால் தன் பாலிழுத்தும். திருமூலர் இந்தப் பரிபாஷையை உபயோகித்துள்ளார்.

குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்
வட்டம் அமைந்ததோர் வாவியுள் வாழ்வன
பட்டன மீன்பல பரவன் வலைகொணர்ந்து
இட்டனன் யாமினி யேதமி லோமே.

— திருமந்திரம் 2031

இம்மந்திரம் ஐந்து இந்திரியம் அடக்கு முறைமை என்ற தலைப்பில் உள்ளது.

பொருள்: ஒரு முழ வட்டமான சிதாகாயக் குளம் உள்ளது. அதில் விளங்குவது அரை முழமுள்ள தலையாகும். இந்தக் குளமாகிய சிதாகாயத்தில் ஞானேந்திரிய கர்மேந்திரிய அறிவுகள் மீன்போல உள்ளன. அண்டாகாயத்தில் (பிரணவ உச்சியில்) உள்ள சிவம் கவர்ந்து வேடன் வலையை இழுப்பது போலிழுக்க நாம் இந்திரியங்களின் வழியான குற்றங்களை அடைய மாட்டோம். இப்பகுதி 13 திருமந்திரங்களை உடையது. முழுதும் படித்தறிதல் நலம்.

**மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து**
**உற்றவைம் முகங் ளாற்பணித் தருளியும்:**

அறிவுருவான சிவம், ஈசானம், தற்புருடம், வாமதேவம், அகோரம், சத்தியோசாதம் என்ற ஐம்முகங்களாகச் சதாசிவ மூர்த்தமாக உள்ளது. ஈசானம் என்று மேல்நோக்கிய முகம், சிவத்தைப் பற்றிய அறிவையும் ஆத்மாவைப் பற்றியும் சிந்திப்பதில் விளக்கம் பெறுவது. தற்புருடம் என்பது சுட்டி அறியும் பிரபஞ்ச அறிவைக் கொண்டது. வாமதேவம் - காமத்தைப் பற்றிய அறிவு. அகோரம் - சித்தத்தின் விளக்க அறிவு. சத்தியோசாதம் என்பது அண்டகோசத்தின் கீழ்நிலையையும் மேல்நிலையையும் கொண்ட அறிவாகும். இந்திரன் விளங்கும் ஒளி மண்டலத்திலிருந்து தனது ஐம்முகங்களாக விளங்கும்

அறிவாற்றலால் தேகத்தை ஏவுதல் செய்தருளியும். இந்திரன் ஒளிநிலை யென்பது புருவ மத்தியில் விளங்குபவர், தத்புருடர் நிலையாகும். இவர் தலை முற்றிலும் ஆளுபவர் பற்றி ஐம்முக விளக்கம் பெறுவது இவரால்தான் என்று கூறப்பட்டது.

**நந்தம் பாடியில் நான்மறை யோனாய்**
**அந்தமி லாரிய னாயமர்ந் தருளியும்:**

நம்முடையதும் தம்முடையதுமான அறிவான பாசறையில் நான்கு வேதங்களையும் உணர்ந்தவனாய் முடிவினையடையாத குருவாக எழுந்தருளியும். நான்மறையோன் .- நான்கு இதழ்களையுடையது பற்றி மூலாதாரத்திற்கு வேதம் என்ற பரிபாஷையுள்ளது. இங்கு மூலாதாரத்தில் மறைந்திருந்து இறப்பில்லாத சிவ குருவாய் நாத மயமாய் வெளிப்பட்ட மர்ந்தருளியும்.

பாடி - பாசறை. பகைவர்களுடன் பொருதுவோர் ஏற்படுத்திக் கொள்ளும் தற்காலிக விடுதி. இங்கு தேகமே சீவனுக்கு இருளை அகற்றும் முயற்சியில் சிவம் துணை கொண்டு நின்றருளியது.

காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில்
வாழுங் குயிலே
சீருடைச் செங்கம லத்தில் திகழுரு
வாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசம்
அறுத்தெனை யாண்ட
ஆருடை அம்பொனின் மேனி அமுதினை
நீவரக் கூவாய். குயிற்பத்து

பிரணவத்தின் பீடம் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம் மூன்றும் சேர்ந்து கீழ்முக நிலையாகும். இதுவே மேல்முகங்கொண்டு நாதமாகச் சிரசில் வெளிப்படுவதாக உள்ளது.

**வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்**
**நூறுநூ றாயிரம் இயல்பின தாகி**

**ஏறுடை யீசனிப் புவனியை உய்யக்**
**கூறுடை மங்கையும் தானும் வந்தருளி.**

ஒவ்வொரு குணம் சிறக்க ஒவ்வோர் உருவைப் பெறுகிறது. அவ்விதம் ஒரு கோடி குணங்களும் ஒரு கோடி வகையான உருவங்கள் பெறுகின்றன. இவை அனைத்திலும் விந்து மண்டலத் தலைவனான சிவம் தனது சத்தியுடன் பிரிப்பின்றி விளங்கியும் (முன்னர் ''எண்ணில் பல்குணம்'' என்றார்) இங்கு ஒரு கோடி என்றார். அளவின் மிகுதியை உணர்த்தியவாறு. நீர் அணு, நெருப்பணு, நில அணு போன்றவைகள் தூலத்தில் வெவ்வேறு வகையாக விளங்குவதுபோலச் சூக்கும ஒளிநிலையிலும் வேறுபடுத்திக் காணக் கூடியதாய் உள்ளது. அத்தகைய அணுவிலும் சிவ மாகிய அறிவும், சத்தியமாகிய ஆற்றலும் உள்ளது.

**குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்**
**சதிர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்.**

சத்தியோசாத முகம் மேற்குத் திக்கான சிரசில் பின்புறம் உள்ளது. அங்கிருந்தே சீவன், பார்த்தல், கேட்டல், பரிசித்தல், உருசியறிதல், வாசனையறிதல் முதலியவைகளைத் தன் பிராண சத்தியால் இழுத்துக் கொள்ளும் திறமுடைய குதிரை வீரனாக எழுந்தருளி இருந்தும்.

மிசை - உணர்வு. பிராணனுக்குக் குதிரை என்று பரிபாஷையுள்ளது. குதிரை வீரன் ஆரோகணித்துச் செலுத்துதல் போல ஞானேந்திரிய கர்மேந்திரியங் களின் செய்கையை அறியும் ஆற்றல் மேற்குப் பாகம் என்ற பிடரிக் கண்ணில் உள்ளது. முகத்தின் முன்புறம் கிழக்கு, பின்புறம் மேற்கு என்றறிக.

**வேலம் புத்தூர் விட்டே றருளிக்**
**கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்:**

வேல் போன்ற சுழுமுனா நாடி, தனது தூரான அடிப்பாகத்தினின்று மேல்நோக்கிச் சென்றதில் உணர்வாகிய நீர் பிரகாசிப்பதைக் காட்டியருளியும். வேல்

கம்புவின் அடிப்பாகம் மூலாதாரமாகும். சத்தியை வெளிப்படுத்தியும். விட்டேறு-வேல் கம்பு, சத்தி. கோலம் - நீரோட்டம். இங்கு சுழுமுனா நாடி ஊடே பாயும் உணர்வு நீரோட்டம் போல் விளங்கும். இவ்வகை உணர்வு மேலே சென்று ஒளியையும் ஒலியையும் உண்டு பண்ணுகிறது.

**தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்**
**விற்பொரு வேடற் கீந்த விளைவும்:**

தர்ப்பணம் - முகம் பார்க்கும் கண்ணாடி. அஞ்ஞான திசையில் உள்ள சீவன் பிரணவமாகிய வில்லை வளைத்துச் சீவனாகிய அம்பினால் லட்சியம் என்ற பிரம நாட்டம் கொண்ட பிறகு தனது முகத்திற்கு முன் தன்னைக் காணும் சிதாகாய வெளியில் சாந்த நிலையை அடைந்தும்.

விளக்கம்:

முகம் பார்க்கும் கண்ணாடியைப் பார்த்த ஒருவனுக்குத் தனது அவலட்சணம் விளங்கி அழகு செய்து கொள்வதுபோல, முகத்திற்கு முன் தோன்றும் காரொளியைத் தரிசித்ததும் தனது சொரூபம் விளங்கியது. தனது ஆணவமே அந்தக் காரிருள் என்று கண்டு ஒளியுடைய சிவ நாட்டம் பெற்று ஆணவ வல்லிருளைக் கீழ்படுத்துவதில் சாதகன் ஒரு புதிய ஊரில் வசிப்பவனாக மாறுகிறான். அந்தப் புதிய ஊரே சாந்தம் பொருந்திய இடம். அதுவே புத்தூர்.

தன் உண்மைச் சொரூபத்தை அறிந்த வேதியனுக்கும், முட்டையினின்றும் வெளியாகும் குஞ்சுக்கும் த்விஜக என்று பெயர். அதாவது முதலில் பிறந்த நிலையினின்றும் வேறொரு பிறவியை எடுத்த வைகள் என்று பொருள். அக்கருத்தைப் பின்பற்றியே அண்டாகாயத்தைத் தெரிசித்தவன் சாந்த புருஷனாகிப் புதிதான ஆகாய மண்டலத்தில் நாட்டமுள்ளவனாய் வாழ்வான். வேடனின் வஞ்சகபுத்தி கெட்டுச் சாந்தமாகிய புதிய ஊரைத் தன்னுண்மையைக் கண்டு அடைந்தான்.

**மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி**
**சொக்க தாகக் காட்டிய தொன்மையும்:**

மொக்கணி - தோல் பை, தேகம். சொக்கு - அழகு. மூலாதாரச் சோதி தேகத்தைக் கடந்து மேலே சென்றதும் அண்டாகாயம் ஒரே சோதியாக அழகாகக் காட்டிய பழைமையும் ஆகாயசம்மியம் செய்யும் இச் சாதகன் தனது தேகத்தையே ஓர் ஒளிமயமாக உள்ளும் புறம்பும் ஊடுருவிச் செல்லும் ஒளி அணுக்களின் அழகான ஓட்டத்தையே காண்கிறான். முன்னர் அச்சோதியின் ஆற்றல் மூலாதாரத்தில் தோற்பையான உடம்பில் அடங்கிக் கிடந்தது. இப்போது அதுவே சொக்கதாகக் காட்டிய பழைமையாம். இது யாவருக்கும் நடைபெறுவதால் தொன்மை நிலையாயிற்று.

**அரியொடு பிரமற் களவறி யொண்ணான்**
**நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்:**

தேகம் எடுக்க உதவுபவர் - பிரமன். எடுத்த தேக சம்ரக்ஷணைக்கு உதவுபவர் விஷ்ணு. தேகத்தை அழிப்பவர் உருத்திரன். தேகம் தானல்ல. தான் ஓர் ஆகாயக் கூறலாயவன் என்று தனது ஒளி உருவை அறிந்தவன் வழிபடுவது எங்கும் நிறைந்த சிவ வழிபாடு. சிவம் இவர்களுக்கு அளிக்கும் பதவி மீண்டும் வாரா நெறியாகும். பிரமன் விஷ்ணு உருவ மூர்த்திகள். அவர்கள் மானிடர்களில் பக்குவான் மாக்களே யாவர். அகண்டத்தை எவ்வுருவும் அறியவொண்ணாது என்றபடி.

பிரமன் விஷ்ணு கலந்தே மூலாதார சத்தியைத் தூண்டிப் பிரஜாவிருத்தியைச் செய்து கீழ்மண்டல வியாபகம் செய்து வஞ்சகத் தன்மையுடைய நரிபோன்ற அபான வாயுவினைத் தூண்டித் தொழிற்படுத்தினர். மூலாதார சத்தி மேனோக்கி ஏறியது குதிரை யாயிற்று. அந்த உபகாரம் செய்தவர் சிவம். பிரமன் விஷ்ணு வியாபகம் கொண்டு பிரஜா விருத்தியினர் சிவத்தை அறியமாட்டார். அவருக்கு நரியே தான் விளங்கும், குதிரை விளங்காது. மூலவாயு காமவாயு என்பவை அபானனின் ஆற்றலால்

கீழ்முகம் கொண்ட விந்து நீக்கம் செய்து தேகத்தைக் கெடுப்பது. மூல வாயு மேலே சென்றபோது அதுவே வாசியாகிறது.

ஆன்ம தத்துவம் 24இல் பிரமனும் விஷ்ணுவும் ஆட்சி செய்கின்றனர். இத்தத்துவ அறிவால் சிவத்தைக் காண முடியாது. சுத்தமாயை விளங்கும் சிவ தத்துவம் தேகத்தைக் கடந்ததுபற்றி ஆகாய அறிவால் மட்டுமே, சிவத்தைக் காண முடியும் என்றபடி. நரியைக் குதிரையாக்கியது என்பது ஒரு பரிபாஷையாகும். இதைப் பலர் புராண வரலாறு என்று மயங்கியுள்ளனர்.

நரியைக் குதிரை செய்வானும்
நரகரைத் தேர்வு செய்வானும்
விரதங் கொண்டாட வல்லானும்
விச்சின்றி நூறு செய்வானும்
முரசதிர்ந் தானை முன்னோட
முன்பணிந் தன்பர்கள் ஏத்த
அரவரைச் சாத்தி நின்றானும்
ஆரூ ரமர்ந்தஅம் மானே. நாவுக்கரசர்

நரிபுரி காடரங் காநட மாடுவர்
வரிபுரி பாடநின் றாடுமெம் மானிடம்
புரிசுரி வரிகுழ லரிவையோர் பான்மகிழ்ந்
தெரியெரி யாடித னிடம்வலம் புரமே. சுந்தரர்

நிலத்தானம் என்பது சுவாதிஷ்டானம். மூலா தாரத்தின் செயல். இச்சக்கரத்தைச் சார்ந்திருந்தபோது அங்குள்ள அபானவாயு காமத்தைப் பெருக்கி வீரியத்தை இழக்கச் செய்தது. இது அசுரர் ஆட்சி நிலை. சைவ சமயத்தின் காளியின் நிலை. சுவாதிஷ்டான சக்கிர பேதனம் ஆவதில் சுவாதிஷ்டானம் மூலாதாரம் சிரசு என மூலவாயு மாற்றமடையும். இதுவே சிவம் ஆரோகணித்து வரும் வாசிக் குதிரையாகும். இந்த மாற்றம் அமையத் தூல பஞ்சாக்கரமான சிவாயநம துணை செய்யும் என்பதையும் அது எவ்விதம் துணை செய்யும் என்பதையும் விளக்கத் திருமூலர் கூறும் தூல பஞ்சாக்கரம் என்ற தலைப்பு கீழே கொடுக்கப் படுகிறது.

ஐம்ப தெழுத்தே யனைத்து வேதங்களும்
ஐம்ப தெழுத்தே யனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தின் அடைவை யறிந்தபின்
ஐம்ப தெழுத்தே அஞ்செழுத் தாமே. 2698

அகார முதலாக ஐம்பத்தொன் றாகி
உகார முதலாக வோங்கி யுதித்து
மகார இறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகும் நந்திதன் நாமமே. 2699

அகராதி யீரெண் கலந்த பரையும்
உகராதி தன்சத்தி யுள்ளொளி யீசன்
சிகராதி தான்சிவ வேதமே கோண
நகராதி தான்மூல மந்திரம் நண்ணுமே. 2700

வாயொடு கண்டம் இதய மருவுந்தி
ஆய இலிங்க மலற்றின்மே லேயவ்வாய்த்
தூயதோர் துண்ட மிருமத் தகஞ்செல்லல்
ஆயதீ றாமைந்தோ டாமெழுத் தஞ்சுமே. 2701

பொருள்: ஐம்பதெழுத்தாலேயே எல்லா வேதங்களும் ஆகமங்களும் செய்யப்பட்டுள்ளன. எழுத்தோசை உடலில் உள்ள ஆதாரங்களைப் பற்றித் தொழிற்படுவன.

| | |
|---|---|
| மூலாதாரம் | 4 |
| சுவாதிஷ்டானம் | 6 |
| மணிபூரகம் | 10 |
| அநாகதம் | 12 |
| விசுத்தி | 16 |
| ஆக்ஞை | 2 |
| ஆக | 50 |

இவ்விதமான வேத ஆகம ஞானம் புகட்டும் உண்மையை அறிந்தபின் ஐம்பதெழுத்தால் ஆன பரந்த அறிவைப் பஞ்சாக்கரமான ஐந்தெழுத்தால் அறிந்து கொள்ளலாம். அங்காத்தலினால் உண்டாகும் அகரம்

விரிந்து 51 அட்சரங்களாகின்றன (முன்னர்த் தேகத்தில் காட்டிய 50-ம் சிரசின் மேல் பொருந்தும் பிரணவமும் சேர்ந்து 51 ஆகின்றன). இவ்விதம் விரிந்து செல்வதில் உகாரம் என்ற சத்தி பரவிக் கண்டம் வரையில் எழுந்து எழுந்து வீழ்ந்து மகாரம் என்ற கண்டத்தை அடைந்து ஓசையாக வாயின் வழியாக வைகரி வாக்காக வெளியாகிறது. இவ்விதம் அமைவதில் நாதம் உதிக்கும் முதல் நிலை காமவாயு பொருந்திய குறித்தானமேயாகும் என்பது பற்றி நந்தியின் பெயர் நமசிவாய ஆயிற்று.

சுர எழுத்துகளான உயிர் எழுத்துகளின் நிலை சிரசாகும். இவ் எழுத்து ஓசையில் பரையின் ஆற்றல் கலந்துள்ளது. மற்ற எழுத்துகள் அவளுடைய எண் சத்திகளாகும். இவ்விதமான 51 எழுத்துகளிலும் ஈசன் அப்பரைக்கே ஒளி கொடுப்பவனாகக் கலந்துள்ளான். ஆகமம் கூறிய முறைப்படி சிவாயநம என்று ஓதில் நமசிவாய என்ற மூலமந்திரம் தேகத்தில் பொருந்தும்.

அவ்விதம் ஓதினால் உண்டாகும் ஆகாய அணுத் திரளசைவு வாய், கண்டம், இதயம், உந்தி, இலிங்கம் வந்தடைந்து யகாரமான ஆகாயம் மூலாதாரம் வழியே பரிசுத்தமாய்ப் பெரிய சிரசினை அடைந்து முடிவுறும். அவ்விதம் அமைந்தபோது புறத்தே செல்லுதலையுடைய இந்திரியம் பற்றிய அறிவுகள் ஓடாததுடன் இவ்வாற்றலின்முன் பயந்து நிற்கும். இதுவே நரி பரியாதல் என்பதை அறியவும்.

> கிரணங்கள் ஏழுங் கிளர்ந்தெரி பொங்கிக்
> கரணங்கள் விட்டுயிர் தானெழும் போது
> மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போது
> மரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே. **2702**

> ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
> ஆயுறு மந்திர மாரும் அறிகிலர்
> சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
> வாயுற வோதி வழுத்தலு மாமே. **2703**

குறிப்பு: சிவ ஆண்பால், சிவா என்பது பெண்பால். ஓத வேண்டியது சிவாயநம என்றது சத்தி பஞ்சாக்கரம் என்று கூறியுள்ளார். இதில் ஒரு ரகசியக் குறிப்பு உள்ளது. ஒரே பராசத்திதான் பல தொழில் வேறுபாட்டால் பல பெயரினை அடைகிறாள். இங்கு, சத்திக்குக் கொடுத்த அடைமொழி "சேயுறு கண்ணி" சிவந்தவரி படர்ந்த கண்ணையுடையவள். இந்த நெறி கண்களாலே பயிலப்படுவதால் இதற்குத் திபேத்தியர் அக்ஷி மார்க்கம் என்று பெயர் சூட்டியுள்ளனர். கண் பார்வையால் கீழுள்ள குண்டலினியை சிரசுக்குக் கொண்டு வருவதால் சிவாயநம என்பதைச் சிற்சத்திக் காக்கித் துவாத சாந்தம் செல்லும் நெறியைக் காட்டினர். மதுரை என்றால் மதுத்துளியால் அமைக்கப்பட்ட ஊர் என்று தலபுராணம் கூறும். சிற்றின்ப நிலைமாற்றமே பேரின்பத் துவக்கமாய் உள்ளதுபற்றி மதுரையை நரி பரியாக்கிய ஊராகவும் செய்தவர் மணிவாசகர். (கண்மணியால் வெளிப்படுத்தியவர்) என்றும் புலவர் புராணம் செய்துவிட்டனர். தில்லைக்கூத்தர் உணர்த்தும் நெறி இருதய மார்க்கம் ஆகும்.

மதுரையில் இருதய மார்க்கத்தால் அடையும் பலனும், அக்ஷி மார்க்கத்தால் அடையும் பலனும் பொருந்திக் காட்டவே, கால் மாறி ஆடிய கூத்தப் பெருமானையும் ஆங்கு அமைத்துள்ளனர். இது இறைவியின் சிறப்பில் பங்கு கொள்ள இறைவன் எழுந்தருளிய இடம்.

இம்மந்திரத்தில் கண்ட ஞாயிறும் திங்களும் கண்களேதான். தூலப் பகுதியான இருதயத்தை வலது கண்ணும், தூலப் பகுதியான குறியை இடது கண்ணும், மூலாதார அக்கினி மண்டலத்தைப் பிடரிக் கண்ணும் சூக்குமத்தில் நிலை கொண்டுள்ள தென்பதே அக்ஷிமார்க்கத்தின் அடிப்படைத் தத்துவமாகும். இது இரகசியமாய்க் காப்பாற்றப்பட்ட படியால் சாதாரணப் புலவர் அறிவுக்கு எட்டாததாக உள்ளது.

தெள்ளமு தூறச் சிவாய நமவென்
றுள்ளமு தூற வொருகால் உரைத்திடும்

வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே. **2704**

குருவழி யாய குணங்களின் நின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. **2705**

வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதுங்
குறிப்பது வுன்னிற் குரைகழல் கூட்டுங்
குறிப்பறி வான்றவங் கோனுரு வாமே. **2706**

நெஞ்சு நினைந்துதம் வாயால் பிரானென்று
துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரணென்று
மஞ்சு தவழும் வடவரை மீதுறை
அஞ்சில் இறைவன் அருள்பெற லாமே. **2707**

பிரான்வைத்த ஐந்தின் பெருமை யுணரா
திராமாற்றஞ் செய்வார்கொல் ஏழை மனிதர்
பராமுற்றுங் கீழொடு பல்வகை யாலும்
அராமுற்றுஞ் சூழ்ந்த அகலிடந் தானே. **2708**

**ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி**
**பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்**
**றீண்டு கனகம் இசையப் பெறாஅ**
**தாண்டா னெங்கோன் அருள்வழி யிருப்பத்**
**தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்:**

*முன் வரியில் குண்டலினி சத்தி சிரசையடை வதைக் கூறினவர் அதன்மேலுள்ள செயலை இங்குக் கூறுகின்றார். அண்டாகாயத்தில் விளங்கும் சீவனை ஆட்கொள்ளுமாறு அழகு பொருந்திய விந்து நாதங்கள் வெளிப்பட்டன. மூலாதாரத்திலிருந்து வாசியான உணர்வைப் பெருகும்படி செய்து தேகத்தில் அதன் பயனைப் பெறாமல் எமது தலைவனான சிவம் செய்தருளினன். அவ்வுணர்வின் பெருக்காலான விந்து நாத உணர்வில் இருக்க மேலும்*

மேலும் ஒளி பெருகுவதைப் பழைமையில் செய்தருளிய விதமும்.

**விளக்கம்:**

திருவடி - விந்து நாதங்கள். பாண்டியன் - சீவன். பரிமா - வாசி. விற்று - குண்டலினியை மேலெழும் படிச் செய்து. ஈண்டு - இவ்விடம், தேகம். கனகம் - பிரதிப் பிரயோசனம். இசையப்பெறாதான் - மூலாதாரத்தில் விளங்குபவர் காமேஸ்வரன் காமேஸ்வரியாவர். இவர்கள் மேலுள்ள ஆகாய மண்டலத்தை ஒளிபெறச் செய்தார்களே தவிரக் கீழுள்ள காம மண்டலத்தைச் செழிக்க வைக்க வில்லை. இது பரியங்க யோகம், ஆகாயப் பேறு என்ற தலைப்பு, திருமந்திரம் பார்க்க விளங்கும் இரகசியமாகும். இது ஸ்திரீயுடன் பொருந்திச் செய்யும் கிரியையில் விந்து நீக்கமின்றி ஆன்ம இலாபமடையும் உபாயமாகும்.

வைத்த இருவருந் தம்மின் மகிழ்ந்துடன்
சித்தங் கலங்காது செய்கின்ற ஆனந்தம்
பத்து வகைக்கும் பதினெண் கணத்துக்கும்
வித்த கனாய்நிற்கும் வெங்கதி ரோனே. 835

**அந்தண னாகி யாண்டுகொண் டருளி**
**இந்திர ஞாலங் காட்டிய வியல்பும்.**

அந்தணர் என்றால் அந்தத்தையுணர்வார் என்று பொருள். உலக சிருஷ்டியின் முதல் நிலையும், உலகின் லயமும் சிவம் அல்லது பரப்பிர்மத்தினிடமே உள்ளது. அத்தகைய பிர்மத்தை அறிந்து கொண்டுள்ளவர் என்று பொருள். குருஸ்தானம் வகிப்பவர் பிரமத்தை அறிந்திருப் பவராதல்பற்றிக் குருமார்கள் அந்தணராயினர். பிறப்பினால் அமைந்த சாதிக்கும் பிர்மானுபவத்திற்கும் சம்பந்தம் இல்லை என்பதை அறியவும்.

இந்திரஞாலம் என்பது நிலையற்ற உருவெளித் தோற்றத்திற்குப் பெயர். இங்கு தோன்றி மறையும் தேக தத்துவத்தை உணர்த்தும்.

எனது ஆசாரியன் என்னைச் சீடனாக ஏற்று நீ தேகமல்ல, நீ தேகி என்று ஆகாயத்தில் விளங்கும் அண்ட கோசத்தை விளக்கித் தேகம் பொய்த்தோற்றம் என்பதையும், அதனூடே உள்ளும் புறம்புமாக உள்ளது ஒளியே என்ற உண்மையைக் காட்டியருளிய தன்மையும்.

திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை
மருளா தருளும் மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமும் நாதன்
உருவாய் வரவிடி லோரஒண் ணாதே.

— திருமந்திரம் 1584

சிவகுரு என்ற தலைப்பு ஆறாந்தந்திரம் திருமந்திரம் பார்க்க விளங்கும்.

**மதுரைப் பெருநன் மாநக ரிருந்து**
**குதிரைச் சேவக னாகிய கொள்கையும்:**

சிரசுக்கு மேல் விளங்கும் மதுரையாகிய நல்ல பெருமை வாய்ந்த பெரிய நகரிலிருந்து வாசிப் பிராணனாகிய குதிரை செலுத்தும் வீரனாக வந்த கோட்பாடும்.

விளக்கம்:

சிரசுக்கு மேலுள்ள ஆகாயக் கூறுக்கு மதுரை என்று பெயர். மூலவாயு தேகத்தைக் கடந்து மேலே செல்வது வாசிக் குதிரையாகும். அதில் ஊர்ந்து செல்லும் உணர்வு குதிரை வீரனாக உவமிக்கப் பட்டுள்ளது.

நீடுஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
ஓடும் உயிரெழுந் தோங்கி யுதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்
தாடும் இடந்திரு அம்பலந் தானே. 2764

சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்
டொத்த ஆனந்தம் ஒருநட மாமே. 2769

**ஆங்கது தன்னி லடியவட் காகப்**
**பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்.**

*முன்வரியில் ஸ்திரீ புருஷ சேர்க்கையிலுண்டாகும் வாசியோகத்தைக் கூறினவர் இங்கு அதையே விளக்கு கின்றார். அங்குக் குதிரையைச் செலுத்தும்போது தனது அடியாளான மனைவிக்காக உரிமையுடன் பிருதிவி மயமான ஆண் குறியைச் சுமந்தும்.*

*பாங்கு - உண்மை, உறவு, இணக்கம், முறை, நன்மை. மண்சுமந்து - ஸ்திரீபுருட சேர்க்கை.*

மின்னிடை யாளுமின் னாளனுங் கூட்டத்துப்
பொன்னிடை வட்டத்தின் உள்ளே புகப்பெய்து
தன்னொடு தன்னைத் தலைப்பெய்ய வல்லாரேல்
மண்ணிடைப் பல்லூழி வாழலு மாமே. **841**

**உத்தர கோச மங்கையு ளிருந்து**
**வித்தக வேடங் காட்டிய இயல்பும்:**

*உத்தரகோசமங்கை முன்னர் ''உய்யவென்னுள் ளத்துள் ஓங்காரமாய் நின்ற விமலா'' என்ற பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. அஷ்ட தளகமல முக்குண அவத்தை பற்றியதும் ''மறைந்திட மூடிய மாயவிருளை'' என்ற தொடரில் விளக்கப்பட்டுள்ளது. ஈசான திக்கை உத்தரகோசமங்கை என்ற ஊரால் உணர்த்தியுள்ளார். உத்தரகோசமங்கை என்ற தலம் இராமநாதபுரத்துக்குப் பத்துக் கல் தொலைவில் உள்ள சிவத் தலம். சுவாமி பெயர் மங்களநாதர். அம்மன் பெயர் மங்களநாயகி. இது மதுரைத்தலம்போலவே, அம்மன் வலதுபுறமும் சுவாமி இடதுபுறமும் உள்ள மணக்கோல நிலை ஆலயம். இங்கு தலவிருக்ஷம் இலந்தை மரம். இவ்வூரை இலவந்திகைப் பள்ளி என்று சங்ககால நூல் கூறுகிறது. மதுரையைப்போல இவ்வூரும் பாண்டிய மன்னர்களால் ஆளப்பட்டு வந்துள்ளது. புறநானூறு 55, 56, 57 முதலிய பாடல்களில் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் பேசப் படுகிறான். துஞ்சுதல் - நிலைபெறுதல், தங்கல். இவன்*

உத்தரகோச மங்கையிலிருக்கும்போது வெள்ளியம் பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்ற பாண்டிய மன்னன் மதுரையிலிருந்து அரசாண்டதாகத் தெரிகிறது. கூத்தப் பெருமான் திருவுருவம், பல தலங்களிலும் வைக்கப்பட்டுள்ளது.

சிதம்பரத்தைப் பொற்சபை என்றும், திருக் குற்றாலத்தைத் தாமிரசபை என்றும், மதுரையை வெள்ளியஞ்சபை என்றும், திருஉத்தரகோச மங்கையை மரகத சபை என்றும் கூறுவர். இங்குள்ள கூத்தப்பெருமானுக்கு ஆதிச்சிதம்பரேசன் என்று அவ்வூர்த் தலபுராணம் பெயர் கூறுகிறது. கூத்தப்பெருமான் ஒளியுள்ள பச்சைக் கல்லால் செய்யப்பட்டு, கோயிலின் வடதிக்கில் உள்ளது. மார்கழித் திருவாதிரையில்தான் அலங்காரம் செய்து காண்பிப்பர். மற்ற நாட்களில் சந்தனத்தால் உருவம் முழுமையும் மூடப்பட்டிருக்கும். திரையிடப் பட்டிருக்கும். இவ்வூர் தொன்மையாக விருப்பினும் தேவாரப் பாடல் இல்லை.

தேகத்தில் சதாசிவரது வடபால்முகம் வாம தேவமாகும். வாமம் - அழகு. இடப்பக்கம், ஒளி, குறுமை, செல்வம், தீமை, முலை முதலிய பொருள்கள் உள்ளன. ஸ்திரீயுடன் பொருந்தும் பரியங்க யோகம் அறிந்தவர்க்கு ஸ்திரீயின் காம இன்பம் இங்கேதான் உணரப்படும். ஸ்திரீயுடன் பொருந்தும் உறவு பரிசம் முதல் இங்கே உணரப்படும். இதன் மேலே சென்றால் ஈசானர் என்ற ஊர்த்துவமுகம் விளங்கும். தூல உடலால் செய்யப்படும் சகல அசைவுகளுக்கும், மனத்தால் எண்ணப்படும் நுண்ணசைவுக்கும் இதுவேதான் இடம். நுண்ணசைவே நாதம். ஆங்கிலத்தில் **"Speech"** என்பர். சிவபூசகர் வாகீஸ்வர வாகீஸ்வரி நிலை யென்று ஈசானிய திக்கில் சிவபூசையில் பூசிப்பர்.

விந்து நாத நிலையே காரண சரீரத்தின் நிலை யாகும் என்பதனால், "வித்தக வேடங்காட்டிய இயல்பும்" என்றார். இது இயற்கையிலுள்ள ஒரு நிலையே. யாரும்

அடையக் கூடியதேயாகும். இவ்வூர்க் கூத்தப்பெருமான் விளக்கமும் அறியத் தக்கதே. சந்தனம் பிருதிவி தத்துவம். சிதாகாயத்தில் கண்டனுபவிக்க மரகத ஒளி பிருதிவி மயமான உடலால் மறைக்கப் பட்டுள்ளது. இதை அறியும் உபாயம் ஆருத்ரா நட்சத்திரத்தில் மார்கசிரிஷ மாதத்தால் அறியத்தக்கது. மாதத்தை உணர்த்துவது சூரியன். நட்சத்திரத்தை உணர்த்துவது சந்திரன். சந்திரனும் சூரியனும் மிருகசீரிடம் உள்ள இடத்தில் சேர்ந்தால் ஆத்ம சூரியனைக் காணலாம். இதுவே "பூவல மதனிற் பொலிந்தினிதருளிப் பாவநாசமாக்கிய பரிசும்" என்று கூறப்பட்ட விஷயம். சிரசின் அக்கினிமூலை வலது கண் பக்கமாகும். அதுவேதான் மிருகசீரிடம். திருவாதிரை பொருந்திய மிதுன ராசியாகும். குருகாட்டும் வழியில் சூரிய சந்திரர் என்ற இரு கண் பார்வையையும் அங்கு ஒன்று சேர்த்தால் ஒளி உதிக்கும். அவ்வொளியே வளர்ந்து ஈசானிய பாதத்தில் பிறகு விளங்கும் ஈசான மூர்த்தியின் நிலையாகும். அத்தகைய ஒ்ளியுடைய ஈசானர் தேக பாசத்தால் விளங்காது மறைக்கப்பட்டுள்ளார் என்பதே சந்தனப் பூச்சின் பொருள். சிரசுக்கு மேலே மரகத ஒளி காணக்கூடியதே. அந்த மரகத ஒளிக் கூத்தப் பெருமானையே மணிவாசகர் கண்டபத்தில் கூறுகிறார்.

பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொறியாகிப்
பேதங்கள் அனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே.

— கண்டபத்து

"நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதம் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கும்

ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச்செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழ.

— *திருஅண்டப்பகுதி*

*இதற்கும் தில்லைக் கூத்தனுக்கும் சம்பந்த முண்டா என்பதைச் சிந்திக்கவும். பச்சை ஒளியில் சிதாகாயத்தில் விளங்கும் கூத்தனைத் தத்துவ விளக்கமாகப் பச்சை ஒளி பொருந்திய கல்லால் திருவுரு அமைத்துக் காட்டியுள்ளனர்.*

**பூவண மதனிற் பொலிந்தினி தருளித்**
**தூவண மேனி காட்டிய தொன்மையும்:**

*அண்ணம் - உண்ணா, மேல்வாய், மேனாக்கு. முன் பிரணவம் விளங்கிய இடத்தில் சந்திரனின் பதினாறு கலையும் விளக்கப்பட்டுள்ளது. இங்குக் கண்டத்திலுள்ள விடகலையை விளக்குகின்றார்.*

*கலைகளுக்குரிய தானங்கள்:*

மூலமுதல் நாபியந்தம் கோடகலை; நாபி
முதல் இதயாந்தம் மேதை; இதயமுதல் கண்டத்து
ஏலும் அருக்கீசம்; விடம் கண்டமுதல் தாலு
இரந்தாத்துட் புருவ நடுவிந்து; நடுமுதலாச்
சால்பிரமாந் திரமட்டுஅர்த்த சந்திரன்; நிரோதி
தகுநாதம்; நாதாந்தந் தானாகும்; இவைமேல்
கோலமுதல் துவாத சாந்தத் தளவும்சத்தி
குலவு வியாபினி சமனை உன்மனையும் குறிப்பாம்.

*கண்டம் முதல் உண்ணாக்கு வரையில் விடகலையின் வியாபகமாகும். உண்ணாக்கு முதல் புருவ நடுவரையில்*

விந்து கலையும் உள்ளன. விடகலை இருளுக்குக் காரணமாகும். உண்ணாக்குக்கு மேல் ஒளியெழச் செய்வதே ஞான தீட்சையாகும். இது சம்பிரதாயத்தாலறியத்தக்கது. யாருக்கும் பக்குவம் நோக்காது உணர்த்தப்படுவதில்லை. அப்படியே ஒரு குரு உணர்த்தினாலும் உள்ளிருந்து விளக்கும் சிவம் பக்குவமில்லாதவர்க்கு விளங்கா மலேதான் இருப்பான். இதைச் சம்பிரதாயம் என்று ஒரு தலைப்பில் திருமூலர் விளக்கியுள்ளார். அது கீழே தரப்படுகின்றது. மிக நுட்பமான பொருளையுடையது.

> உடல்பொருள் ஆவி உதகத்தாற் கொண்டு
> படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
> நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்
> கடியப் பிறப்பறக் காட்டினன் நந்தியே. 1778

உதகம் என்ற நீர் முன்னர் உணர்த்தப்பட்டுள்ளது. சிருஷ்டியின் காரியமாக ஆகாய அணுக்கள் கீழ்நோக்குதலில் வேகங் கொண்டபோது சிருஷ்டி அமைகிறது. இது சீவனின் பழமலப் பற்றேதான் காரணமாகியிருந்து காரியமாக மாறுகிறது. ஞானம் பெற்ற சீவன் பிருகிருதியின் கவர்ச்சியில் ஈடுபடாமல் சத்தியப் பொருளான சிவத்தின்பால் வேகங்கொண்ட பற்றுதல் அமையும்போது கீழிருந்து சிரசை நோக்கிப் பாயும் உணர்வை அறியக்கூடும். இந்த உணர்வே ஆகாய கங்கை. இதனால்தான் சீவனின் மலக்குற்றம் சுத்தம் செய்யப்படுகிறது. புறத்திலுள்ள நீரால் அல்ல.

உடல்பொருள் ஆவி என்பவை தேகமும் தேகத்தாலடையப்படும் போகப் பொருளும். சீவன் ஆகாய சம்மியம் செய்வதில் நாட்டம் கொண்டபோது பிரு கிருதியின் பிடிப்புத் தளர்கின்றது. தேகத்திலும் போகப் பொருளிலும் உபேக்ஷை இயல்பாக உண்டாகி, சிரசில் மேலுள்ள ஆகாய மண்டலம் விந்து நாதமண்டலங்கள் சீவனது அறிவுக்குப் புலப்படும் தன்மையை அடைகின்றன. கை என்பது சுழுமுனையை உணர்த்தும் ஒரு பரிபாஷைச் சொல். கைவைத்தல் என்று சொல்லுவது

பாதுகாத்தல் என்ற பொருளையுடையது. சிவம் தனது வருகையை உணர்த்துவது, நாதவொலியின் வழியே ஆகும். இந்த நாதவொலியே பிறவிப் பகையை வெல்லுவது. இதை ''நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கி'' என்றார். இதனால் தொடர்ந்து வரும் பிறப்பின் காரணம் கெடும். நொடித்தல் - ஒலி எழுப்புதல்.

உயிரும் சரீரமும் ஒண்பொரு ளான
வியவார் பரமும்பின் மேவும் பிராணன்
செயலார் சிவமுஞ் சிற்சித்தி யாதிக்கே
உயலார் குருபரன் உய்யக்கொண் டானே. 1779

பொருள்: உயிர் உடலைப் பற்றியபோது பிராணனது கதி உடலளவாகக் கீழ்நோக்கிச் சென்றது. உயிர் ஒளி பொருந்திய சிவநாட்டம் கொண்டபோது பிராணவாயுவும் சிவத்தைத் தொடர அதன் பின்னாவது போல் ஊர்த்துவ முகங்கொண்டு சிரசை நோக்கிப் பாய்ந்தது. இவ்விதச் செயலால் சீவனைச் சிற்சத்தியினிடம் பொருந்துமாறு செய்து மேலான குருபரனான சிவம் செய்தருளினன்.

பச்சிம திக்கிலே வைத்தஆ சாரியன்
நிச்சலும் என்னை நினையென்ற வப்பொருள்
உச்சிக்கும் கீழது உண்ணாக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே. 1780

பச்சிமம் - மேற்கு. இது சிரசின் பின் மூளையிலுள்ள பிடரிக்கண் (விவரணம்). சிவகுரு என்னைப் பிடரிக் கண்ணை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கச் செய்தனன். அந்த அறிவுப் பொருள் சிரசின் உச்சிக்குக் கீழாகவும் உண்ணாக்குக்கு மேலானதுமான இடம் சகஸ்ரதளமாகும். இங்கே சிந்திக்கக் கூடிய மந்திரம் ஏகாக்ஷரம் என்ற பிரணவமேயாகும். பிரணவம் செயலற்ற மௌனத்தை உண்டாக்கிவிடும் என்றபடி. இதையே சிதக்கினி குண்டம் என்பர். அதாவது ஞானத்தால் விளையும் அக்கினி குண்டமாகும். இதிலே தன்னைத்

தியாகம் செய்தலே ஞானயக்ஞும். இதுவே பூவண்ணம். உலகோர் இவ்வுண்மையை அறியத் திருவண்ணாமலை என்று க்ஷேத்திரம் அமைத்துக் கார்த்திகை தீப தரிசனத்தைச் சிறப்பு விழாவாக்கி அம்மலையை ஈசுவரன் என்றறிவித்துள்ளனர். இத்தலம் நினைக்க முத்தி கொடுக்கும் தலம் என்பர். இத்தலத்தில் உள்ள அம்பிகையை உண்ணாமுலை யம்மை என்பர். தேகத்தில் சிரசின் மேல் விளங்கும் சித் சொரூபிணியை நினைப்பவர் மீண்டும் உலகில் பிறந்து தாயின் பாலை உண்ணாதவாறு செய்யும் அம்மையாகும்.

பெட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனை
யொட்டடித் துள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின்
தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே. 1781

பொருள்: உண்மை யின்னதென்று அறியாமல் வெறும் சந்தனப்பொட்டு வைத்து வாய்வாதம் பேசிக் கொண்டிருந்த என்னை, முழுதும் மாறும்படிச் செய்து என்னிடமுள்ள இருளை அகற்றி, நான் அவனைப் பெறவும் அவன் என்னிடம் பொருந்தவும் உள்ள ஒரு சமதை நிலையை உண்டாக்கிப் பண்டமாற்றுச் செய்து கொண்டான்.

உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்கள் உணர்ந்தவக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்து கண்டாரே. 1786

பூவண்ணம் சகஸ்ரதளம் உண்ணாக்குக்கு மேல் விரிந்து விளங்குமிடம் என்பதையும், அதுவே விந்துநாதங்களின் இடம் என்பதையும் அறிக. இது சதா சிவத்துக்குரிய பகுதியாகும். இது காரணத்தாலேயே திருவெம்பாவையில் உள்ள நவசத்திகளும் இங்கு இடம் பெறுவர். எல்லாத் தோத்திரங்களின் சூக்கும அசைவுகளும் இங்கு இடம் பெறும்.

சகஸ்ரதளத்தில் பிரகாசத்துடன் விளங்கிப் பரிசுத்த மான ஒளியைக் காட்டிய பழைமையும், பிரண வத்தின் விந்து நாதங்கள் விளங்குமிடமும் சிரசேயாகும். உருவம் பொருந்திய அறிவிலும், அகண்ட அறிவிலும் விளங்குபவர் அருவுருவான ஒளி வடிவேயாகும்.

**வாத வூரினில் வந்தினி தருளிப்**
**பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்:**

வாதம் - காற்று. வாதவூர் என்றால் பிராணன் மோதும் ஊர். இயல்பாகப் பிராணன் மூக்குத் துவாரங்களின் வழியே உட்புகுந்து சுவாசப்பைக்கு நுழைவது யாவருக்கும் நடக்கும் இயல்பு. ஞானிகள் ஆகாய வடிவில் சிவத்தைக் காண்பதில் பிராணனின் கதி அண்ணாக்குப் பிரதேசத்திற்குமேல் சிரசை நோக்கிப் பாய்ந்து அங்குப் பல பிறவிகளின் தொடர்பால் உண்டான பாசமயமான ஓர் அடைப்பைத் திறந்து சிரசினுட் புகுந்து சஞ்சரிப்பதனால் விளங்கும் ஒரு நாதமே கூத்தப்பெருமானின் திருச்சிலம்போசையாகும். இது சிவம் தன்னை விரும்புபவருக்குத் தனது வெளிப்பாட்டைக் காட்டும் குணமாகும். முன்னர் 'சீரோன் கழலில்' விளக்கப்பட்டுள்ளது.

இருந்தனள் ஏந்திழை என்னுள்ளம் மேவிப்
பொருந்திய நால்விரல் புக்கனள் புல்லித்
திருந்திய தாணுவிற் சேர்ந்துடன் ஒன்றி
அருந்தவ மெய்தினள் ஆதியி னாளே. 1113

பொருள்: உண்ணாக்கு முதல் சிரசுவரையில் உள்ள நான்கு விரற் பிரதேசத்தில் எனது சிதக்னி குண்டத்தில் தேவி விளங்கினள். என்னைப் பக்குவம் செய்து சிவத்தை அடையும்படியாகச் சிவத்தை வெளிப்படுத்தி ஆதி சத்தி அருமையான தவத்தைச் செய்தனள்.

வாதவூர் என்ற ஊர் மதுரைக்குப் பன்னிரண்டு கல் தொலைவில் உள்ள சிவத்தலம். வாதம் என்ற சொல் இரசவாதத்தைக் குறிக்கும். மலக்குற்றத்தோடு கூடிய

சீவனை நாதமோதுதலினால் தூய்மை செய்யப்படும் பிரதேசம் எனினும் பொருந்துவதேயாகும்.

போற்றியென் றேன்எந்தை பொன்னான சேவடி
ஏற்றியே சென்றும் எறிமணி தாணாகக்
காற்றின் விளக்கது காய மயக்குறும்
ஆற்றலுங் கேட்டதும் அன்றுகண் டேனே.

— திருமந்திரம் 2521

இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய் - அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை.

**திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்**
**கருவார் சோதியில் கரந்த கள்ளமும்.**

மேன்மை பொருந்திய சிவ சூரியனாக சகஸ்ர தளத்தில் விளங்குபவன் தேகப்பற்றுடையவரது உள்ளத்தில் மறைந்திருந்த வஞ்சகத் தன்மையும்.

**பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்**
**பாவ நாச மாக்கிய பரிசும்:**

பூவலம் என்பது வலப்புறக் கண். இதன்மேல் குரு கடாட்சத்தால் காணும் ஒளி ஞான தீட்சை, முதல் தீட்சையாகும். இக்கண்ணுக்குச் சூரியன் என்று பெயர். இந்தப் பிரகாசத்தை அறிவதால் பாவங்கள் நாசமாக்கப்பட்ட வெகுமதியும், பிங்கலா நாடியின் நிலை பற்றி இக்கண்ணுக்குச் சூரியன் என்று பெயர்.

**தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து**
**நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்:**

இது ஒரு பரிபாஷை விஷயமாகும். நீர்வேட்கை ஏற்படின் உடலின் ஆற்றல் கெடும். இது காமஜயம் பெற இல்வாழ்க்கையிலுள்ளவர் மனைவியுடன் பொருந்தி இறைவனை நினைத்திருந்தால் காம வேட்கை மாறி உண்ணும் அமுரிதாரணையாகும். கடல் பிரதேசம் உப்பு நீர்

பயனற்றது. அதுவே சுவாதிஷ்டான வழியாக மூலாதாரம் சென்று சிரசை அடையும் உணர்வு நன்னீர். அதை ஏந்திவரும் சிவமே சேவகன். சேவகம் என்றால் யானை துயிலிடம். யானை என்பது பிரணவம், பிரணவ சொரூபனான சிவம். பரியங்கயோகம், அமுரிதாரணை திருமந்திரம் பார்க்க.

உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்
கடலிற் சிறுகிணற் றேற்றமிட் டாலொக்கும்
உடலில் ஒருவழி ஒன்றுக் கிறைக்கில்
நடலைப் படாதுயிர் நாடாலு மாமே. 845

தெளிதரும் இந்தச் சிவநீர் பருகில்
ஒளிதரு மோராண்டில் ஊனமொன் றில்லை
வளியுறும் எட்டின் மனமும் ஒடுங்கும்
களிதருங் காயங் கனகம தாமே. 846

நூறு மிளகு நுகருஞ் சிவத்திநீர்
மாறும் இதற்கு மருந்தில்லை மாந்தர்கள்
தேறில் இதனைத் தெளியுச்சி கப்பிடின்
மாறும் இதற்கு மறுமயி ராமே. 847

கரையரு கேநின்ற கானல் உவரி
வரைவரை என்பர் மதியிலா மாந்தர்
நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு
நரைதிரை மாறும் நமனுமங் கில்லையே. 848

அளக நன்னுத லாயோ ரதிசயங்
களவு காயங் கலந்தஇந் நீரிலே
மிளகு நெல்லியும் மஞ்சளும் வேம்பிடில்
இளகும் மேனி யிருளுங் கபாலமே. 849

வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்
நாரி மருந்தென்றும் நந்தி அருள்செய்தான்
ஆதி மருந்தென் றறிவார் அகலிடஞ்
சோதி மருந்திது சொல்லவொண் ணாதே. 850

**விருந்தின னாகி வெண்கா டதனிற்**
**குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்:**

குருந்து என்பது சுழுமுனா நாடியின் குருத்தான பிடரிக்கண், வலது நேத்திரம், இடது நேத்திரத்தா லாய பூவண்ணம் என்ற சிதக்கினிக் குண்டத்தைக் குறிக்கும். விருந்துண்பவர் வீட்டுக்கு வருவது எப்போதோ ஒவ்வொரு சமயந்தான். நிலையாகத் தங்கிவிடின் வீட்டுறுப்பினரில் ஒருவராகி விடுவர். அதுபோல வெண்காடு என்ற வெள்ளை ஒளியில் எப்பொழுதோ ஒவ்வோர் சமயம் எழுந்தருளியும், மற்றைக் காலத்தில் சுழுமுனையின் கீழேயிருந்து விளங்கிய முறைமையும்.

**விளக்கம்:**

சாமானியருக்குக் குண்டலினி மூலாதாரத்தில் சுருண்டு கிடக்கும். ஞானிகளுக்குப் பிடரிக் கண்ணை இடமாகக் கொண்டு பாம்பின் படம்போல் நினைக்கும்போதெல்லாம் முகத்தின் முன் ஒளியாகவும், நினையாதபோது பிடரிக்கண்ணில் அடங்கியும் குண்டலினி இருக்கும். பிரகாசமான வெண்ணிற ஒளியை வெண்காடு என்று கூறப்பட்டுள்ளது. தஞ்சை ஜில்லா திருவெண்காடு தலத்தில் சோம சூரிய அக்கினி தீர்த்தம் என்று மூன்று தீர்த்தங்கள் உள்ளன. சுவாமி பெயர் சுவேதாரண்ணியேசுவரர். அம்மன் பெயர் பிரமவித்தியாம்பிகை. அவ்வூர்ப் புராணத்தில் குருந்த மர வரலாறு யாதும் இல்லை.

**பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்**
**கட்டமா சித்தி யருளிய அதுவும்:**

தேகத்தில் பிரணவ உறுப்பாக 64 சத்திகள் இருந்து இயக்கிக் கொண்டுள்ளன. அவைகளின் சத்தி கெடின் தேகத்தின் ஆற்றல் கெடும். ஆனால், சுத்த வித்தியா தத்துவம் ஒளிமயமாக அறிவுமயமாகச் சிறப்புறும். பட்டது என்றது அழிந்தது என்ற ஒரு பொருளும், தோன்றியது என்ற ஒரு பொருளும் உள்ளது. சுத்த வித்தியா தத்துவம் தேகமன்னியிலே தொழிற்படக் கூடியது. அவ்வகையான சூக்கும உடலில் எண்வகை மாசித்திகளை யருளிய அவ்விதமும்.

அட்டகர்ம சித்தி என்பது தம்பன வசியம் முதலான எண் கரும சித்தி. இவை பந்தத்துள்ளாக்குபவையாகும். அட்டமாசித்தி என்பவை, அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் முதலான எட்டு சித்திகளாகும். இவை யோக சித்திகளாகும்.

"எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை
எய்துவ தாகாதே
என்னை யுடைப்பெரு மான்அரு ளீசன்
எழுந்தருளப் பெறிலே." — திருப்படையாட்சி

"இயக்கி மாரறு பத்து நால்வரை
எண்குணஞ் செய்த ஈசனே"
— திருக்கழுக்குன்றப் பதிகம்

பிரணவ கலைகள்:

| | |
|---|---|
| அகர கலைகள் | 10 |
| உகர கலைகள் | 16 |
| மகர கலைகள் | 24 |
| விந்து கலை | 4 |
| நாத கலைகள் | 10 |
| | 64 |

விந்து கலை என்பது நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி என்பனவாகும். சாந்தியதீத கலையே பத்துப் பேதமாக நாத கலை அல்லது சிவகலை என்ற பேரினை உடையது என்றறிக.

**வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு**
**காடது தன்னிற் கரந்த கள்ளமும்:**

ஜீவர்களின் அஞ்ஞான திசையில் எவ்வகையான குணதர்மங்களுடன் கூட்ட வேண்டுமோ அவ்விதமான குணதர்மங்களில் மறைந்திருந்து வேடுவன் வேட்டை யாடுவதுபோல் ஜீவர்களைக் கவர்ந்த வஞ்சகத் தன்மையும்.

வேடுவன் - சிவம்
காடு - அஞ்ஞானம், இருள்.

**மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கான் ஒருவ னாகிய தன்மையும்:**

*சீவன் சிவத்தை அறியப் பக்குவமானபோது தனது உண்மையைத் தக்க உருவுடன் தான் ஒருவனேதான் பலவாறு காட்சியளித்தவன் என்ற உண்மையை உணர்த்தியும்.*

*மெய்க்காட்டு - உருக்காட்டு.*

*பக்தனின் விருப்பப்படியே உருவமோ அருவமோ அமைந்து பக்தனின் மன நிலைமைக்கேற்பச் சந்தேகம் தெளிவித்தல் நடைபெறுவது வழக்கத்தில் உள்ளதே. ஒருவனே பல தோற்றங்களுடன் பக்தனுக்கு வெளிப்படுகையால் வேண்டுருக்கொண்டு என்று கூறினார். ஞானிக்கு ஒரே மெய்ப்பொருள் பற்றித் தக்கான் ஒருவனாகிய தன்மையும். தக்கான் - தகுதியுடையவனாய்.*

*ஒருவனாகிய தன்மை - சிவம், பரப்பிர்மம்.*

ஒப்புனக் கில்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. — *பிடித்தபத்து*

ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை ஏற்றுவித்த
என்றாதை தாதைக்கும் எம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பி.
— *திருக்கோத்தும்பி*

**ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்:**

ஓரியூர், கிழநரி வாசஞ் செய்யும் ஊர். நீண்டகால வஞ்சகத் தன்மையில் முதிர்ந்த காம வாயுவின் நிலை (அபானவாயுவின் நிலையான மூலாதாரம்)யில் விரும்பிப் பூமியிலுள்ளோர்க்குப் பெரிய பாலகன் என்ற விநாயகரைக் குழந்தையாகக் கொண்ட தன்மையும்.

**விளக்கம்:**

சகல மந்திரங்களும் சொல்லின் ஓசையாகி மூலாதாரத்திலிருந்து உதான வாயுவால் மேனோக்கித் தொண்டைக்கு வந்து வைகரியாக வெளிப்படுகிறது. மூலாதாரத்திலிருந்து தொண்டை வரையில் உதித்த சகல மந்திரங்களும் தொழிற்பட உதவுவது பிரணவ சொரூபமான கணபதியேயாவர். இவரே தூலப் பிரணவத்தில் தொண்டையால் வெளிப்படுபவர். சூக்குமப் பிரணவம் என்ற விந்து நாதங்களை அறிந்தவர்க்குச் சூக்குமை வாக்காகச் சிரசில் வெளிப்படுபவர். கணபதி, கணநாதராக விளங்கு பவர். பூமிதத்துவம் வரையில் அவரது தும்பிக்கை வியாபகம் ஒரு சங்கேதக் குறியாகும். பூமி தத்துவமான துவாதிஷ்டானத்திற்கும் மூளைக்கும் இரு வழியான தொடர்புண்டு. ஒன்று உணர்ச்சி வழி; மற்றொன்று அறிவின் வழி. இதை ஆங்கிலத்தில் **(Sympathetic system)** என்றும், **(Cerebro spinal system)** என்றும் கூறுவர். சாதாரண மனிதனுக்குக் காமம் உணர்ச்சி வழியில் இயங்குவது அதனிடம் அபானன் விளங்கும் இடமேயாகும். உணர்ச்சியேதான் ஆகாயக் கூறில் ஒரு பெண்ணைக் கண்டதும் காம நிலையில் உள்ள நரம்புத் தொகுதிகளைச் செயலுக்குத் தயார்படுத்துகிறது. இது பொருளிடம் ஊடாடிப் பெற்ற சுகமே வாசனையாக இருந்து மேலும் மேலும் அதை விரும்பியடைவதில் இன்பத்தைக் காண்டல், சிவத்தின்பால் காதல் கொண்டவனுக்கு உணர்ச்சி நரம்புகளின் தாக்குதலின்றி அக்காமம் சுவாதிஷ்டான சக்கரத்தின் வெளிமுகக் காரியத்தை மாற்றி உள்முகமாய்த் திருத்தி மூலாதாரம் சென்று சிரசை அடையும். இதுவே **(Cerebro spinal system)** என்ற விஷயம். இதனாலேதான் பிரணவம் எல்லா

மந்திரங்களுக்கும் அரசனாகும். ஞானிக்கு உள்ள சிவக்காதலும் காமிக்கு உள்ள காமமும் ஒரேயிடத்தில் நிலை கொண்டு இருவேறு வகையாகத் தொழிற்படுகிறது.

அதுக்கென் றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்
பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோல்
சதுக்கென்று வேறே சமந்தாரைக் காண
மதுக்கொன்றைத் தாரான் வளந்தரு மன்றே. **2950**

அகாராதி யீரெண் கலந்த பரையும்
உகாராதி தன்சத்தி யுள்ளொளி யீசன்
சிகாராதி தான்சிவ வேதமே கோண
நகாராதி தான்மூல மந்திரம் நண்ணுமே. **2700**

வாயொடு கண்டம் இதய மருவுந்தி
ஆய இலிங்க மவற்றின்மே லேயவ்வாய்த்
தூயதோர் துண்ட மிருமத் தகஞ்செல்லல்
ஆயதீ றாமைந்தோ டாமெழுத் தஞ்சுமே. **2701**

துண்டம் - முகம், மூக்கு, யானைத் துதிக்கை. இரு - பெரிய.

**பாண்டூர் தன்னில் ஈண்ட இருந்தும்:**

பாண்டு - வெளுப்பு.
பாண்டூர் - வெண்ணிறமுள்ள சிதாகாய மண்டலம்.
ஈண்டல் - செறிதல், திரள்தல்.
சிதாகாய வெண்ணிற ஒளியில் செறிந்திருந்தும். இது சதாசிவரது மேல்நோக்கிய ஈசான முகமாகும்.

**தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவிற்**
**கோவார் கோலங் கொண்ட கொள்கையும்;**

தேவூர் - தெய்வம் வாழுமூர்.

சகஸ்ரதளத்தைத் தெய்வம் வாழும் ஊர் என்று கொண்டு அதன் முன்னர் வலது கண்ணுக்கு மேலே விளங்கும் ஒரு சிறு ஒளியைத் தனது இடமாகக்கொண்டு விளங்கும் தேகியை உணர்த்தி அதுவே தேகத்திற்குத் தலைவனாக விளங்கும் என்று காட்டிய கொள்கையும்.

விளக்கம்:

தேகம் அனுபவித்தவைகளை எல்லாம் வாசனா ரூபமாகப் பெற்றுள்ளவன் தேகியாவன். அந்தத் தேகி தேகத்தில் இருக்கவில்லை. தேகத்துக்கு வேறாய் ஒளியாகத் தேகத்தைச் சூழ உள்ள ஆகாயத்திலிருந்து கொண்டு ஆகாயக் கூறாலேயே இந்தத் தேகத்தை நிர்வாகம் செய்தும் அறிந்தும் வருகிறது. உயிர் என்ற ஆகாயம் சூரியனாகவும், சந்திரனாகவும், தேஜசாகவும் இருந்து உடலைச் செயல்படுத்துகிறது. இது ஞான குருவால் உணர்த்தப்படும் முதல் தீக்ஷையாகும். இதையே முன்னர்ப் பூவலம் என்றவிடத்தில் விளக்கப்பட்டது.

இந்தச் சூரியன் தேகமாகக் காணும்போது அநா கதம் என்ற இருதயத்தை யிடமாகக் கொண்டது என்று கிரியை வழி நூல்கள் கூறும். யோக நெறி பற்றிய நூல்கள் உந்திக்கமலத்தைக் கூறும். எப்படிக் கூறினும் மணிபூரகமும் அநாகதமும் சூரிய கண்டமாகும்.

ஞான தீட்சையின் முதல் நிலை இதுவாகும். தேகி தேகத்தை விட்டும் இருந்தும் நடத்தும்.

உந்திச் சுழியின் உடனேர் பிராணனைச்
சிந்தித் தெழுப்பிச் சிவமந் திரத்தினால்
முந்தி முகட்டில் நிறுத்தி அபானனைச்
சிந்தித் தெழுப்பச் சிவனவ னாமே. 732

பிராணனாகிய சூரியனை எழுப்பி அறிவதில் தேகம் நாமல்ல என்ற ஞானம் உதிக்கும். தேகமாகக் கண்டபோது தான் உயிரின் அவத்தை நிலைகளான கீழாலவத்தையையும் மேலாலவத்தையையும் பொருந்தும் தேகியாகக் கண்டு ஆகாய சம்மியம் செய்வதில் சுத்தாவத்தை தொடரும். இதுவே ஞான யோகமாகும்.

**தேனமர் சோலைத் திருவா ரூரில்**
**ஞானந் தன்னை நல்கிய நன்மையும்:**

காமம் கள் போன்று போதையுடையது. காமம் விளக்கும் சோலை என்று மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம் ஆகிய மூன்றும் தொழில்படும் நிலையான மூலாதாரச் சக்கரத்தைக் குறிப்பிட்டுள்ளார். இது முன்னர்க் கோகழி வந்தவிடத்தில் சிவபுராணத்தில் விளக்கப்பட்டுள்ளது. முன்னர் சூரியனை வெளிப்படுத்தும் முறையை விளக்கினவர் பின்பு சந்திரனை எழுப்பும் உபாயத்தை விளக்கி மூலாதாரமும் சிரசும் நேரே தொடர்புகொண்டு நமசிவாய என்ற சிவம் நிற்கும் நிலை உணரப்படுகின்றமையின் இந்தத் தீக்கையால் ஞானத்தைக் கொடுத்தருளிய நன்மையும்.

மாணிக்கவாசகர் புராண வரலாறு திருவாரூரில் ஞானம் பெற்றதாகக் கூறவில்லை என்பதை அறியவும். மூலாதாரத்தில் இருள்மயமாய் விளங்கினவரே சகஸ்ரதளத்தில் அருவமாய் ஒளியாய் விளங்குபவர். இவ்விதம் இவ்வுருவத்தின் ஆற்றல் மேலே சென்றபோது சகல உருவ ஆற்றல்களையும் தன்னுடன் கொண்டு மேலே செல்வது பொருந்தும் நிலையில் பெருந்துறைச் செல்வராகினார்.

> திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
> கருவேர் அறுத்தபின் யாவரையும் கண்டதில்லை
> அருவாய் உருவமும் ஆயபிரான் அவன்மருவும்
> திருவாரூர் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ.
>
> — **திருத்தெள்ளேணம்**

உயிர் பொருந்திய ஆகாயக் கூறு சந்திரனொளி யையும் சூரியனொளியையும் ஆத்ம தேஜஸை (அக்கினியை)யும் கலந்து விளங்குவதாகும். மூலாதாரத்திலிருந்து சந்திரனொளி எழுப்பப்பட்ட பிறகு அது இடது கண்ணுக்கு மேலே (உத்தரகோசமங்கை) வந்து பொருந்தும். இந்த இரண்டொளியினூடே ஆத்ம தேஜசும் கலந்தே அறிவாய் விளங்குவது.

> **இடைமரு ததனில் ஈண்ட இருந்து**
> **படிமப் பாதம் வைத்தவப் பரிசும்:**

முன்னர் இடாநாடியை விளக்கியவர், பிங்கலா நாடி சேருவதால் உண்டான ஆத்ம தேஜசு சுழுமுனையின் ஊடே சென்று பிடரிக் கண்ணில் சிறப்பிடம் பெறுகிறது என்றார். இம்மூன்றும் பொருந்துவதில் வெண்மையான திருவடியைப் பதிப்பித்த திருவருள் கடாட்சமும். படிமம் - வெண்மை; வெறியாட்டு. படிமத்தான் - ஆவேசக் காரன், சாமியாடி, வெறியாட்டுக்காரன்.

சூரிய சந்திரர் சேருவதை இடைமருது என்றார்.

மருது என்றால் மருத மரத்திற்கும், தில்லை மரத்துக்கும் உள்ள பொதுப் பெயர்.

தஞ்சை ஜில்லாவில் திருவிடைமருதூர் என்ற க்ஷேத்திரம் உள்ளது. அங்கு தலவிருக்ஷம் மருதமரம். சுவாமி பெயர் மகாலிங்கம். அம்பாள் பெயர் நன் முலைநாயகி. வடமொழிப் பெயர் மத்தியார்ச்சுனம். சகஸ்ரதளத்தில் சீவனின் அறிவும் ஈஸ்வரனின் அறிவும் பொருந்திய நிலை முன்னர் அடித்தலை அறியுந்திறங்கூறல் கூறியவிடத்து விளக்கப்பட்டுள்ளது. சீவன் உயர ஏற ஈசுவர சகாயம் வேண்டும். அவ்வித சகாயம் பெற்றவர் படிமத்தார் - சிவனடியாராக ஆகின்றனர்.

> எந்தையெந் தாய்சுற்றம் மற்றுமெல்லாம் என்னுடைய
> பந்தம் அறுத்தென்னை ஆண்டுகொண்ட பாண்டிப்பிரான்
> அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த
> பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ.
>
> — திருப்பூவல்லி

**ஏகம் பத்தின் இயல்பா யிருந்து**
**பாகம் பெண்ணோ டாயின பரிசும்:**

மூலாதாரத்திலிருந்து சுழுமுனை நாடி வழியாகச் சிரசை யடைவதில் வீணா தண்டமான ஏகம்பத்தை இயல்பாகப் பெற்றுள்ளது. சுழுமுனை நாடியில் ஆண் தன்மையும் பெண் தன்மையும் கலந்துள்ள நிலை பற்றிப் பெண்ணுருவைப் பக்குவம் செய்ய அவளோடு பொருந்திய கடாட்சமும்.

விளக்கம்:

இன்பமும் தேகமும் உமையவள் கூறு. கீழ்நிலையில் காம இன்பத்தில் காமேஸ்வரன் காமேஸ்வரியாக இருந்து உயிருக்கு உதவினர். சிவானந்தம் தேகங் கடந்தது ஆயினும் தேகத்திலுள்ள இன்பத்தின் மாறுதலில் சிவம் தனது சத்தியுடன் பொருந்தி மேலேறுகிறது. அதனால் ''ஏகம்பத்தின் இயல்பாயிருந்து'' என்றார். கீழ்நிலையில் எவ்வாறு உருவத்தில் இன்பம் உண்டோ அவ்விதமே சிரசின் மேலுள்ள ஆகாயக் கூறில் முன்னர்க் கிட்டுவது பரை யோகம், பரைபோகம், பரைய தீதம் என்ற நிலைகள். அதன் பிறகு சிவதரிசனம் உள்ளதைக் காண்க.

திருவேகம்பம் என்பது காஞ்சி மாநகரில் கம்பை யாற்றங்கரையில் உமையம்மை மணலால் சிவலிங்கம் செய்து இறைவனைப் பூசிக்க ஆறு பெருகி வரவும் அம்மையார் மனமுருகிச் சிவலிங்கத்தை தழுவிக் கொண்டார். இறைவன் அவ்விலிங்கத்திடம் தோன்றி அவ்வம்மையாரை அணைத்துத் தன் இடப்பாகத்தில் கொண்டருளினார் என்பது காஞ்சிப் புராணம் கூறும் விளக்கமாகும். இது பிருதிவி க்ஷேத்திரமாகும். இப்புராணத்திற்கும் தத்துவத்திற்கும் நேரே சம்பந்தமுண்டு. ஸ்திரீ வித்தையின் விளக்கமே இவ்வரலாற்றிலும் ஆகாயக் கூறில் சத்தியின் ஆற்றலான ஒளியும் சிவத்தின் ஆற்றலுள்ள நாதமும் இரண்டாக அறியாமல் ஒன்றாகவே அறியப்படுகிறது.

**ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி**
**பாகம் பெண்ணுரு வானாய் போற்றி:**

காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மன் சந்நிதியில் கொடுக்கும் குங்குமப் பிரசாதத்தை அந்தச் சந்நிதியிலேயே அணிந்து கொள்வதில்லை. அதைக் கொண்டு போய் மூன்று கிளையாக உள்ள ஒரு கல் வடிவில் போட்டுவிட்டு அங்குள்ள குங்குமத்தை எடுத்தணிந்து கொள்ளுவது இன்றும் சம்பிரதாயமாக நடந்து வருகிறது. இதன் சூக்குமக் கருத்தை அறிந்தவர்க்கு அதன் உட்கருத்து விளங்கும். அதை

அறிந்து கொள்ளுவதில் ஸ்திரீ வித்தையின் இரகசியம் உள்ளது.

ஸ்திரீயினிடம் உள்ள காமக் கவர்ச்சியால் விந்து நீக்கம் ஆகிறது. காமக் கவர்ச்சியற்றுச் சிரசில் மனம் பதிவுண்டு ஸ்திரீயுடன் பொருந்தில் ஸ்திரீ போகமே சிவ யோகமாக மாறிவிடும் என்ற உண்மையை உலகினர் அறிந்துய்யவே கல்லுருவை ஆகாய லக்ஷ்மி என்று விளக்கி ஒரு பழக்கத்தையும் ஏற்படுத்தியுள்ளனர். இதைப் பரியங்கியோகம் என்ற தலைப்பிலும் விந்து சயம் என்ற தலைப்பிலும் திருமந்திரத்தில் விளக்கப்பட்டுள்ளது. சுந்தரமூர்த்தி தமிழுலகிற்கு அளித்ததே இயல்பான யோக நெறியாகும். இதையே சம்பூர்ண யோகம் என்று அரவிந்தர் விளக்கியுள்ளார்.

ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
ஓதி யுணரில் உடலுயிர் ஈசனாம்
பேதை உலகிற் பிறவிகள் நாசமாம்
ஓத உலவாத கோலமொன் றாகுமே. 1099

சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்ப தறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றாரே. 1199

இதுவே பிருதிவி க்ஷேத்திரத்தின் பெரும் இரகசியமாகும். இதை அனுபவமுள்ள குருவால்தான் சீடனுக்கு உணர்த்த முடியும். வாயால் பேசிக் கொண்டுள்ள எந்தக் குருவாலும் உணர்த்த முடியாத விஷயமாகும்.

**திருவாஞ்சியத்தில் சீர்பெற இருந்து**
**மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்:**

முன்னர்க் கூறிய ஸ்ரீவித்தை கொண்டு ஒலி (நாதம்) பெறும்படி ஸ்ரீவாஞ்சியத்தில் அடைந்து மலையான சிரசில் விளங்கும் ஒளியையும் குழல் ஓசையையும் கொண்டு மகிழ்ந்து விளங்கியவிதமும்.

திருவாஞ்சியம் - ஸ்ரீவாஞ்சியம் - ஸ்திரீ யினிடம்.

சீர் - ஒலி - நாதம். மரு - மலை - (சிரசு). ஆர் - ஒளி.

குழலி - குழலோசையை விளைவிப்பவள், குண்டலினி சத்தி.

ஸ்ரீவாஞ்சியம் என்ற சிவஸ்தலம் காவிரிக் கரையில் உள்ளது. இதுவும் மணக்கோல முறையில் அமைந்த தலமாகும். மணக்கோலம் என்பது திருமணத்திற்கு முன் மணமகன் இடதுபுறமும், மணமகள் மணமகனின் வலதுபுறமும் அமர்ந்திருப்பர். இந்த நிலை மணங்கொண்ட பின் மாறிவிடும். அதுபோலக் குண்டலினி சத்தியைச் சிரசுக்குக் கொண்டு செலுத்தும் வரையில் தேகத்தில் இந்நிலை அமையும். தேகங்கடந்து ஆகாயக் கூறில் அறிவு பதிந்தபோது வலதுபுறச் சூரியன் இடதுபுறத்திலுள்ள சந்திரன் நிலையில் பொருந்தி ஈசான முகம் அமையும். அதில் நாதமும் உண்டு. ஒளியும் உண்டு. ஈசான முகம் சிறப்புற்று விளங்கவே இவ்வித்தையைச் சாக்தரும் சித்தரும் கையாண்டு சித்தி பெற்றுள்ளனர். மதுரைக் கோயில் இவ்வித்தையின் விளக்கமேயாகும்.

**சேவக னாகித் திண்சிலை ஏந்திப்**
**பாவகம் பலபல காட்டிய பரிசும்:**

சே - எருது, விந்து, சொரூபம்.

பசுக்களின் விருத்தி ரிஷபத்தால் நடைபெறுகிறது. பசுத் தன்மையுடன் கூடிய மக்கள் சமுகம் விந்து நீக்கத்திலேயே இன்பம் பெறுகின்றனர். அவ்விதம் வீணாக்கும் வீரியத்தைச் சேமித்து ஒளியாக மாற்ற விஷத்திற்குப் பிரதிவிஷம் வாகடத்திலுள்ளது போல ஸ்திரீயின் உதவியால் விந்து நீக்கமில்லாதிருக்க உபாயம் கண்டுள்ளனர். அவ்வித்தையால் வீரிய சத்து மேலே சென்று விந்து மண்டலம் என்ற ஒளி மண்டலத்தைப் படைக்கிறது. சீவன் கீழ்முகங் கொண்டபோது காமகாரியம் நடைபெறும். மேல் முகங்கொண்டபோது பிரணவமான வில்

உருப்பெறுகிறது. காமாக்கினியை ரிஷபமாக உருவகித்து உள்ளனர். இதுவே மேலே சென்று கர்ஜிக்கின்றபோது வாக்குகள் சூக்குமமாகத் தோன்றும்.

சிவ வழிபாட்டுக்கு நந்தியின் விருஷணத்தைத் தொட்டு வாலை உருவிக் கொம்பின் சந்து வழியாகப் பார்ப்பதன் உள்கருத்தைச் சிந்திக்கவும். இவரே சிவ தரிசனத்திற்கு வழிவிடுபவர் என்றவைகளைச் சிந்திக்கவும். அ, உ, ம, விந்து, நாதம் ஆகிய பிரணவத்தைத் தனது வலியவில்லாக அக்கினி மண்டலத்தில் விளங்கிய சிவம் பலப் பல தோற்றத்தை உண்டாக்கிய குணமும். பாவகம் - அக்கினி, மனத்தினன்பை வெளிப்படுத்தல். காம ஜெயம் பெறாது சிவ தரிசனம் கிட்டாது என்பதைக் குறிப்பிக்கவே நந்தியைச் சிவமுகமாக்கியுள்ளனர்.

**கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்:**

கடம்புகுஊர் கடம்பூராயிற்று. ஒரு ஜீவன் பிறிதொரு கடத்தில் புகுவதற்கு மூலமாயுள்ளது ஆண்குறியேயாகும். இத்தகைய ஆண்குறியையே தனது நிலையான இடமாகக் கொண்டும். 'கடம்பூர் மேவிய விடங்கா போற்றி' என்பதில் விடங்கர் - ஆண்மை, சுயம்புலிங்கம். விடங்கன் - காமுகன் என்ற பொருள் கொண்டு தெளிக. ஆண்குறி உளியினால் செதுக்கப்படாத சுயம்புலிங்கம் என்பதில் யாதும் ஐயுற வேண்டியதில்லை.

திருவாரூர்த் தியாகராஜாவுக்கு மூலத்தானம் விடங்கர் என்ற பச்சைக் கல்லால் ஆன சிவலிங்கமே பூசைக்குரிய மூர்த்தி. அபிஷேகம் தினசரி இரண்டு காலமும் விடங்கருக்குத்தான் நடைபெறுகிறது. இது தேவலோகத்திலிருந்து கொண்டு வந்து ஸ்தாபித்ததாகக் கூறுவர். இந்த லிங்கத்தின் உருவ நிலையே தியாகராஜராகும். தியாகராஜருடன் உள்ள சத்திக்குக் கொண்டி என்று பெயர். அடங்காக் காமுடையவளைக் குறிக்கும் சொல். வடமொழியில் காமேஸ்வரர் காமேஸ்வரி என்பர். இவர்களிடையே தான் ஸ்கந்தர் உள்ளார்.

சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்ப தறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றாரே. 1199

**ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்:**

ஈங்கு ஓய் மலையாக உள்ளது உபசாந்த நிலையான ஊர்த்துவ சகஸ்ரதளத்தில் தனது உயர்ந்த நிலையைக் காட்டியும்.

ஈங்கு - இவ்வுடலில்.

எழில் - உயர்ச்சி, எழுதல், எழுச்சி.

ஈங்கோய் மலை என்றால், சகல தத்துவங்களினின்றும் விடுபட்ட ஆன்மா என்று பொருள். துவாதசாந்த வெளியில் தரிசிக்கக் கூடியது.

அங்கு அது பச்சை ஒளியில் காட்சியளிக்கிறது. யற்றி ஈங்கோய் மலை என்ற தலத்தில் மரகதலிங்கம் உள்ளது.

சுவாமி பெயர் - மரகதாசலேசுவரர்; அம்மன் பெயர் - மரகதவல்லி. முன்னர் உத்தரகோசமங்கைப் பகுதியில் மரகத ஒளிபற்றிய விஷயம் விளக்கப் பட்டுள்ளது.

**ஐயா றதனில் சைவ னாகியும்:**

ஐயாறு என்றால் ஐந்து ஞானேந்திரியங்களும் பொருந்தும் நெறியில் சிவத்தைச் சார்ந்து அடங்கப் பெறுவதால் சைவனாகியும்.

சைவம் என்றால் சிவத்துடன் சம்பந்தம் என்று பொருள்.

சிரசின் மேலுள்ள ஒளியில் மனம் பதிவுண்டபோது இந்திரியங்கள் தங்களின் ஆற்றலை இழந்து விடுகின்றன. இதுவே சைவம் உணர்த்தும் நெறி. சிதாகாயத்தில் விளங்கும் நீற்றொளியில் நிலை பெற்றால் இந்திரியங்கள் தொழிற்படாது போகும். அதனால் ஆத்மா பயனடையும்

என்பதே திருநீற்றின் உட்பொருள். அங்கேதான் சிவத்தை நினைக்க வேண்டும் என்பதற்குச் சிவத்தியானத்திற்கு முன்னர் விபூதி தாரணம் அமைத்துள்ளனர். திருமூலர் ஐந்திந்திரியம் அடக்கும் முறைமை என்று ஒரு தலைப்புக் கொடுத்து விளக்கியுள்ளார். அது கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

### ஐந்திந்திரியம் அடக்கும் முறைமை

குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்
வட்டம் அமைந்ததோர் வாவியுள் வாழ்வன
பட்டன மீன்பல பரவன் வலைகொணர்ந்
திட்டனன் யாமினி யேதமி லோமே. 2031

கிடக்கும் உடலிற் கிளரிந் திரியம்
அடக்க லுறுமவன் தானே யமரன்
விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை
நடக்கின் நடக்கும் நடக்கு மளவே. 2032

அஞ்சு மடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சு மடக்கில் அசேதன மாமென்றிட்
டஞ்சு மடக்கா அறிவறிந் தேனே. 2033

முழக்கி யெழுவன மும்மத வேழம்
அடக்க அறிவென்னும் தோட்டியை வைத்தேன்
பிழைத்தன வோடிப் பெருங்கேடு மண்டிக்
கொழுத்தன வேழங் குலைக்கின்ற வாறே. 2034

ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே. 2035

பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருங்கும்
அருத்தமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. 2036

இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த
கிளைக்கொன்றும் ஈசனைக் கேடில் புகழோன்
தளைக்கொன்ற நாகமஞ் சாடல் ஒடுக்கத்
துளைக்கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே. 2037

பாய்ந்தன பூதங்கள் ஐந்தும் படரொளி
சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு
வாய்ந்துகொள் ஆனந்த மென்னும் அருள் செய்யில்
வேய்ந்துகொள் மேலை விதியது தானே. 2038

நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில்
படர்க்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக்
குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில்
வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே. 2039

சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்தொத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழவதில் தாங்கலு மாமே. 2040

போற்றிசைத் துப்புனி தன்திரு மேனியைப்
போற்றிசெய் மீட்டே புலனைந்தும் புத்தியால்
நாற்றிசைக் கும்பின்னை யாருக்கு நாதனை
ஊற்றுகை யுள்ளத் தொருங்கலு மாமே. 2041

தரிக்கின்ற நெஞ்சசங் சகளத்தி னுள்ளே
அரிக்கின்ற ஐவரை யாரும் உணரார்
சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்
வரிக்கொண்ட மைசூழ் வரையது வாமே. 2042

கைவிட லாவதொன் றில்லை கருத்தினுள்
எய்தி யவனை யிசையினால் ஏத்துமின்
ஐவ ருடைய அவாவினில் தோன்றிய
பொய்வ் ருடைய புலன்களு மைந்தே. 2043

*சீரார் திருவையாறா போற்றி; ஒலி, ஒளியுடன் கூடிய ஐந்து இந்திரியங்களும் பொருந்துமிடை வழியில் உள்ளவனே உன்னைப் போற்றுகின்றேன்.*

**துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்:**

*துருத்தி என்பது காற்றைப் பீச்சும் ஒரு தோற்கருவி. மனம் சிரசின் மேலுள்ள சிதாகாயத்தில் பதிவதில் பிராணனின் நிலையும் மாற்றமடைந்து சிரசின் உட்புறம் புகுந்து துருத்தியினால் காற்றடிப்பதுபோல் ஒருணர்வு பொருந்திச் சிரசின் உட்புறம் அமைந்துள்ள சதையடைப்பை மோதி மோதிச் சிரசில் ஒரு சுக நிலைமை உண்டாக்கும். காற்று, சிரசின் உட்புறம் புகுவதில் ஆசையுடனிருந்தும்.*

*அருத்தி - ஆசை.*

வாய்நாசி யேபுரு மத்தகம் உச்சியில்
ஆய்நாசி யுச்சி முதலவை யாய்நிற்குந்
தாய்நாடி யாதிவாக் காதி சகலாதி
சேய்நா டொளியெனச் சிவகதி யைந்துமே.

— **திருமந்திரம் 2579**

**திருப்பனை யூரில் விருப்ப னாகியும்:**

*பனைமரக் கள்ளு பண்டை நாளில் மிகுதியும் வழக்கத்திலிருந்துள்ளது. அதன் போதையைப்போல் சிரசின் மேல் உணர்வு பெருகுவதில், சுழுமுனையிலும் சொக்கிப் போவது பொருந்துவதால் 'திருப் பனையூரில் விருப்பனாகியும்' என்றார்.*

ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியிற்
சாறு படுவன நான்கு பனையுள
ஏறற் கரியதோர் ஏணியிட் டப்பனை
ஏறலுற் றேன்கடல் ஏழுங்கண் டேனே. **2868**

*நான்கு இதழ்களையுடைய மூலாதாரச் சக்கரத்தை நான்கு பனை மரமாக உவமிக்கப்பட்டுள்ளது. இதுவே ஆறாதாரத்தையும் தாண்டிச் சிரசை அடைகிறது. அங்கே அதன் சாறு உண்டாகிறது. ஏறுதற்கரிய பிரணவ ஏணிகொண்டு அங்கு ஏறி ஏழு கடல்களையும் கண்டேன்.*

**கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்:**

சீவனது சிதாகாய மண்டலம் இருளால் சூழப் பட்டிருந்தபோது, சீவன் உலகமயமாய் உலகப்பற்று விடாதவனாக இருந்தான். ஓரளவு பக்குவம் பெற்றவுடன் சிதாகாய மண்டலத்தில் ஒளி காணப்படும். இதையே அருள் சத்தி என்று சித்தாந்த நூல்கள் கூறும். அவ்வொளியைப் பற்றிய சிந்தனை சிறப்படைய அடைய, இருளகன்று ஒளிமயமாகவே காணப்படும். இதை மலக்குற்றங்கள் ஒளியினால் அகற்றப்பட்டபோது சிவம் பிரகாசமாய்க் காட்சி கொடுத்தும் என்றார்.

**பரையில் வியாத்தம்**

விண்ணிற் கதிரோன் விளங்கி விரிந்ததுபோல்
கண்ணிற் கதிரோன் கலந்ததுபோல் - நண்ணிப்
பரைநிறைவில் நீயும் பதிவையே யாகில்
உரை யிறந்திட் டொன்றாவை யுற்று.

— துகளறுபோதம்

**பரையில் யோகமும் போகமும்**

விண்ணில் விகற்பமற மேவிக்கால் நின்றதுபோல்
நண்ணும் பரையதனில் நண்ணியே - எண்ணிறந்து
நீர்உறங்குந் தன்மைபோல் நிற்கைபரை யோகம்அதிற்
சீருறலே போகமெனச் செப்பு.

— துகளறுபோதம்

நாதத்தில் இலயமடைவதையும் ஒளியில் இலயமடைவதையும் இரண்டையுமே பரையோகம், பரைபோகம் என்று சித்தாந்த சாத்திரங்கள் கூறுகின்றன. இரண்டு நெறியினும் இவ்வகையாக அடையப்படுகிறது. ஒன்று துறவு நெறி. இது ஒளியை அடிப்படையாகக் கொண்டு செல்வது. மற்றொன்று இல்வாழ்வான் நெறி. இது நாதத்தை அடிப்படையாகக் கொண்டது. இவ்விரு நிலையாகக் கொண்டாலும் சமாதிப் பிரக்ஞையில் இரண்டும் ஒன்றாகவே முடியும். சாதனை நிலையில் வேறு போலக் காண்பதேயாகும். நாதம் இல்லாத விந்து இல்லை. சித்தாந்த சாராவளியில் ஆசாரியன் இரண்டில் ஒன்று அப்பியசிக்கக் கூறியுள்ளது.

**கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்:**

மலம் கழுவப்பட்ட பிரணவத்தின் உச்சியில் நீங்காது இருந்தும்.

கழு - கழுவென்னேவல்.

குன்று - பிரணவம்

பிரணவ உச்சி நாதாந்தமாகும். நாதாந்த நிலையில் சிவத்தினின்றும் பிரிதலற்று விளங்குபவர் என்றபடி.

ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி
ஞானத்தின் நன்னெறி நானென் றறிவோர்தல்
ஞானத்தின் நல்யோகம் நன்னிலை யேநிற்றல்
ஞானத்தின் நன்மோனம் நாதாந்த மோனமே.

— திருமந்திரம் 2821

உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவ தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாமே. 2822

விந்து நாதமாகிய திருவடி கிட்டியவர் தவறு தலின்றிச் சிவத்தைப் பெறுவர். இதைத் திருக்கழுக்குன்றப் பதிகத்தாலறிக.

திருக்கழுக்குன்றத்திற்கு வடமொழியில் வேதகிரி அல்லது வேதாசலம் என்பர். சுவாமி பெயர் வேதகிரீஸ்வரர். தமிழில் மலைக்கொழுந்து. பிரணவமே வேதங்களின் சிரசு. அங்கு அம்மலையும் நான்கு மலைகளால் அமைந்துள்ளது என்பதைக் கொண்டு தெளிக. பிரணவத்தின் சொரூபம் விந்து நாதங்களாகும். அவைகளை அறிந்ததாகத்தான் திருக்கழுக்குன்றப் பதிகம் கூறுகிறது.

மலங்கினேன் கண்ணின் நீரை மாற்றி
மலங்கெ டுத்த பெருந்துறை
விலங்கி னேன்வினைக் கேடனேன் இனி
மேல் விளைவ தறிந்திலேன்

இலங்கு கின்றநின் சேவ டிகளி
ரண்டும் வைப்பிட மின்றியே
கலங்கி னேன்கலங் காம லேவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.

— திருக்கழுக்குன்றப் பதிகம்

**புறம்பய மதனில் அறம்பல அருளியும்:**

*பிறவிக்கு வரும் ஆன்மாக்கள் நல்வினை தீவினை காரணமாக, நல்ல சூழ்நிலை கெட்ட சூழ்நிலையில் பிறக்கின்றன. நல்ல சூழ்நிலைக்குக் காரணம் அறமே யாகும். தேகமுள்ளபோது மேல்வரும் பிறப்புக்குச் செய்ய வேண்டிய பல அறங்களைச் செய்தும்.*

*புறம்பயம்: பிறவிக்குப் பயந்து.*

*அறம் இல்வாழ்வானுக்கும் துறவிக்கும் வேறுபட்டிருக்கும். பொதுவில் பிறர்க்கு உபகரித்தல் என்ற பொருளேயாகும்.*

**குற்றா லத்துக் குறியா யிருந்தும்;**

*குறுமையை உடைய நீலவொளியைக் குற்றாலம் என்று கூறப்பட்டுள்ளது. நெற்றி நடுவில் காணப் படும் அர்த்த சந்திரனொளியாகும். இந்த நீல வொளியைக் கவனிப்பதில் அது படர்ந்து அண்டாகாயம் முழுமையும் நிலவொளியாகக் காணப்பெறும். இதைக் கவனிப்பதில் அறிதுயில் பொருந்தும். உடலுக்கு நன்மையைச் செய்யும் இதயத்துடிப்புக் குறைவதால் பிராணவாயுவின் தேவையும் கரியமிலவாயு வெளியேற்றப்படுவதும் குறைகிறது. அதனால் கிழட்டுத்தனம் வருவது தடுக்கப்படுகிறது என்பது பல்லாயிரம் வருஷங்களுக்குமுன் கண்டுபிடிக்கப்பட்ட உண்மை யோகமாகும்.*

தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்
பூங்கமழ் கோதைப் புரிகுழலா ளொடும்
ஆங்கது சேரும் அறிவுடை யார்கட்குத்
தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே.

— திருமந்திரம் 1525

நீல நிறனுடை நேரிழை யாளொடுஞ்
சாலவும் புல்லிச் சதமென்றிருப் பார்க்கு
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவர் பராநந்தி ஆணையே. 734

மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே. 77

*விஷம் பாம்பினிடம் நீல நிறத்துடன் விளங்கும். விஷந் தீண்டப்பட்டவன் உடலும் நீலமாய்விடும். நெற்றியில் காணப்படும் ஒளியும் நல்ல நீல ஒளியாய்த் தோன்றும்.*

**அந்தமில் பெருமை யழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவு கொண்
டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்
தானே யாகிய தயாபரன் எம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுட்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்:**

*சந்திரனின் சோடச கலையால் விளங்கும் பிரணவ யோகத்தை இங்கு விளக்குவதாயிற்று.*

*பாலை - குண்டலினி சத்தி. சுந்தர வேடம் - வாமதேவர். துதை - நெருக்கம்.*

*முடிவில்லாத பெருமையுடைய அதோமுகச் சக்கிரம் பொருந்திய அக்கினி மண்டல நிலையை மறைத்துக் கொண்டு வாமதேவராக ஒப்பற்ற சதா சிவரின் உருவங் கொண்டு இந்திர ஜாலம்போல் எழுந்தருளிப் பூமிதத்துவம் முதல் வாயுதத்துவம் முடிய உள்ள எல்லாக் குணங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு தன்குணமே (ஆகாய குணமே) மேலிடும்படி விளங்கிய அருளினால் மேம்பட்ட தலைவன் பிரணவ யோகத்தை விளக்கும்*

முறையில் ஆகாயக் கூறிலிருந்து பாலையென்ற குண்டலினியுடன் பொருந்தி வாமதேவராக எனக்கு நெருக்கமாக (தோழனாக) இருந்தருளியும்.

விளக்கம்:

வாம தேவருக்குச் சதாசிவரது முகத்தில் வட திசையாகும். வடதிசை சந்திரனின் திசையாகும். உடலில் அக்குள், துடை, முழந்தாள், கணைக் கால், பிரஷ்டம், இடுப்பு, ஆசனம், லிங்கம் என்ற பதின்மூன்று இடங்களில் ஆதிக்கம் கொண்டிருந்தாலும் லிங்கத்தில்தான் இவர் சிறப்பான இடம் பெறுவதால் வாம தேவருக்கு குஹ்யாய என்ற நியாசமந்திரம் உள்ளது. இவரே அக்கினி மண்டலத்தில் விளங்குபவர். அக்கினி மண்டலத்தில் காரியப்பட்டபோது விந்து நீக்கம் ஆகிய தேகச்சிதைவுகளைச் செய்திருந்தவர். இவரே வடதிசையில் சந்திர மண்டலத்தில் விளங்கியபோது தனது அக்கினி சொரூபத்தை விட்டவராய்க் குளிர்ந்த செயலுடையவராய்க் காம செயம் செய்பவராய் விளங்கினர்.

இந்திர ஜாலம் என்றால் ஒரு பொருளை மற்றோர் பொருளாகக் காட்டுதலோ, ஒன்றுமில்லாத இடத்தில் ஒன்றை உண்டாக்கிக் காட்டுதலோ செய்தல். அது போலவே ஸ்திரீயுடன் பொருந்திக் காமசெயம் செய்வதில் காமம் பொருந்தும் உடற்கூறுகளை யெல்லாம் மாற்றிக் கொண்டு இன்ப வடிவினனாக எழுந்தருளினன்.

சந்திரன் திக்கிலிருந்து இவ்வுண்மையை அறிவதால் வாமதேவரே சந்திரதீபத்து சாஸ்திர விளக்கம் தருபவர். வாசகர்களுக்குக் கீழிருந்த சத்தி மேலேறிச் சென்று மேலே விளக்கம் அமைந்து பிறகு இம் மாற்றம் அமைந்ததா என்று சந்தேகம் எழாமலிருக்க ஜீவன் ஆகாய மூர்த்தியான ஈசானரை வணங்கி வழிபட்டபின் அவரே கீழிறங்கித் தனது சத்தியாகிய குண்டலினியில் பொருந்தி அவருடன் மேலே வட திசையில் எழுந்தருளிச் சாதகனுக்குத் தோழமை நெறியை உணர்த்தியருளினன் என்று விளக்கப்பட்டது.

சுத்த வித்தை விளங்க ஞானம் மிகுத்துக் கிரியை குறைய வேண்டும். கிரியை மிகுந்த பூசகர்களுக்கு இந்நெறியில்லை என்பதை அறியவும்.

பிரணவயோகமே சோடசகலா சந்திர ஞானம் எனப்படும். இவர்கள் மரணத்தை வென்றவர். சந்திரயோகம் என்று திருமந்திரம் 33 மந்திரங்களால் விளக்கியுள்ளதைக் காண்க.

ஊழி பிரியா திருக்கின்ற யோகிகள்
நாழிகை யாக நமனை அளப்பர்கள்
ஊழி முதலாய் உயர்வார் உலகினில்
தாழவல் லார்இச் சசிவன்ன ராமே.

— திருமந்திரம் 874

முன்னர் கீர்த்தித் திருவகலில், தொடக்கத்தில்,

எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கித்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்

என்ற பகுதியை நினைவில் கொள்ளவும். சீவன் ஈசான மூர்த்தியை நாடினபோது அவரே காமத்திலிருந்தே காம செயம் செய்யும் ஆற்றலை அளிக்கிறார்.

**மந்திர மாலை மகேந்திர வெற்பன்**
**அந்தமில் பெருமை அருளுடை அண்ணல்**
**எந்தமை யாண்ட பரிசது பகரின்**
**ஆற்ற லதுவுடை யழகமர் திருவுரு**
**நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்:**

எல்லா வேதங்களும் பிரணவத்தை வேதசிரசு என்றும் வேதபீசம் என்றும் கூறுகின்றன. அத்தகைய பிரணவமாகிய மலையைத் தனது வாசமாகக் கொண்ட ஒளி வடிவினன் முடியாகிய மலையின்மீது விளங்கும் ஈசானராவர். ஈசானரை மந்திரராஜன் என்று கூறுவர். அவரே பிரணவத்தால் அறியத்தக்கவர். அவர் முடிவற்ற பெருமையையுடைய கருணை மிகுந்த பெரியோன் ஆவர். எம்மை ஆண்டருளிய தன்மையைச் சொல்லின்

வல்லமையையுடைய வாமதேவர் ஆகாய மண்டலத்தில் வெண்ணிற ஒளியை மேல் முகமாகக் காட்டியும்.

ஓங்காரம் ஒளி மண்டலமாக விளங்குவதால் அதைச் சத்தியாகக் கொண்டு அதில் விளங்கும் அறிவைச் சிவமாகக் கூறுவர். ஓங்காரம் பிரமன், விஷ்ணு, உருத்திரன், மாகேசன், சதாசிவர் என்ற ஐவர்களையும் கடந்து விளங்கும் நிலையாகும்.

ஓங்காரி என்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
ரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே.

— திருமந்திரம் 1073

நீற்றுக்கோடி - அண்டகோசத்தின் எல்லை வரையில் நீற்றொளி தெரிவது, நிமிர்ந்து காட்டியும், வாமதேவ முகத்தில் விளங்கியபோது ஒளி தெரிந்தாலும் மேல் நோக்கிப் பாயாததாக விளங்கும். ஈசான முகமானபோது மேல் நோக்கியதாய் ஒளி விளங்கும்.

நிலத்தின் நிலையிலிருந்து மேல் முகங்கொண் டெழுந்ததை ''நிலந்தன் மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி'' என்றார்.

புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க.

மூலாதாரத்திலிருந்து சுழுமுனா நாடி வழியாக மேலேறிச் சென்ற உணர்வு சிரசின்மேல் முகங் கொண்டு ஒளி நிமிர்ந்து மேலே சென்று காட்டிய விதமும். இதைத் தசாங்கத்தில் இறைவனின் பெயரை ஆரூரன் என்று அறிவுறுத்தினார். இந்த ஆரூரன், பிரமனாதி மூவர் போல் ஒருவர். மூவர்நிலை தேகம் பற்றியது. ஆரூரன் நிலை தேகங்கடந்தது என்பதை அறியவும். தேகத்திலிருந்து கொண்டே தேகங்கடந்து வெளிப்பட்டு விளங்குபவர்.

ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய் - ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று.

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்
பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமுதே பள்ளி எழுந்தரு ளாயே.

*குறிப்பு: பந்தணை விரலி - குண்டலினி. நீ - குண்டலினி தேவன் என்ற ஆரூரன். அந்தணன் - அந்தத்தை அவாவுவார். எல்லாத் தத்துவங்களையும் முடிவு செய்வதில் விருப்பங் கொண்டவர்.*

*திருவாரூர்த் தியாகராஜ உருவத்தில் கைகால் முகம் விளங்குமே தவிர வயிறு மார்பு முதலானவை விளங்காத வாறு மூடப்பட்டுள்ளதன் கருத்தைச் சிந்திக்கவும்.*

**ஊனந் தன்னை ஒருங்குட னறுக்கும்**
**ஆனந் தம்மே ஆறா அருளியும்:**

*இவ்வரி காமேஸ்வர வித்தையை விளக்குவ தாகும். இது சம்பிரதாயக் கிரமமாய் அதிக ரகஸ்யமாய்க் காப்பாற்றப்பட்டு வரும் விஷயமாகும்.*

*எல்லாமாய் உள்ள இறைவனுக்கு மனைவியும் மைந்தரும் அமைத்துக் காட்டியுள்ளது சைவ சமயம். அதில் உண்மையை அறிந்தவர்க்கு அது பயனுடையதேயாகும். மனிதன் தேவனாய் விடுவது என்பது ஒரு திடீர் மாற்றமல்ல. அது கிரமமாக மாறவேண்டும் என்றே படிமுறைகள் வகுத்துள்ளனர். புராணங்களில் கதை வடிவில் மறைத்துக் கூறியுள்ளனர். தேவர் துயர் நீக்க சிவம் திருமணக் கோலங் கொண்டு குமரனை அளித்துச் சூரனைச் சம்ஹரிக்க அனுப்பினார். ஏன் மனைவி உள்ளபோது*

குமரன் பார்வதி வயிற்றில் பிறக்கவில்லை என்ற வினாவுக்கு விடை காண வேண்டும். சூரனாகிய இருள் சத்தியைக் கெடுக்க ஆறு ஆதாரங்களும் ஒன்றுபட்டு மேலே செல்ல வேண்டும். அந்தச் சத்தியில் சிவத்தின் அறிவும் சத்தியின் ஆற்றலும் கலந்தே விளங்கும். இதுவே சந்திர ஞானமாகும். தம்பதியோடுகூடிய புரோகிதன்தான் யாகம் செய்ய உரிமையுடையவன். அவனே பரார்த்த பூசைக்கும் அருகதையுடையவன். ஏன் அவ்விதம் இருக்க வேண்டும் என்றால் அவ்விதம் இல்லாவிட்டால் பக்தனுக்கு அனுக்கிரகம் செய்யும் ஆற்றல் அவனிடம் உண்டாகாது. அதற்காகவே பரசிவம் திருமணக் கோலம் கொண்டார் என்று புராணங் கூறும்போது சாதகன் அவ்விதம் இல்லாவிடின் எவ்விதம் ஆறு ஆதாரங்களையும் ஒன்று சேர்த்து ஈசனது மூர்த்தியைத் தரிசிப்பது என்ற வினாவுக்கு மணிவாசகரே கூறும் விடையைக் காணவும்.

மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்திருவை
உலகறியத்தீ வேட்டான் என்னுமது என்னேடி
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்காண்

சாழலோ.

— திருச்சாழல்

கலை நவின்ற பொருள் - சந்திர மண்டல அறிவைப் பற்றிக் கூறினவை. கலங்கிடும் - விளக்கமின்றிப் போகும்.

கீழே விழுந்தவனைத் தரையில் கையை ஊன்றி மெல்ல எழுந்திரு என்று சொல்லுவதுபோலவும், உத்தரத்தைப் பிடித்து எழுந்து நில் என்பதுபோலவும் இல்லற நெறியும் துறவற நெறியும் பொருந்தும். மனிதனின் இயற்கை அருந்தலும் பொருந்தலும் ஆகும். இதில் ஆகமம் காட்டிய சூது இரண்டிலும் இறைவனைத் துணையாக்கிக் கொள் என்பதேயாகும். காமேஸ்வரன் காமேஸ்வரியையோ, அர்த்தநாரியையோ மனத்தில் நினைந்து காமத்தில் ஈடுபட்டால், காமநிலையே ஸ்கந்த நிலையாகி வாமதேவர் விளங்கி ஈசானரும் வெளிப்படுவார். அதுபோலவே உண்ணும் உணவின்போது

வேறு பல யோசனையின்றித் தேவார்ப்பணம் செய்து வந்தால், அவ்வுணவு தேகத்தில் ஆரோக்கியத்தைப் பெருக்கி ஒளி பெருக்கச் செய்யும் என்பதேயாகும்.

உண்ணும் போதுயி ரெழுத்தை வுயரவாங்கி
உறங்குகின்ற போதெல்லா மதுவே யாகும்
பெண்ணின் பாலிந்திரியம் விடும்போ தெல்லாம்
பேணிவலம் மேல்நோக்கி அவத்தில் நில்லு
தின்னுங் காயிலை மருந்தும் அதுவேயாகும்
தினந்தோறும் அப்படியே செலுத்த வல்லார்
மண்ணூழி காலமட்டும் வாழ்வார் பாரு
மறலிகையில் அகப்பட மாட்டார் தாமே.

— அகத்தியர் தனிஞானம்

தோழமை என்பதே இங்கு அறியத்தக்கது. தான் செய்யும் எல்லாக் காரியத்திலும் தெய்வத் துணையை முன்னிட்டுச் செய்வதில் தன்முனைப்புப் பின்னிடும். இந்தப் பொருளில் திருவாசகமும் திருமந்திரமும் எல்லார்க்கும் உரிய முறையை வகுத்துச் செல்லுகிறது.

காமத்தில் உழலுபவன் இருளில் உள்ளான். இருளை விலக்க ஸ்திரீயுடன் பொருந்தி வாழ்வதில் காம காரியமே யோக காரியமாய் மாறி இருள் கடிந்தருளிய இன்ப ஊர்தியில் காமேஸ்வரன் வெளிப்படுவார். அப்போது தேகத்தை முழுமையும் மறந்து விளங்கும் ஆனந்தத்தையே தன்னையடையும் நெறியாக உணர்த்தியும்.

சாமானியருக்குக் காமம் விந்துநீக்கத்தைச் செய்யும். இந்த நெறியினர்க்குச் சிரசில் ஒளிபெருகும். விந்து நீங்காது. காம இன்பத்தில் யாவற்றையும் மறந்து சுகங் காண்பதுபோல் தேகத்தைக் கடந்து சிரசில் சுகத்தைக் காண்பர். இந்த நிலை மாறி ஈசானரானபோது தேகப் பிரக்ஞையற்றேயிருப்பர். அதனால் பிறவிப் பிணியாகிய தேகதர்மத்தை உயிருள்ளபோதே முழுமையுமாக ஆனந்தமயமாய் நிற்பதையே தன்னை அடையும் நெறியாக அமைத்தது.

சுந்தரமூர்த்தி நாயனார்க்கும் திருவாரூருக்கும் தொடர்பு கொண்டு விளக்கும் புராணத்தைச் சிந்திக்கவும். சுந்தரமூர்த்தியை ஆரூரன் என்று கூறும் கருத்தைச் சிந்திக்கவும். திருமணத்துக்கு உதவியவர் ஆரூரரே பற்றி, அவர் பெயரையும் ஆரூரனாக்கி விட்டனர். திருத்தொண்டத் தொகையில் வரும் "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்றதில் திருவாரூரில் பிறந்தவர்கள் என்று மயங்கிப் பொருள் கொண்டுள்ளனர். தேகத்துக்குடைய சோதியை அறிந்தபோது அவன் மறுபிறப்பு பெற்றவனாகிறான். தீக்ஷா நாமமே வழங்கும் பெயராவது போல சுந்தரர்க்கு ஆரூரன் என்ற பெயர் வந்தது. சோதியைக் கண்டவர் ஆரூர்ப் பிறந்தாராகிறார். ஸ்திரீ வித்தையினால் அருள் வழிப்பட்டவர் சுந்தரமூர்த்தியாவார். அவர் பெற்ற பதவியே ஸ்திரீ வித்தையின் முடிவாகும்.

> செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீ நஞ்சிந்தைசேர்
> ஐயன் பெருந்துறையான் ஆறுரையாய் - தையலாய்
> வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
> ஆனந்தங் காணுடையான் ஆறு.

இங்குள்ள நுட்பம் அறிக. ஆகாயக் கூறில் விளங்கும் ஈசானரே இருளைப் போக்க மூலாதாரத்திற்கு வந்திறங்கி மேலே ஏறுவதில் உள்ள ஆனந்தமே அழைத்துப் போகும் நெறியாகும்.

> **மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்**
> **நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்:**

மூலாதாரத்தில் விளங்கும்போது வியக்தமான ஆண் பெண்ணுருவிலும், சிரசில் விளங்கும்போது பிரிப்பற்ற உமையொரு பாகனாகியும் விளங்குவர். இதன் நுண்பொருள் எல்லா எண்ணங்களும் சூக்குமத்தில் ஓர் உருவமும் ஒரு கருத்தையும் கொண்டுள்ளது என்பதேயாகும். இது சாமானியர்க்கு விளங்காதபடியால் ஆண் பெண்ணுருவை இணைத்துக் காட்டியுள்ளனர். ஆகாயக் கூறில் உள்ள ஒவ்வோர் அசைவும் ஒரு கருத்தை

விளக்கும் என்பதை நாம் இப்போது ரேடியோவின் அலைகளால் அறிகிறோம். நம்மைச் சூழப் பல நிலையங்களின் ஒலி அசைவுகளையும் நாம் அறியக்கூடும். ஆகாயக் கூறில் உள்ள ஒலி அசைவே ஒரு கருத்தை விளக்கும் சொல்லாக அமைகிறது.

இவ்விதமாக ஆகாயக் கூறில் சிவசத்தி பொருந்தியுள்ளது. சிவசத்தியைப் பற்றிய கருத்துகளால் வழிபடும்போது சிரசில் நாதம் படரும். அதை அவனை வெளிப்படுத்தும் பறையென்றனர். இதைத் தசநாதம் என்பர்.

சூக்குமத்தில் விளங்கும் நாதத்திற்கும் தூலத்தில் ஸ்திரீயுடன் பொருந்துவதற்கும், ஒரு நுண்தொடர்பு உண்டு என்பதை வேதகால ரிஷிகள் அறிந்து வாம தேவர் என்று சதாசிவரது வடக்கு முகத்திற்குப் பெயர் வைத்துள்ளனர். இந்த உண்மையைக் காமாக்ஷி கம்பா நதிக்கரையிலும் ஏகம்பநாதரை வழிபட்டு ஏக உருப்பெற்றார் என்றதால் அறியலாம். ஆகாயக் கூறில் அணுக்களின் அசைவும் மகா சூக்ஷ்மமான கதியாக உள்ளபடியால் அணுவின் அசைவும் அணுக்களின் சொல் விளக்கமும் வெற்றுக் கண்ணுக்குப் புலப்படாததாகும். இந்த நாதவொலி யோகியின் அறிவுக்குப் புலப்படுவதே தவிரச் சாமானியர்க்கு விளங்குவதில்லை. உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட மிகவும் பெருங்கருணையுடையவன், பக்தன் விரும்பினபோது தனது இருக்கையை நாதமாகிய பெரிய பறையை ஒலித்துக் காட்டியும் என்பது பொருள்.

இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய் அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை.

தேகமாக விளங்கின சத்தி சீவன் இருளின் நிலை பெற்றபோது மறைப்பினைச் செய்வதாய், மயக்கத்தை விளைவித்தது. அந்த சத்தியைச் சூக்குமமாய்க் காணும் போது அதுவே நாதமாய் ஒளியாய் அறிவாய் அமையும்.

இந்த நிலைமையில் காண்பவனும் தேகியாவன். தேகத்தால் சூக்கும சத்தியை உணர முடியாது.

சாற்றுபரை திரோதைமுதல் அநேகம் அருவுருவாஞ்
சத்திகளாய்ச் சிவனுக்கு வடிவாகிக் கரணம்
தேற்றுகுணம் இந்திரியந் தொழில்க ளாகிச்
சேர்ந்த சாங்கோ பாங்கமாகி யிருப்பிடமாய்ப்
போற்றரிய சரீரிக்கிவ் வுலகமாய் அளிக்கும்
பொருளாகிப் பீடலிங்க மாதல் பரைவியாத்தம்
மாற்றரிய பரையில் உறையாது நெகிழாமல்
வசமாகத் தனைமறைய நிற்றல் பரையோகம்.

— *சித்தாந்த சாரம்*

கண்டயோ கப்பயனும் விளைந்த மணியோசை
கடலோசை யாழோசை செயகண்டி யோசை
வண்டோசை மதயானை பிளிறோசை நாத
வகையோசை கொம்போசை வந்து தோன்றில்
உண்டான பரைபோகம் பரையில் அதீதந்தான்
ஓசையெல்லாம் அழியஅதில் உருகியிருப் பதுவாம்
மண்டு சிவதரிசனம் இக்கேடுபடா விமல
வளரொளிக்குள் ளொளியாகச் சிவத்தைக் காண்பதுவே.

— *சித்தாந்த சாரம்*

**அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்**
**கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்:**

அன்பர் மனமண்டலம் இருளடையாமல் தனது அருள் சத்தியால் ஆண்டு கொண்டு தன்னடியானாக ஆக்கிக் கொண்டவிதம் மூலாதாரத்திலிருந்து சுழுமுனா நாடி வழியாக உயரச் சென்று சிரசில் சூரிய ஒளி, சோம ஒளி, ஆத்ம ஒளி என்ற முத்தலை வேலினைக் கையாண்ட விதமும்.

கழுக்கடை - முத்தலைவேல் என்ற சூலாயுதம். மூலாதாரம் கவிழ்ந்துள்ள சக்க்ரமாகும். அதன் வழியே உட்புகுந்து மூலவாயு சிரசினையடைந்து வலது கண்புறம் வெளிப்படுவது சூரிய ஒளி. இடது கண்புறம் வெளிப்

படுவது சோம ஒளி. பிடரிக் கண்ணில் வெளிப்படுவது ஆத்ம தேஜஸாகும். இந்த மூன்று ஒளியினாலாவதே ஜீவ வொளி. உச்சியில் சிவசூரியன் உதிக்கக் கண்ட பிறகு இம் மூன்றொளிகளும் காணாது போகும். இதையெல்லாம் கழுக்கடை தன்னைக் கைக்கொண்டருளிய விதத்தால் அழுக்கடையாமலாண்டு கொண்டருள்பவன் என்று கூறப்பட்டது.

இதைச் சாக்த தந்திரத்தில் 'பிந்துத் திருக் கோணம்' என்பர். இதில் விளங்குபவளே உமையவள் என்பர்.

கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய் - ஏற்றார்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயும்
கழுக்கடை காண் கைக்கொள் படை.

**மூல மாகிய மும்மல மறுக்கும்**
**தூய மேனிச் சுடர்விடு சோதி**
**காதல னாகிக் கழுநீர் மாலை**
**ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்:**

ஜீவர்களின் ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலப் பிணிப்பால் மன மண்டலம் ஒளிபெறாது இருளாக உள்ளது. சிவம் இருளைக் கடந்து ஒளிவிட்டு ஊடுருவிச் சென்று தூய மேனியாக்கி விளங்கும்போது கழுநீர் மாலையணிந்து காதலிக்குக் சாட்சி கொடுக்கும் காதலன் போலப் பொருத்தமான நீலோற்பல ஒளியில் காட்சி கொடுத்தும்.

**விளக்கம்:**

நாததத்துவம் பரையின் ஆற்றலாகும். அதன் ஒளி நல்ல நீலமாகும். மூலாதாரத்திலுள்ள சிவம் சிவந்த நிறம். இவ்விரண்டு ஒளியும் கலப்பதில் கழுநீர் என்ற நீலோற்பல ஒளி பொருந்தும். சிலருக்குச் செங்கழு நீர்ப் பூப்போன்ற ஒளியும் இருக்கக் கூடும். செங்கழுநீரும் வாடினபோது நீலோற்பலம் போல மாறிவிடும். இதை இளம் ஊதா என்று சொல்லலாம். கத்தரிப்பூ தாளிப்பூப் போன்ற ஒளி

பொருந்தும். கழுநீர்ப் பூ சந்திரனைக் கொண்டு மலருவது. இரவுக்குரிய காமத்துக்கு உகந்த புஷ்பம்.

சந்திரஞானம் பற்றியபடியால் சந்திரன் உவக்கும் புஷ்பத்தால் விளக்கப்பட்டுள்ளது.

திருவாரூர்த் தியாகராசர் உற்சவத்திற்குச் செங்கழு நீர் மலர் கொண்டு வருவதே முதல் காரியமாகும்.

சுத்தமான வெள்ளியை உருக்கினால் அதில் ஓர் ஊதா நிறம் படரும். அதனாலே வெள்ளி பொன் மேனியொக்கும். 'உள்ளுணர்வாலாய வுடம்பு' என்று ஔவைக் குறள் கூறிற்று.

வெள்ளியம்பலம் சிதாகாசத்தில் காணும் ஒளி மண்டல ஞானமாகும். ஸ்திரீ வித்தையின் பிரபாவமே வெள்ளியம்பலம் ஆகும். சீவக சிந்தாமணியில் சீவகனின் பிரிவில் அவன் மனைவி செங்கழுநீர் மாலையை முன்னிலையாக்கிக் கொண்டு பிரிவாற்றாமையை விளக்குவதாக உள்ளது.

காதலன் செங்கழுநீர் மாலையணிந்து தனது காதலியினிடம் குறிப்பாலுணர்த்துவதுபோன்று சிவம் வெளிப்பட முன்னோடியாக உள்ள சிவப்பு, நீலம், வெளுப்பு முதலிய் ஒளிமண்டலத் தோற்றமே சீவனை ஆட்கொள்ளச் சிவம் விரும்பியுள்ளது என்பதே சமிக்ஞையாகும்.

சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
 கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
 மணிவார்த்தைக் காக்கி ஐம்புலன்க ளார
வந்தனைஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
 மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக் காடனைய மேனித்
 தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.

— திருச்சதகம்

செத்திலாப்பத்தில் ''சேலும் நீலமும் நிலவிய வயல்சூழ் திருப்பெருந்துறை மேவிய சிவனே'' என்றுள்ளது. சேற்கெண்டைகள் மின்னுவது போன்று நீலோற்பல ஒளியில் சகஸ்ரதளத்தில் விளங்கும் சிவமே என்று கூறியுள்ளார்.

**அரியொடு பிரமற் களவறி யாதவன்**
**பரிமாவின் மிசைப் பயின்ற வண்ணமும்:**

தேகத்தை உண்டு பண்ணுதலும், உண்டு பண்ணின தேகத்தைப் போஷிக்க வேண்டிய நியதியும் பிர்மாவினிடமும் விஷ்ணுவினிடமும் உள்ளது. தேகத்தை உண்டு பண்ணக் காரியாம்சையில் உள்ளது விந்துவின் ஆற்றல். அதில் பற்றுக் கொள்ளுவது மாலின் ஆற்றல். ஸ்திரீ வித்தையால் சகஸ்ரதளத்தையடைந்தவனிடம் ஸ்திரீயின்பால் மோகமும் இல்லை; வீரிய இழப்பும் இல்லை; மற்றொரு பிரஜா விர்த்தி செய்யும் ஆற்றல் இவனிடம் இல்லை. இவ்விதமான இருதன்மையுடைய வர்களால் சிவத்தை அறிவினால் அறிந்து அனுபவித்தற்கு அருமையான சிவம், காமவாயு என்ற சுழுமுனா மார்க்கமாக வாசிக் குதிரைமீது உணர்வாகப் பொருந்திச் சீவனைப் பழக்கிய விதமும்.

மிசை - உணர்வு.
பயின்ற வண்ணம் - பழக்கிய விதம்.
பரி விஷயம், முன்னர் வாசிக் குதிரை விளக்கிய இடத்தில் விளக்கப்பட்டுள்ளது.

இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே
ஒப்பாடாச் சீருடையான் ஊர்வதென்னே - எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப் பெண்ணேத்
திசைப்ப
வான்புரவி யூரும் மகிழ்ந்து.

பரிமாவின் மிசைப் பயிலும் கலை, மனித உடல் கொண்ட ஒரு குரு காட்டவும், சிவகடாட்சம் பொருந்தவும் வேண்டும்.

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியாது அத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி.

— *போற்றித் திருவகவல்*

பிறியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மை யளித்தனை யென்மனதறப்
பேரம்பலக் கடவுளாய்
அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டியே
அமிர்தப்ரவாக சித்தி
அருளினை யலாது திருவம்பலமு மாகியெனை
ஆண்டனைபின் எய்தி நெறியாய்க்
குறிதா னளித்தனை நன்மரவுரி கொளந்தணக்
கோலமாய் அசபாநலங்.
கூறின பின் மௌனியாய்ச் சும்மா இருக்கநெறி
கூட்டினை யெல்லாமிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ?
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோமயா னந்தமே.

— *தாயுமானவர் பாடல்*

அங்கணன் எங்கள் அமரர் பெம்மான்
அடியார்க் கமுதன் அவனிவந்த
எங்கள் பிரான்இரும் பாசந்தீர
இகபரம் ஆயதோர் இன்பமெய்தச்

சங்கங் கவர்ந்துவெண் சாத்தினோடும்
சதுரன் பெருந்துறை ஆளியன்று
மங்கையர் மல்கு மதுரைசேர்ந்த
வகையறி வார்எம்பி ரானாவாரே. — திருவார்த்தை

*"பரிமாவின் பயின்ற வண்ணம்" என்பது புராணக் கதை அல்ல. இது ஒரு தத்துவ உண்மை. புராணம் கூறுபவரும் புராணம் கேட்டவரும் சிவமாவதில்லை என்பதையறியவும்.*

**மீண்டு வாரா வழியருள் புரிபவன்**
**பாண்டி நாடே பழம்பதி யாகவும்:**

*மீண்டு வருவது என்றால் பிறவியெடுத்தல் என்று பொருள். பிறவிக்கு வரும் நியதி இருள் மலம் பற்றிய காரணத்தின் காரியமாகும். முன்னர்க் கூறியபடி மூலமலம் அறுக்கப்பட்டுக் காரணதேகம் ஒளிமயமானவர் மீண்டும் பிறவிக்கு வரவேண்டிய தில்லை. ஆகாயக் கூறிலேயே காரணதேகம் விந்து நாத ரூபமாய் உள்ளது. இதுவே ஜீவனின் பழைமையான நாடாகும். அங்கிருந்து வினைப்போகங்களைத் துயக்கப் பூமிக்கு வந்து மீண்டும் இறந்தவுடன் ஆகாய மண்டலத்திற்கே செல்லுகிறான். ஒளி மண்டலத்தில் தங்கிப் பெறவேண்டிய அறிவு உடலுள்ளபோது பெற்றுவர மீண்டும் வராமல் அங்கேயே தங்கிவிடத் தனது அருள் சத்தியைப் பதிப்பிப்பவர் சிவமாகும். உருவ மூர்த்திகளுக்கெல்லாம் ஒவ்வொரு தகுதியான உலகம் உண்டு. எங்கும் நிறைந்த இவ்வழிபாட்டினர் எங்கும் நிறைந்து நிற்பர் என்றபடி.*

நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி.
— **போற்றித் திருவகவல்**

*பண்டு என்றால் பழைமை. பண்டு என்ற தாது வினடியாகப் பிறந்து சீவனின் காரணதேகம் உள்ள விந்துநாத மண்டலங்கள். விந்துநாதம், சாந்திய தீத கலையைப் பற்றி அரு உருவாகத் திகழ்வது. இங்குச்*

சூரியாகாயம் சித்தாகாயம் சிறப்புற்று விளங்கு பவர்க்குக் காரணத்தில் பூதாகாயம், குணசகிதாகாயம் வலுவிழந்து நிற்கும். இவைகளே இருள்மயமானவை பற்றிப் பிரமன், மால் என்று குறிப்பிடப்பட்டு உள்ளனர். சூக்குமத்தில் இருளின் கவர்ச்சியற்றவன் பிறவிக்கு வரமாட்டான். அத்தகைய ஆற்றல் பேரொளிப் பிழம்பான சிவசத்தியால் கீழிழுக்கும் குணங்கள் மாற்றப்பட்டுச் சிவத்தின் பாலிழுக்கும் குணம் பெருகுவதாலேயே அமைவதாக உள்ளது.

பாண்டிய நாடு - ஜீவனின் ஒளி மண்டலம்.

பாண்டியன் - ஜீவன்.

**பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்**
**உத்தர கோச மங்கையூ ராகவும்:**

அன்பு செய்கின்ற அடியாரை மிகவும் மேலான முத்தி உலகத்தில் சேர்ப்பவன் ஈசான திக்கைத் தனது இருப்பிடமாகக் கொண்டு செய்தருளுவன். உத்தர கோசமங்கை என்பது இடது கண்ணுக்கு மேல் உள்ள ஈசானிய திக்காகும். தேசத்தை ஆளும் அரசன் தலைநகரை ஆட்சியாகக் கொண்டு ராஜ்யபாரம் வகித்தாலும் தான் பிறந்து வளர்ந்த ஊர் வேறாக இருப்பதுபோல் சகஸ்ரதளத்தை ராஜ்யமாகவும், ஈசான திக்கை உத்தரகோச மங்கை என்ற ஊராகவும் கூறப்பட்டுள்ளது. இது முன்னர் விளக்கப்பட்டுள்ளது (உத்தரகோச மங்கையில் வித்தக வேடம் காட்டிய இயல்பும்).

**ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய**
**தேவ தேவன் திருப்பெய ராகவும்:**

காணப்படும் உலகம் தூலமாய் வெற்றுக் கண்ணால் காணக்கூடியதாக உள்ளது. இது காரியப்பிரபஞ்சம். இங்குத் தெளிவாகத் தோற்றம், திதி, அழிவு நடைபெறுவதைக் காண்கிறோம். உலகம் பலவேறு உயிர் வர்க்கங்களைக் கொண்டது. அவ்வவ் உயிர் வர்க்கங்களிலும் இம் முத்தொழில்கள் நடைபெற்றுக்

கொண்டேயுள்ளன. ஒவ்வோர் இனம்பற்றிப் பார்க்கும் போது அநேகம் பிரமர்கள் அநேக விஷ்ணுக்கள் அநேக உருத்திரர்கள் ஏற்படுவர். பலரின் தொழிலையும் நிர்வாகம் செய்ய ஒருவனே வேண்டும். அத்தகைய பெருந்தலைவனே சிவம் என்றார். தேவர்களின் அதிபர் பிர்மவிஷ்ணு உருத்திரர்கள். அவர்களுக்குத் தலைவனானபடியால் தேவ தேவனாயிற்று. ஆதி மூர்த்திகள் பிர்மன் விஷ்ணு உருத்திரராவர். அவர்களை அப்பதவியில் வைத்தவன் சிவமேயாகும். தேவதேவன் என்றபோது அவனைவிட வேறு ஒரு பெரிய தேவனுமில்லை என்றபடி.

வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியிற்
கொட்கப் பெயர்க்கும் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடு பேறாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன் நாடொறும்
அருக்கனிற் சோதி யமைத்தோன் திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன் திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்
றெனைப்பல கோடி எனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன்.

— திருஅண்டப்பகுதி

"சேர்ந்தறியாக் கையானை" — திருவம்மானை

**இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி**
**அருளிய பெருமை யருண்மலை யாகவும்:**

அடியார்களுக்கு ஜீவன் ஒளிமயமாகும்படி அருள் செய்து இருளை அகற்றி இன்பமயமான காம வாயுவினைத் தனது வாகனமாகக் கொண்டு அருள் செய்யும் பெருமையினால் பிரணவ சொரூபனாக விளங்கியும்.

அருள் மலை - சத்தியின் ஆற்றல் கொண்ட மலை. இதுவே பிரணவ மேருவாகும்.

கிஞ்சுகவாய் அஞ்சுகமே கேடில்பெருந் துறைக்கோன்
மஞ்சன் மருவும் மலைபகராய் - நெஞ்சத்து
இருளகல வாள்வீசி இன்பமரும் முத்தி
அருளுமலை யென்பதுகாண் ஆய்ந்து.

இதுகாறும் கூறிய தசாங்கத்தின் விளக்கம்.

1. பெயர் - ஆரூரன் நீற்றுக்கோடி நிமிர்ந்து விளங்கினவன், தேவதேவன்.

2. ஆறு - காம வாயு சுழுமுனை வழியாகப் பாய்வதில் உள்ள ஆனந்தம்.

3. முரசு - நாதப்பறை.

4. ஆயுதம் - கழுக்கடை, சோம, சூரிய, அக்கினி மண்டல ஒளிகள்.

5. மாலை - கழுநீர் மாலை - இந்திரநீல ஒளி.

6. ஊர்தி - வாசிக்குதிரை.

7. மலை - பிரணவம்

8. நாடு - பாண்டி நாடு - ஜீவனின் ஒளி மண்டலம்.

9. ஊர் - உத்தரகோசமங்கை - ஈசானிய திக்கு.

10. கொடி - நீற்றுக்கொடி - விந்து மண்டல ஒளி (இதுவே ரிஷபம்).

அரசர்க்குரிய அங்கமான தசாங்கங்கள் சிவத் திற்குக் கூறப்பட்டுள்ளன.

**எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்**
**அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி:**

ஆன்மாக்கள் பல தகுதிடையோராய்ப் பலதரப் பட்டவர்களா யுள்ளார்கள். எந்தெந்தத் தகுதி யினரையும் எவ்வகைப்பட்ட திறத்தினையும் அறிந்து அவரவர் திறத்திற்கேற்ப அவர்களைத் தன்பால் வரும்படி ஆன்ம அபிவிருத்தியைச் செய்தும்.

**விளக்கம்:**

ஆன்மா பல பிறவிகளில் பிறந்து கடைசியான சில பிறவிகளில் இறைவனை உணர்ந்து அதன் வழிப்பட்டு மீண்டு வாராநெறியை அடைகிறது. இவ்விதம் இறைவனை அறிவதிலும் அவரவர் குணபேதத்தால் வழிபாடு பல வகையாயிற்று. தாமத குணம் பற்றியபோது கொடூரமான தவம், பலி முதலியவைகளைச் செய்து மேலும் ஆற்றல் பெற முயலுகிறான். இராஜசகுணம் மிக்கவன் இராஜ கரமான வாசனை, வாத்தியம், நறுமணம், நைவேத் தியம் கொண்டு வழிபட்டுத் தன் காமியார்த்தங்களைப் பெற முயலுகிறான். சாத்துவீக குணம் மிக்குள்ள போது தன்னையே இறைவனிடம் ஒப்புவித்து அவன் விருப்பப்படி நடக்கத் தயாராகிறான். இவ்விதம் பலவாறாக வழிபடினும் அவரவர் தகுதிப்படி அவர் விருப்பத்தில் நின்று பூர்த்தி செய்பவன் எங்கும் நிறைந்த சிவமேயாகும்.

**நாயி னேனை நலமலி தில்லையுள்**
**கோல மார்தரு பொதுவினில் வருகென**
**ஏல வென்னை ஈங்கொழித் தருளி**
**அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்**
**ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்:**

நாய்போன்ற என்னை நன்மைமிகுந்த சிதாகாயப் பெருவெளியில் ஆறு ஆதாரங்களும் ஒன்றுபட்டு

விளங்கும் ஒளி பொருந்திய சகஸ்ரதளத்தில் பொருந்தும் வகையில் நான். என்ற சரீரத்தை இங்கேயே விட்டு வந்து சேருவாயாக என்று பணித் தனன். அவ்விதம் பழைமையில் தேகாபிமானம் விட்டுச் சென்றவர்கள் சிவரூபம் பெற்றுச் சிவத்துடன் பொருந்தி உலகினர்க்கு மறைந்தருளினர்.

கோலம் - நீரோட்டம் போன்ற உணர்வு.

விளக்கம்:

சைவ சித்தாந்தம் கூறும் முடிவான முத்திநிலை தேகம் உள்ளபோது தேகத்தை ஆகாய பூதமாக்கி விடுதலேதான். இதுவே மீளப் பிறவாநெறியாகும்.

வந்தெனுடல் பொருளாவி மூன்றும் தன்கை
வசமெனவே அத்துவா மார்க்கம் நோக்கி
ஐந்துபுலன் ஐம்பூதங் கரண மாகி
அடுத்த குணம் அத்தனையும் அல்லையல்லை
இந்தவுடல் அறிவறி யாமையும் நீயல்லை
யாதொன்று பற்றினதன் இயல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீயுன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மையேம் யாம்.

அறிவாகி ஆனந்த மயமா யென்றும்
அழியாத நிலையாகி யாதின் பாலும்
பிறியாமல் தண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டின்
நெறியாகக் கூறுவன்கேள் எந்த நாளும்
நிர்க்குண நிற்குளம் வாய்த்து நீடு வாழ்க
நெறியான வறியாமை யெல்லாம் நீங்கச்
சிற்சுகம் பெற்றிடுக பந்தந்தீர்க வென்றே.

பந்தமறும் மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளி யந்தப் பண்புக்கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மை யில்லை
தேசமிலை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமிலை பிறிது மில்லை
சொல்லுமில்லை இராப்பகலாம் தோற்ற மில்லை

அந்தமிலை ஆதியில்லை நடுவு மில்லை
அகமுமில்லை புறமுமில்லை அனைத்து மில்லை.

இல்லையில்லை யென்னினொன்று மில்லாத தல்ல
இயல்பாகி யென்று முள்ளவியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்றா னென்னத்
தோன்றா தெல்லாம் விழுங்குஞ் சொரூபமாகி
அல்லையுண்ட பகல்போல அவித்தை யெல்லாம்
அடையவுண்டு தடையறவுன் அறிவைத் தானே
வெல்லவுண் டிங்குன்னையுந் தானாகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளக்குந் தானே.

தானான தன்மயமே யல்லால் ஒன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்
ஞான காரத்தினொடு ஞேயமற்ற
ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனாலு மிதன்பெருமை எவர்க்கார் சொல்வார்
அதுவானால் அதுவாவர் அதுவே சொல்லும்.

அதுவென்றால் எதுவென வொன்றடுக்குஞ் சங்கை
ஆதலினால் அதுவெனலும் அறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக னாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவும் என்னை யாண்ட
படிக்கு நிருவிகற் பத்தாற் பரமானந்தக்
கதிகண்டு கொள்ளவும் நின்னருள் கூர்; இந்தக்
கதியன்றி யுறங்கேன் மேற்கருமம் பாரேன்.

*— தாயுமானவர் பாடல்*

எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்கம் எய்தியும்
பூதல மதனிற் புரண்டுவிழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்

பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கினர் ஏங்கவும்.

தேகத்தை விட்டு இறைவனுடன் ஒன்றுபடும் ஆற்றலில்லாதவர் சுடுகாட்டு நெருப்புக்கு ஆளாயினர் சிலர். பிருகிருதியின் மயக்கம் விடாதவராய் அதிலே மயங்கிப் பூமியில் உள்ள துன்பங்களில் புரண்டு உருண்டு அதன் வேதனையால் அழுது மடிந்தனர் சிலர். பதஞ்சலி வியாக்கிரபாதர் செய்த தவத்தாற் கிடைத்த திருநடன தரிசனம், நம் போன்றவர்க்குக் கிட்டாததொன்று என்று சலிப்புக் கொண்டு முயற்சியை விட்டவர் சிலர். சுழுமுனா நாடியை எழுப்பிச் சிதாகாசப் பெருங்கடலை அணுகி அதில் மூழ்கி எமது தலைவா தலைவா என்று அழுது புலம்பி அவனது திருவடியைப் பெற்றுத் திருவடி நிழலை யடைந்தவர் சிலர். கடல் என்பது சிதாகாசக் கடல்.

புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந் தானு முடனே காண்க
பரமா னந்தப் பழங்கட லதுவே.

— திருவண்டப்பகுதி

எழில்பெறும் இமயத் தியல்புடை அம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.

நாத தத்துவத்துக்குடைய சதாசிவராகிய தலைவன் அழகுமிக்க பிரணவ மேருபோன்ற பொன்னொளி மிகுத்து விளங்கத் தன்னையடைந்தாரை மீளத் திரும்பாதவாறு தன்னிடத்திலே வைத்துக் கொள்ளும் சிதாகாசப் பெருவெளியில் சிவந்த உதடுகளையுடைய உமையவ

ளாகிய சிற்சத்திக்கும் தேக சத்தியாகிய காளிக்கும் தனது திருமுக விலாசப் புன்சிரிப்புடன் ஒளிமிக்கவனாய் இங்குள்ள அடியார் குழாத்துடன் நின்றருளினான்.

இமயத் தியல்புடை அம்பொற் பொலிதரு புலியூர் - இமயம் போன்று உயர்ந்து விளக்குவதும் பொன் னொளியுடன் கூடினதும் தன்னையடைந்தாரை மீளத் திரும்பாதவாறு செய்வதும் . பிரணவ சமாதியாகும். பிரணவத் தலைவன் பசுக்களுக்குத் தலைவரான சதாசிவர் ஆவர்.

புலியூர் - புலிக்குகையை அடைந்தவர் மீளாது போவர்; அதுபோலப் பிரணவ சமாதியுறுவோர் மீண்டும் பிறவிக்கு வாரார்.

உமை - சித்சத்தி.

காளி - குண்டலினி சத்தி.

இங்குக் காலரூபமான சத்தியைக் காளி எனப்பட்டது. இவள் வாயு பூதத் தலைவி.

சமாதி நிலையில் கால செயமும், அறிவின் விருத்தியும் உள்ளபடியால் 'உமையொடு காளிக்கருளிய சிறுநகை' என்று கூறப்பட்டது.

தோற்றம் எங்கு உள்ளதோ அங்குதான் லயமும் சென்று முடிய வேண்டும்.

கீர்த்தித் திருவகவல் "தில்லை மூதூராடிய திருவடி" என்று தொடங்கி, "பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன், ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே" என்று முடிகிறது. தோற்றமும் முடிவும் ஒரே இடம் என்ற உண்மையைப் புலப்படுத்தும் நயம் கண்டு மகிழ்க.

(கீர்த்தித் திருவகவல் முற்றும்)

# திருவண்டப் பகுதி

உயிர் வாழும் ஜந்துக்களுக்குக் காணும் பகுதி தூல உடலாகும். புறக்கண்ணுக்குக் காண முடியாத சூக்கும உடல் உள்ளது. சூக்குமம் காரணமாயும், தூலம் காரியமாகவும் உள்ளது. தூல உடலைப் படைக்கும் தேவர்களும், குணத்தைப் படைக்கும் தேவ வர்க்கமும், படைத்தவைகளை அழிப்பதைச் செய்யும் தேவ வர்க்கமும் உள்ளனர். படைப்பில் செயல்படுவது பிரமனைத் தலைவனாகக் கொண்ட தேவ வர்க்கமாகும். இவர்கள் பூதாகாயத்தில் தொழிற்படுவர். குணம் பற்றிய திருமால் குணமய ஆகாயத்தில் தனது தேவர் கூட்டத்தில் தொழிற்படுவர். உருத்திரர் குணரகித ஆகாயத்தில் தனது தேவர் கூட்டத்துடன் தொழிற்படுவர். இவை அல்லாத சூரியாகாயம் சித்தாகாயம் ஆகிய ஆகாயக் கூற்றிற்கு மகேசனும் சதாசிவரும் உள்ளனர். இவர்கள் எல்லாம் ஆகாயத்திலுள்ள அணுக்களி னூடே சங்கல்பத்தால் தொழிற்படுத்துபவர்கள். அண்டம் என்றால் ஆகாயம் என்று பொருள். ஆகாய அணுக்களின் பரிமாணம் சூரிய கிரணத்தைப் போல நுண்ணியவை என்று குறிப்பிட்டுள்ளார் திருமூலர். ஒரு பசுவின் உரோமத்தை ஒரு கோடியாகப் பிளந்தால் ஜீவாணுவின் பிரமாணம் என்றார். இத்தலைப்பு ஆகாயக் கூற்றை விளக்கும் பகுதியாம். ஆகாயத்திலே தேவர்கள் இருந்து உயிர்களைத் தொழிற்படுத்துவதால் இத்தலைப்பு திருவண்டப் பகுதி எனப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. தூல உடலைத் தாங்கும் சூக்கும ஆகாயத்தைப் பற்றிய விளக்கம் இத்தலைப்பில் விளக்கப்படுகிறது.

**அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**
**ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன**
**இல்நுழை கதிரின் துன்னணுப் புரையச்**
**சிறிய வாகப் பெரியோன் தெரியின்:**

ஆராயுமிடத்து மனிதரின் ஆகாயக் கூறாலாகிய அண்டாகாய அணுக்கள் அளவிட்டுச் சொல்ல முடியாதனவாகும். அவை குவிந்துள்ள நிலைமையையும் அழகிய ஒளித்தோற்றத்தையும் ஒன்றுக்கொன்று தொடர்ந்து நின்ற அழகைச் சொல்லுமிடத்து அவை நூற்றொரு முடிபுகளைக் கொண்டு செல்வனவாகவும் கீழும் மேலும் சென்று கொண்டிருப்பனவாகவும் இருக்கின்றன.

வீட்டில் நுழைகின்ற சூரிய கிரணத்தைப் போன்ற நெருங்கிய அணுக்களில் நுண்ணியனாய்ப் பெரியோனான சிவம் அறிவுருவாய் விளங்கினன்.

**விளக்கம்:**

உயிரில் பூதாகாயம், குணமய ஆகாயம், குண ரகித ஆகாயம், சூரியாகாயம், சிதாகாயம் எல்லாம் கலந்தே விளங்குகிறது. வீட்டின் சாளரத்தில் சூரியனொளிக் கிரணம் பாயும்போது நுண்ணிய ஒளி அணுக்கள் கீழும் மேலும் சென்று கொண்டிருப்பது விளங்கும். அதுபோல இவ்வொளியணுக்கள் கீழும் மேலும் அண்டாகாயத்தும் சஞ்சரிக்கின்றன. அப்படிச் சஞ்சரிப்பதில் முதுகந்தண்டைப் பற்றியுள்ள கீழ் நோக்குதலையுடைய நாடிகள் வழி நூறாக உள்ளது. ஒரு நாடி மாத்திரம் மேல் முகமாகச் செல்லுகிறது. இந்த நூற்றொரு நாடியினும் கீழாகவும் மேலாகவும் இவ்வணுக்கள் சஞ்சரிக்கின்றன. இந்த 101 நாடி விஷயம் கடோபநிஷத்தைப் பார்க்க விளங்கும். இவ்வணுக்கள் பல நிறம் கொண்டு விளங்குவதால் இவ்வணுக்களின் குவியலைப் 'பிறக்கம்' என்றும் 'அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி' என்றும் கூறினார். பிறக்கம் குவிந்துள்ள தன்மை.

அணுக்கள் சடமயமானவை. அவைகளைச் சேர்த்துத் தொழிற்படுத்தச் சித்துருவாகிய சிவசத்தியும் அவைகளைக் கடந்தும் அவைகளின் ஊடேயும் நின்று தொழிற்படுத்தும்போது சிவசத்தி அவ்வாகாய அணுக்குள் அணுவாய் அறிவாய்ச் சத்தியாய் உள்ளது. அதனால் அணுவுக்குள்ளமரும் சிறியவனாக உள்ளான். உயிர் பிரிந்தவுடன் தூல தேக அணுக்கள் எவ்விதம் தனது ஆற்றலை இழந்துவிடுகிறதோ, அவ்விதமே சூக்கும தேகமும் சிவசத்தி ஆற்றல் அவைகளை விட்டகன்றபோது தூல உடலைப்போலத் தனது செயலை இழந்துவிடும்.

''மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்''

எனப் பின்னர் வருவதைக் கொண்டு அறிக.

**வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்**
**தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய**
**மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்**
**சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்**
**தெறியது வளியிற்**
**கொட்கப் பெயர்க்குங் குழகன்:**

பிரமனைத் தலைவனாகக் கொண்ட பூதாகாய இயக்குநர் ஆகிய தேவர்களையும், திருமாலைத் தலைவனாகக் கொண்ட மிகுந்த கூட்டத்தோடு கூடிய குணமய ஆகாயத் தேவர்களையும், உலகிற்கு உற்பத்தியையும் நிலைபெறுதலையும் செய்யும் தேவர் கூட்டத்துடன் இறுதியைச் செய்யும் உருத்திரகணத் தேவர்களையும், இறுதியை அடையச் செய்யும் மிகப் பெரிய ஊழிக்காலமும் அவ்வழியினின்று மீளப்படைப்பவனும் மீள முன்போல் பூமியில் நிலைபெறச் செய்பவனும் சூக்கும தேகத்தையும் தூல தேகத்தையும் வீசுகிற சூறைக்காற்றால் வீசப்படுவதில் அகப்பட்ட பொருள்போல அவைகளின் நிலையைச் சுழலச் செய்பவனும் ஆகிய அழகன்.

விளக்கம்:

சூக்கும தேகத்தில் நடப்பவையே தூலத்தில் உருக் கொண்ட காரியமாகிறது. தேகத்தினின்றும் உயிர் பிரிக்கப்பட்டபோது பிர்மன், விஷ்ணு, உருத் திரன் தொழில் விடுபட்டது. சூக்கும தேகம் தூலத்தை விட்டுப் பிரிந்ததே தவிர அது ஒடுக்கப்படவில்லை. அத்தகைய சூக்கும தேகத்தை ஒழிப்பவனும் சூக்கும நிலையை நிலைநிறுத்துபவனும் சிவனேதான். உயிர் சூக்குமமாக மாறும்போதும், தூலமாக மாறும் போதும் காற்றால் அலைக்கழிக்கப்படும் பொருளே போலச் செய்பவன் சிவபெருமானே. அவன் இவ்வளவைச் செய்து கொண்டும் காலத்தால் பாதிக்கப்படாத அழகனாகவே உள்ளான். குழகன் - இளமையுடையோன், அழகுடையோன்.

முழுவதும்

**படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை**
**காப்போற் காக்கும் கடவுள் காப்பவை**
**கரப்போன் கரப்பவை கருதாக்**
**கருத்துடைக் கடவுள் திருத்தகும்**
**அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும்**
**வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி**
**கீடம் புரையும் கிழவோன்:**

உலகம் பல வேறுபட்ட யோனிகளாய் உள்ளது. ஒவ்வொரு பிரமனும் ஒவ்வொரு வகை சிருஷ்டியில் ஈடுபடுகின்றனன். அவ்விதமாகப் பல வேறுபட்ட பிரமர்களைத் தகுதி நோக்கி அவ்வப்பதவியில் வைத்தது சிவமேயாகும். சிருஷ்டித்தவைகளைப் பாதுகாக்கப் பல காப்புக் கடவுளர் தேவைப்படும். அவ்வகையான காப்புக் கடவுளர்களைப் பதவியில் அமைத்தது சிவமேயாகும்.

காத்தவைகளை அழிக்கும் நியதியால் தொழிற் படுத்த அநேக உருத்திரர்கள் தேவைப்படும். அவ்வாறான அநேக உருத்திரர்களைப் படைத்தவன் சிவமேயாகும். இவ்வித மான முத்தொழில் நியமனம் செய்பவன் சிவமேயாயினும் அவன் இவ்வாறு என்று சங்கற்பம் செய்து அமைக்க

வில்லை. சந்நிதான மாத்திரத்தில் அவரவர் பக்குவத்திற் கேற்ப அவை அவை நடைபெறுகின்றன.

சிறப்புப் பொருந்திய அறுவகைச் சமயத்தைச் சார்ந்த அறுவகைச் சமயம் பற்றியவர்க்கும் வீடு பேற்றை அளிப்பவன் சிவபெருமான் ஒருவனே ஆவர். ஏனெனில் சமயம் படைத்த பெரியோர்களின் ஆற்றலையும் சிவத்தையும் ஒப்பு நோக்கும்போது சமயங்கண்ட பெரியோர்கள் பேரறிவுப் பொருளான சிவத்தின் முன் புழுப்போலாவார்.

**விளக்கம்:**

ஒரு குளத்தில் பலவகையான பருவங்களை யுடைய தாமரை மலர்கள் உள்ளன. எல்லாப் பூக்களும் சூரியனைக் கண்டு ஒரே சமயத்தில் மலரவில்லை. மலரும் பக்குவம் வந்த பூவுக்கே சூரியகிரணம் துணை செய்கிறது. அதுவரையில் அப்பூவின் வளர்ச்சி இயற்கையிலே மறைந்து வளருகின்றது. அப்பூவினிடம் மறைந்து வளர்ந்த வாசனை, நிறம் எல்லாம் இறுதிக் கட்டத்தில்தான் விளக்கம் பெறுகின்றன. அவ்விதமே முத்தொழில் புரிபவர்கள், அவரவர் தகுதியில் வளர்ச்சி பெற்று அவ்வப் பதவிகளில் அமருகின்றனர். அவரவர் குணத்திற்கேற்றபடி அவ்வப்பதவிகளில் அமர்கின்றனர். குணவிருத்தி ஜீவ வளர்ச்சியின் இரகசியமாகும். சைவ சித்தாந்தம் சிவத்தை ஆதிகுணமொன்று மில்லான் என்று கூறிவிட்டது. சிவத்தை மனதற்றவன் என்றும் கூறிவிட்டது. உத்தியோகப் பதவியில் சிவம் அமர்த்துவது என்றால் சிவத்துக்கு மனம் வந்துவிடும். அவன் சந்நிதானமே என்றால் அப்பிரச்சினை எழாது என்பது பற்றியே இவ்விதம் கூறப்பட்டுள்ளது. அவ்வாறான நியமகப் தவி சதாசிவரிடம் உள்ளது. அவர் அகண்ட சிவமும் அல்ல. பந்தப்பட்டுள்ள உயிர்களை நடத்தும் தலைவர் அவரே. உருவத்திற்கும் அருவத்திற்கும் இணைப்பாக உள்ளவர்.

அறுவகைச் சமயம் என்பது புறச் சமயமா? அகச் சமயமா? என்ற பிரச்சினைக்கு இங்கு இடம் இல்லை.

புறத்தே வழிபாடுகளையுடையவைகளைக் கொண்ட தென்றே பொருள். பெயர் எவ்வாறு கூறினும் அகண்டப் பொருள் ஒன்றே என்ற முடிவில் கூறப்படும்போது புறச்சமயங் களையோ உட்சமயங்களையோ கொள்ள இடம் இல்லை. பின்வரும் திருவண்டப் பகுதியில்,

இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன.

திருமூலர் இக்கருத்தை மிகத் தெளிவாகப் புறச் சமய தூஷணம், நிராகாரம், உட்சமயம் என்ற தலைப்புகளில் விளக்கியுள்ளார். சமயம் சாமானி யர்க்கு வேண்டப்படுவதே. ஆத்ம ஞானிக்குச் சமயமில்லை என்ற முடிவேதான்.

ஆயத்துள் நின்ற அறுசம யங்களும்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா
மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே. 1530

ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுக லாமே. 1533

உள்ளத்து ளேதான் கரந்தெங்கும் நின்றவன்
வள்ளல் தலைவன் மலருறை மாதவன்
பொள்ளற் குரம்பைப் புகுந்து புறப்படுங்
கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே. 1531

ஆன சமயம் அதுஇது நன்றெனும்
மாய மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த உருவது வாமே. 1545

*எல்லாச் சமய முடிவையும் வகுத்தவர்கள் அமரத்துவம் பெறாதவர்களேதான். தேகத்தில் உள்ள தலைவனை எங்குச் சென்று தேடி அறிவது? அறிந்தவர்க்கு அவரவர் பக்குவத்தில் வெளிப்பட்டருளுவன். எல்லா உருவமும் அகண்டத்தின் முன் ஒரு புழுப் போலச் சிறியனவாகவே கருதப்படும்.*

**நாடொறும்**

**அருக்கனிற் சோதி யமைத்தோன் திருத்தகு**
**மதியில் தண்மை வைத்தோன் திண்திறல்**
**தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்**
**வானிற் கலப்பு வைத்தோன் மேதகு**
**காலின் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்**
**நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட**
**மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்**
**றெனைப்பல கோடி எனைப்பல பிறவும்**
**அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று:**

*காண்டற்கு அரிய சிவாதித்தருக்கு நாள்தோறும் ஒளிபெருகச் செய்தோன்; மனிதர்களிடம் திருந்த வேண்டிய பண்புகள் அமைய வேண்டும்; அவ்விதம் திருத்தும் முறையில் சந்திரமண்டல அறிவு பெற்றுச் சாந்தி பெருகும்படி செய்தோன்; வலிமையுடைய அக்கினிக் கூறில் வெப்பு மண்டலத்தை அமைத்தோன்.*

*காணப்படும் எவ்வுயிரும் மாயையின் தன்மையை யுடையவை என்றறிய ஆகாயத்தில் சூக்கும ஒளி உருவை அமைத்தோன், மேன்மை பொருந்திய மனிதரிடத்து நீர்த் தத்துவத்தில் இனிய சுவையைப் படைத்தோன், மாயையினின்றும் வெளிப்பட்ட மண்ணினிடத்து வலிமையை அமைத்தவன், இவ்வாறாக எந்த நாளிலும் எவ்வளவு பல கோடியாகியவைகளிலும் எவ்வளவோ பல பொருள்களிலும் அவ்வவற்றின் தன்மையை அவ்வப் பொருள்களிலும் அமைத்து வைத்தவன்.*

*புறத்தே உள்ள பௌதிகச் சூரியனிடம் ஒளி இயல்பாக உள்ளது. அது நாள்தோறும் ஒப்படைக்கப் படுவதில்லை.*

மனிதனின் ஆத்ம சூரியனேதான் தினந்தினம் ஒளிபெருகச் செலுத்தப்படுவது. அதுபோலவே மனிதனிடம் உள்ள நற்பண்புகள் பெருக்கமுறும் வகையில் செலுத்தப் படுவதைத்தான் 'திருத் தகுமதி' என்று கூறப்பட்டுள்ளது. பக்குவம் பெறாதுள்ள நிலையில் கீழுள்ள அக்கினி மண்டலம் தகிப்பதைத் 'திண்திறல் தீயில் வெம்மை செய்தோன்' என்று கூறப்பட்டுள்ளது. ஜீவனுக்கு ஆகாயப் பற்று மிகுந்தபோது புறத்தே செல்லும் அறிவுகளை ஆகாயத்தில் கலக்குமாறு செய்தவன். ஜீவன் புறநோக்கம் உள்ளபோது பிராண கதியை ஒருவிதமாகவும் அகநோக்குக் கொண்டபோது வேறுவிதமாகவும் சலிக்கச் செய்தவன்.

ஆகாயக் கூறில் விளங்கும் ஜீவனை அறிய ஜீவனின் பூமிக்கூறு புறநோக்குதலில் சலிக்காது திண்மையாய் இருக்குமாறு செய்தவன். அதாவது காம ஜெயத்தை அளித்தவன்.

இவ்வாறாக எவ்வளவோ ஜீவகோடிகளுக்கும், அவை அவைகளிலும் பொருந்தி அவை அவை வளருமாறு இயல்பினை அமைத்துக் கொடுத்தவன் சிவமேயாகும். இவ்விதமான இயல்பினை மனிதனுக்கு உண்டாக்கிக் கொள்ள இயலாது.

இதையேதான் ஆடல் வல்லான் தத்துவம் என்பர். இது கீர்த்தித் திருவகவலில் கூறப்பட்டுள்ளது. அருக்கன் காண்டற்கரியவன், பிரியன்.

**முன்னோன் காண்க முழுதோன் காண்க**
**தன்னே ரில்லோன் தானே காண்க**
**ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க**
**கானப் புலியுரி அரையோன் காண்க**
**நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும்**
**ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்**
**இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க**
**அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க**
**பரமன் காண்க பழையோன் காண்க**
**பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க**
**அற்புதன் காண்க அநேகன் காண்க:**

'காண்க' என்று வரும் தொடர்கள், இறைவனின் புகழைக் கூறி அத்தகையவன் என்மேல் கிருபை செய்ய வேண்டும் என்ற பொருளில் உள்ள வாக்கியங்களாகும்.

1. உலக் சிருஷ்டிக்கு முன்னுள்ளவன்.

2. உலகமாய் உள்ளவன்.

3. தனக்குவமை யில்லாதவன்.

4. தான் ஒரு முதலாய், அறிவுருவாய் இருந்து கொண்டு யாவற்றையும் விளக்குபவன்.

5. பன்றிக் கொம்பை யணிந்தவன், பன்றி யவதாரம் விஷ்ணுவாகும். அவர் எலும்பை யணிந்தவன் என்றால் அவர் வசிக்கும் குணமய ஆகாயத்தைத் தன்னிடம் அடக்கிக் கொண்டுள்ளவன்.

6. காட்டில் உள்ள புலித்தோலை இடையில் தரித்தவன். புலி பசியில்லாதபோதும் கண்ட பிராணியை உயிருடன் விடாது கொன்றுவிடும். அதுபோல மனம் ஒன்றை விட்டு ஒன்றுக்குத் தாவிச் செல்லும் இயல்பையுடையது. மனம் உருவப் பற்று விட்டவர்களிடம் சேஷ்டை செய்ய முடியாது. அகண்ட சிவத்தினிடம் சங்கல்பத்தைப் பற்றிப் பாயும் மனம் இடையிலே கட்டப்பட்டுள்ளது.

7. நீற்றொளியன்.

8. அவனது பிரிவை நினைக்குந்தோறும் பொறுக்க மாட்டேன்.

9. அவன் என்னை விட்டு நீங்கின் நான் கெட்டொழிவேன்.

10. உயிருக்கு ஒரு நாதம் உண்டு. வீணாத் தண்டமே சிவவீணை என்றும் பரிபாடைச் சொல். உயிரின் நாதத் தொனியில் பொருந்தியுள்ளவன்.

11. உயிரின் நாதத் தொனியை அறிந்து அதில் ஒன்றுபடுபவனை ஏற்றுக் கொள்பவன்.

12. யாவருக்கும் மேலானவன்.

13. யாவருக்கும் பழைமையானவன்.

14. பிர்ம விஷ்ணுக்களால் காண முடியாத பெரியோன்.

15. எல்லா உயிர்களிலும் விளங்கும் ஞானாக்கினி.

16. அநேக ஜீவர்களாயுள்ளவன்.

**சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க**
**சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க**
**பத்தி வலையிற் படுவோன் காண்க**
**ஒருவன் என்னும் ஒருவன் காண்க**
**விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க**
**அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க**
**இணைப்பரும் பெருமை ஈசன் காண்க**
**அரியதில் அரிய வரியோன் காண்க**
**மருவிளப் பொருளும் வளர்ப்போன் காண்க**
**நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க**
**மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க:**

17. சொல், பதம் என்பன பொதுவில் ஒரு பொருளுடையவையே. இங்கு எல்லாப் பொரு ளாகவும் உள்ள இறைவனை உணர்த்தும் என்றும் உணர்த்தப்பட்டுள்ளது. இறைவன் பிரணவத்தாலும் மந்திரத்தாலும் அறியப்படத்தக்கவன் என்று வேதம் கூறினாலும் இவைகள் நாததத்துவத்தில் நிலை பெற்றுள்ள படியால் மந்திரங்கடந்து விளக்கும் நாதாந்த நாதங்களை அறிய வாயிலாகுமே தவிர எம்மந்திரமும் சிவமாகாது.

ஓங்காரா தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சிவ பரசிவ ரூபமே. — **திருமந்திரம் 2677**

நாதாந்தமே ஆத்மனின் நிலையாகும். அதுவே சிவத்தின் நிலையுமாகும்.

சப்தப்பிரமம் என்பது அறிவினால் அமையும் ஒரு ஆதாரமேயாகும். இதற்கு அதிபர் சதாசிவம். நாமரூப பேதமற்ற அண்டாகாய வழிபாட்டில் யாதொரு வியக்தமான உருவையும் பெறாமல் விந்து நாதமயமாய் அகண்ட உருவமாய் விளங்குவர். அந்நிலையையும் கடந்து நாதாந்தம் சென்றவரே சிவானுபவம் பெற முடியும். நாதம் பரையோகம் பரைபோகம் எனப் பெயர் பெறும். பரையில் அதீதம் என்பதும் நாதாந்தம் என்பதும் ஒன்றேதான். அப்படி யிருப்பினும் சிவம் பூமி தத்துவத்தில் பின்னியுள்ளான்.

நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி
பூதத் துவத்தே பொலிந்தின்பம் எய்தினர்
நேதத் துவமும் அவற்றொடு நேதியும்
பேதப் படாவண்ணம் பின்னிநின் றானே.

— திருமந்திரம் 2795

நாத முடிவிலே நல்லாள் இருப்பது
நாத முடிவிலே நல்யோகம் இருப்பது
நாத முடிவிலே நாட்டம் இருப்பது
நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே. 609

நாதம் என்பது அறிவினால் பெறும் ஸ்பந்தமேயாகும். அதுவே சூக்கும வாக்கு அல்லது நாதம் என்று கூறப்படுவது. இந்நிலை எண்ணத்தின் செயலாகும். எண்ணுவதை விட்டபோது நாதாந்தம் செல்லக்கூடும். இதுவே ஆத்மாவின் சுபாவநிலை. அதுவேதான் சிவத்தின் நிலையுமாகும். சிருஷ்டியின் முதல் நிலை நாதத்தோற்றமேயாகும். இலயத்தின் போது நாதாந்தமே இறுதி நிலையாகும். ஆத்மாவின் அறிவு எண்ணுதலை விட்டுச் சும்மாயிருக்கும் நிலை கைவசம் பெற்றால் அதுவே ஆத்மாவின் சுதர்ம நிலையாகும். ஆத்மாவில் சிவம் இருந்து ஜீவர்களை நடத்துவதால் 'தொல்லோன்' எனப்பட்டது. ஆத்மா எப்பொழுது உண்டோ அன்று முதல் சிவமும் அங்கு உள்ளது. இது எத்தனையோ கோடிக்கணக்கான வருஷங்களுக்கு முந்திய விகாசத்தின் தொடர் பாகையால் மிகப் பழைமையானவன் சிவம்.

*18. சேட்சி - தூரம்.*

*சித்தம் என்பது அறிவினால் சேகரித்து வைக்கப்பட்ட ஒரு குவியல் மனக் கருத்துகளாகும். எவ்விதம் கருதப்பட்ட திருவுருவும், சிவமல்ல. அகண்ட உருவைக் கருத்தினால் அளவிட முடியாதது பற்றி உருவ வழிபாட்டில் சிவன் வெகு தொலைவில் இருப்பதால் 'சித்தமும் செல்லாச் சேட்சியன்' என்றார்.*

*19. அவ்வாறு அவன் உண்மையில் விளங்கும் அகண்ட சொரூபத்தில் அன்பு கொண்டவர்க்கு அவன் அகப்படு பவனாகவே உள்ளான். மேலே கண்ட 17, 18, 19 பிரிவில் காண்பிக்கப்பட்ட கருத்துகளே முடிவான ஞானமாகும்.*

கருத்தடங்கின் முத்தி, அது கையகலிற் கட்டாகும்
விரித்த பொருளிதுவென்ன வறிவுடை மேதக்கோர்
திருத்தகு நல்லறிவாலே சித்தத்தைத் திறம்பாமல்
அருத்தியுட னிலைநிறுத்து மஃதறிவின் பயனாமால்.

ஒருபொரு ளெக்காலத்து முளதாகிச் சிறப்புடைத்தாய்
இருவினையின்றி மேலா மின்பத்தை யளிப்பதாகும்
பொருவிலா விதன்மே லன்புபொருந்திடா தாருமுண்டோ
திருவுலா வகன்றகல்விச் சிறந்தசான்றோர்க டாமே.

தூரியணாய்ப் பொருள்களுக்குத் துளக்கமிலா தொன்றாகி
ஆரியமா மநுபவமாம் அதன் மேலன் புடையவன்
காரியலுங் குழன்மடவாய் கருதானே யாயிடினும்
நேரியதாய் நித்தமாய்ப் பதமடைவ னெறிமையினால்.

**— தேவிகாலோத்தர ஆகமம்**

*துளக்கமிலாது ஒன்றாகி - அப்பொருள்களோடு கலந்து நின்றும், அப்பொருள் போல நிலை வேறுபடாது என்றும் ஒரு தன்மைத்தாகியும்.*

உருவருவாவ்து யாதென் றுரைத்திடி லகங்காரந்தான்
மருவிய வடிவதாகும் வடிவதும் அறவே விட்டால்
உருவிலாச் சத்தியத்தால் உலகெலாந் தோன்றலாலே
பொருவிலாச் சத்தித்தியானம் பொருந்திடவுரைத் ததன்றே.

**— தேவிகாலோத்தர ஆகமம்**

பொருவிலாச் சத்தித் தியானம் - சரம் அசரம் என்னும். இரு கூற்றுப் பிரபஞ்சங்களும் அச்சிவ பரம்பொருளிடமே தோன்றி நின்று ஒடுங்குவதால் ஒப்பிலாத சிவத்தியானம்.

யானெனு மதனைநீக்கி யேகமாய் நின்றஞானம்
ஆனவவ் வொளியாய்த் தோன்றுமது வித்துமாகித்
தேனமர்கரிய கூந்தன் செய்யவாய் பரந்துநீண்ட
மானமர் விழியாய் மேலாம்யோக வத்தகமுமாமால்.

சக்கரநாடி சான்றோர்வழித் தெய்வ ரூபமுள
அக்கர மண்டலங்கள் ஞானம்போ லழகின்றாகும்
மக்கடோய் மாயாவிச்சை மந்திரம் பிரணாயாமம்
தொக்கசீர் ஞானஞ்சேரத் தொடங்குவார் தொடங்கலாகா.

மந்திரஞ் செபந்தியானம் பூசனை வணக்கம்வேண்டா
அந்தமிலாத முத்திக்குபாய மேயறிய வேண்டும்
சிந்தனை புறமேசெல்லிற் றுயரமே திரியமீட்கின்
பந்தமாந் துன்பம்நீங்கிப் பரமானவின்பஞ் சேர்வார்.

புறனகங்கீழ் மேல்பக்கம் புணர்வதோர் பொருளுமில்லாதத்
திறனுடையுருவ மெல்லாந் தானாகித் தேகமின்றாய்
அறன்முறை யடங்கும்ஞான யோகியா லறியப்பட்ட
விறன்மலி ஞானானந்த மேன்மையாய் விளங்காநிற்கும்.

எந்த வாருயிர் யாதோர் பொருளினைச்
சிந்தையாற் பற்றிக் காரியஞ் செய்திடின்
அந்த யோனியதா மென்றறி வினால்
பந்தமில் பொருள் பற்றுதல் தக்கதே.

— தேவிகாலோத்தர ஆகமம்

20. யாதொரு உபாதியுமின்றிப் பரசிவம் உள்ளது. அதனிடம் சுத்தமாயை அசுத்தமாயை என்ற இரண்டு தத்துவங்களும் மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை என்று ஆறு அத்துவாக் களும் அவற்றை இயக்கும் சதாசிவரும் உளர். எழுத்தோசையால் சிருஷ்டிக்கப்பட்ட கருத்து வன்னம், பதம், மந்திரமாகும். அவைகளுக்குத் தொடர்பான தத்துவம் புவனம், கலையமையும். இச்சதாசிவரிடம் அவர் வியூகரான

பிரமன், விஷ்ணு, உருத்திரர், மகேசர் அமைவர். சப்தப் பிர்மங்கடந்தபோது சதாசிவரைக் கடந்ததாகிறது. அந்நிலையே நாதாந்த நிலையாகும். அங்கு விளங்குவது எல்லாப் பொருளுக்கும் இருப்பிடமாய், புகலிடமாய் உள்ள சிவம் ஒன்றேயாகும்.

நிருபாதி பரசிவத்தால் நிகழ்சடாத்து வாக்கள்
வரும்மாறு தோற்று வித்தமாயை இரண்டருவாகி
ஒருவாம லுறுவகையினுட் புறம்புமுறல் போலப்
பெருஞான சீவன்முத்தர் பிறங்குவர் தீங்கறுத்தே.

— தேவிகாலோத்தராகமம்

ஒரே கடவுள் என்பது சிவமாகும். அது அதன் கீழான சத்தி, நாதம், விந்து, சதாசிவர், மகேசர், உருத்திரன், விஷ்ணு, பிரமன் என்றவர்களை எல்லாம் தன்னகத்தில் அடக்கியதேயாகும்.

21. அவ்வொன்றான சிவமே ஆறு அத்துவாக் களாய் விரிந்துள்ளது. அதுவே இந்த இருநூற்றிருபத்து நான்கு புவனங்களாய் விரிந்துள்ளது. பொழில் - புவனம்.

22. மகா சூக்குமமான அணுவின் கூறிலும் அதனுள் ளும் புறம்பும் அதிசூக்குமமாய் வியாபித் திருப்பவன்.

ஐயோன் - மகாநுட்பம் பொருந்தியவன்.

23. ஆகாயம் பூதாகாயம், குணமய ஆகாயம், குணரகித ஆகாயம், சூரியாகாயம், சித்தாகாயம் என்று ஐவகையாக உள்ளது. சீவனுக்குத் தகுதி நோக்கி எவை எவைகளுடன் பொருத்த வேண்டுமோ அவ்விதம் பொருத்தும் நியதிக்குத் தலைவன் சிவமேயாகும்.

24. அரியது - மேலானது, சிறந்தது. மேலான தாகக் கருதப்படுபவைகளுள் எல்லாம் சிவமே மேலானவன்.

25. சிவன் எப்பொருளிலும் உள்ளும் புறம்பும் கலந்து நிற்பதால் அப்பொருள்களின் வளர்ச்சிக்கும் அவனே காரணன்.

26. எவ்வளவு ஆற்றலுடன் கூடியவராயினும், இறைவன் சாஸ்திர ஞானத்தால் அறிந்து அனுபவிக்கப் படுவதில்லை. அவன் ஆராய்ச்சியறிவைக் கடந்து விளங்கும் நுட்பமானவன். சப்தப் பிரமம் வரையில் சாஸ்திர ஞானம் செல்லும். அதன்மேல் சம்பிரதாய ஞானத்தால்தான், சிவத்தை அறிய முடியும்.

27. மேல், கீழ், உள், வெளி என்ற பாகுபாடு கொண்டு விளக்க முடியாதவாறு யாவற்றுள்ளும் மகா சூக்குமமாய் உயர்ந்திருப்பவன் இறைவன்.

**அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க**
**பந்தமும் வீடும் படைப்போன் காண்க**
**நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க**
**கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க**
**யாவரும் பெறவுறும் ஈசன் காண்க**
**தேவரும் அறியாச் சிவனே காண்க**
**பெண்ஆண் அலியெனும் பெற்றியன் காண்க**
**கண்ணால் யானுங் கண்டேன் காண்க**
**அருள்நனி சுரக்கும் அமுதே காண்க**
**கருணையின் பெருமை கண்டேன் காண்க**
**புவனியில் சேவடி தீண்டினன் காண்க**
**சிவனென யானும் தேறினன் காண்க**
**அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க**
**குவளைக் கண்ணி கூறன் காண்க**
**அவளும் தானும் உடனே காண்க:**

28. சிவம், தோன்றினது மல்ல, முடிவுறும் பொருளுமல்ல. அவன் நித்தப் பொருள் ஆதல் பற்றிப் பிறப்பிறப்பற்றவன்.

29. அவனே உயிர் வருக்கங்களுக்குப் பந்த நியதியையும் வீடு பேற்றையும் வகுப்பவன்.

30. அசையாப் பொருள்களான மலை மரம், கடல் போன்றவைகளாகவும், அசையும் பொருள்களான நடப்பன, பறப்பன, ஊர்வன முதலாகிய உயிரினங் களாகவும் அவனே உள்ளான்.

31. கற்பம் என்பது ஒரு பெருங்கால அளவு. 432 கோடி வருடம் கொண்டது பிரமனது ஒரு நாள். அவ்விதம் நூறாண்டு கொண்டது ஒரு பிரமன் ஆயுசு என்பர். அநேகம் பிரமர்களைக் கண்ட சிவம் என்னும்போது, அவன் கற்பத்தால் கணக்கிடும் முதல் சிருஷ்டியையும் முடிவான இறுதியையும் கண்டு கொண்டிருப்பவன் என்பது தெளிவாம்.

32. எல்லாவுயிர் வருக்கத்திலும் அவன் கலந்திருப்பதால் எல்லா உயிர்களும் அவனையடைய அருகதையுடையனவே.

33. தேவர் அசுரர் போன்றோர் சிருஷ்டியில் ஒளியுலகிலிருந்து பூமியின் குணநலன்களைக் கண்டறிந்து வர இறங்கி வரும் உயிரினங்களாகும். அதனால் ஊர்த்துவகதியை அவர்கள் அறியமாட்டார் களாதலால், 'தேவருமறியாச் சிவன்' எனப்பட்டது.

34. பெண், ஆண், அலி என்னும் பாகுபாடுகளில் கலந்துள்ள தன்மையன்.

35. கண் - அறிவு, ஞானம். எனது அறிவுக்கண் கொண்டு நானும் கண்டேன். புறக்கண் எங்கும் நிறைந்துள்ள சிவத்தைக் காணாது நாமரூப பேத மாகிய உருவத்தையே காணும் தன்மையது. 'யானும் கண்டேன்' என்ற உம்மையின் கருத்தையறியவும், முன்னர் பலர் கண்டுள்ளனர். மேலும் பலர் காணக் கூடும். யானும் அவர்களில் ஒருவன் என்றபடி.

36. அருள் - சத்தி. கருணை. தன்னை விரும்பும் அடியார்க்கு அவனது சத்தியை மிகவும் விரும்பி அளிக்கும் அமுதம் போன்றவன். அமுதம் - சாகா மருந்து.

37. அப்பெருமானது கருணையையும் அதன் பெருமையையும் நான் கண்டுள்ளேன். இந்நூல் ஊகத்தால் சொல்வதன்று என்பது கருத்து.

38. அவனது கருணையை நான் உணர்ந்தபோது அத்தகைய ஆற்றல் கொண்டது சிவமே எனத் தெளிந்தேன்.

39. அவன் என்னைத் தன்னடியானாக ஆக்கிக் கொண்டனன். ஆட்கொள்ளுதல் என்றபோது சீவபோதம் விட்ட நிலையில் சிவபோதம் நிகழும் என்றபடி.

40. குவளை - நீலோற்பலம், செங்கழுநீர். கண்ணி - பூமாலை, தலையிற்சூடும் மாலை. சிரசின் மேலுள்ள நீலோற்பல புஷ்பத்தின் ஒளியில் தானும் தனது சத்தியுமாகக் கலந்து விளங்குபவன். கீர்த்தித் திருவகவலில் விளக்கப்பட்டுள்ளது காண்க.

41. சத்தியும் தானும் கால வேறுபாடின்றிச் சம காலத்தில் காண்பவர். ஆகம நூல், சிவம் ஒன்றையும் செய்யாது தனது சத்தியைக் கொண்டே அறிந்தும் செய்தும் வரும் எனக்கூறும். கண் ஒரு கருவி. அதன் இயக்கத்தில் ஒரு சத்தியுண்டு. அதில் ஓர் அறிவும் உண்டு. இந்த இரண்டும் சேர்ந்தால்தான் கண்ணால் காண்பது மூளைக்குப் போய்ச் சேரும் அறிவாகப் பொருந்தும். கண்ணின் இயக்கத்திற்கும் அது கொண்டு செல்லும் அறிவுக்கும் காலபேதம் இல்லை. ஒரே காலத்தில் இவை இரண்டும் நடப்பவை. இம்முறை எல்லாக் கருவிகளுக்கும் பொருந்தும்.

**பரமா னந்தப் பழங்கட லதுவே**
**கருமா முகிலில் தோன்றித்**
**திருவார் பெருந்துறை வரையில் ஏறித்**
**திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய**
**ஐம்புலப் பந்தனை வாளரவு இரிய**
**வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப**
**நீடெழில் தோன்றி வாளொளி மிளிர**
**எந்தம் பிறவியிற் கோபம் மிகுத்து**
**முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்**
**பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட**
**எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்**
**செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்டவரையுறக்**

**கேதக் குட்டம் கையற வோங்கி**
**இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை**
**நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்**
**தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்**
**அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன:**

*முன்னர்க் கூறிய ஊதாநிற ஒளியில் அகப்பார்வை பொருந்தினபோது அமையும் நிகழ்ச்சிகளை இதன்மேல் கூறுகின்றார்.*

*அவ்வொளியே பரமானந்தக் கடலாகும். அது முன்னர் இருண்ட மேக நிறமாகத் தோன்றித் தேகத்தின் தலைவன் வாழும் ஒளி பொருந்திய பிரணவ மலைவரை மின்னொளி வீசப் பெற்று, நாலா பக்கமும் சூழ விரிந்து ஐம்புல வழியாகச் செல்லும் வேட்கைப் பிணிப்பைச் செய்யும் கயிறாகிய பாம்பு கெட்டு ஓட, பிறவியினால் பொருந்தும் பெருந்துன்ப மாகிய வெப்பம் அதனது தலையைத் தாழ்த்தவும், நீண்டு உயர்ந்து செல்லும் வாளொளி பிரகாசமடைய என்னுடைய பிறவியைக் கடிந்து அவனது கருணையின் சத்தியால் நாதமாகிய முரசு அதிரவும், அடியவர் கைகுவித்தல் போன்று சகஸ்ரதளம் நிமிர்ந்து சிறு பச்சையொளி விளங்கவும், என்னுடைய கடைக் கண்களில் கண்ணீர் அரும்பவும், குறைதலில்லாத அன்பை வெளிப்படுத்தியும் மூலாதாரத்திலிருந்து செவ்வொளி எங்கும் நிறைந்து பிரணவமான அண்ட கோசத்தைச் சூழவும், துன்பத்தைச் செய்யும் ஆறாதாரங்களாகிய சிறு இனங்கள் எல்லாம் சுழுமுனா நாடியில் பொருந்தி எழவும், மான் கூட்டம் எவ்விதம் கானல் நீரைத் தொடர்ந்து சென்று தாபம் நீங்காது சோர்ந்தனவோ அவ்விதம் ஆறு சமய அறிவாகிய கானல் நீரைத் தொடர்ந்து செல்லாது விடுபட்டேன்.*

**விளக்கம்:**

*சிரசின்மேல் மேகம்போல் தோன்றும் ஒளியே ஆன்மாவின் பாசநிலையில் உள்ள ஆன்ம ரூபமாகும். அதுவே கத்தியைத் தீட்டின ஒளிபோல் விளங்கும்.*

அதனூடே ஒளிக்கிரணங்களும் விளங்கும். இதைத் திருத்தசாங்கத்திலும் 'மின்னொளி திசை திசை விரிய' என்றார்.

மனம் அகண்டத்தில் பதிவுற்றபோது சர்ப்பம் போல் சீறி எழுந்து நிற்கும் ஞானேந்திரியங்கள் தமது திறனை இழந்துவிடும். இதை 'ஐம்புலப் பந்தனை வாளரவு இரிய' என்றார்.

இரிய - ஓட்டமெடுக்க, கெடும்படி. மனிதர் களுக்குத் துன்ப உணர்ச்சி என்பது தேக தர்மத்தை உணரும் வரையில்தான் உள்ளது. ஆகாயத்தில் மனம் பதிவுண்டபோது தூங்குபவன்போலத் தேகதர்மம் விடுபடும். அப்போது உடலாலான துன்ப மயமாய வெப்பம் மறந்துவிடும்.

இந்திரிய மயக்கம் உள்ள வரையில் பிறவியின் சங்கிலிப் பிணைப்பு உண்டு. இந்திரியங்கள் தொழிலற்றபோது பிறவியின் எல்லையும் முடிவுறும். அதனால் 'எந்தம் பிறவியில் கோபம் மிகுத்து' என்றார். நீ பிறந்தது போதும். பல பிறவி எடுத்து வருந்தி விட்டாய். இனிமேல் பிறக்க வேண்டாம் என்றபடி. இந்திரியங்களின் வழிச் செல்லும் மனத்தைக் கட்டும் இடம் ஒன்று வேண்டும். அதுவே 'மாப்பெருங் கருணையின் முழங்கி முரசு எறிந்து' எனப்பட்டது. இதைத் திருவடி பற்றல், நாதசம்மியம், திருச்சிலம்போசை வழிநிற்றல் எனப் பலவாறாகக் கூறுவர். இதைப் பரையோகம், பரைபோகம், பரையில் அதீதம் என்றும் கூறுவர். நாதசம்மியத்தால் அகப்பார்வையில் மனம் பதிவதைப் பக்தர்கள் சிவபூசையில் சிரசின்மேல் கையை விரித்தும் குவித்தும் துவாதசாந்த வெளியில் வைப்பதுபோல் விளங்குவதில் அங்கு ஒரு பச்சை ஒளி தோன்றும்.

காந்தள் - கார்த்திகைப் பூ. இது மஞ்சளும் பச்சையும் கலந்த ஒளியாக விளங்கும்.

இந்த நிலையில் கடைக் கண்களில் நீர் துளிக்கும். இது அன்பின் அறிகுறி. இவ்விதம் பொருந்தும்போது மூலாதாரத்தில் காம வாயுவான செவ்வொளி சிரசைச் சூழ்ந்தும் அதன் மேலும் சென்று விளங்குவதில் ஆறு ஆதார பத்மங்களில் பிரவாக மெல்லாம் சுழுமுனா நாடியில் பொருந்தி ஏக வொளியாய் விளங்கிற்று.

அறுவகைச் சமயங்களும் தேகத்தில் விளங்கும் இறைவனையுணர்த்தாது புறத்திலுள்ளவைகளையே விளக்கின. அதனால் அவை பலதரப்பட்ட கொள்கை யுடையவையாயின. ஞானம் விரும்புவோர் கோட்பாடு களைத் தொடர்ந்து ஞான வேட்கையைத் தணியப் பெறாதவராயின் அது எதுபோலும் எனின், கானல் நீரைத் தொடர்ந்து சென்ற மான் கூட்டம் தாகந் தணியாது சோர்வினை அடைந்ததுபோல் என்றார்.

பூதமொடு பழகிவள ரிந்திரியமாம் பேய்கள்
புந்திமுத லான பேய்கள்
போராடு கோபாதி ராட்சசப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தான் இவ் வல்ல லெல்லாம்
வீழும்படிக் குனதுமௌன மந்திராதிக்ய
வித்தையை வியந் தருள்வையோ
நாத வடிவாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரும் மேகமே
ஞான வானந்த மயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
மகிமைபெறு பெரிய பொருளே
வரைராசனுக் கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்கா தலிப்பெண் ணுமையே.

— தாயுமானவர் பாடல்

வட்டமிட் டொளிர் பிராண வாயுவெனும்
நிகளமொடு கமனஞ் செயும்
மனமெனும் பெரிய மத்தயா னையைஎன்
வசமாக் கிடின்மும் மண்டலத்
திட்ட முற்றவள ராச யோகமிவன்
யோக மென்றறிஞர் புகழவே
ஏழையே னுலகில் நீடுவாழ்வன்
இனிஇங் கிதற்கு அனுமானமோ
பட்ட வர்த்தனர் பராவு சக்கரதர
பாக்ய மானசுக யோகமும்
பார காவிய கவித்துவ நான்மறை
பராயணஞ் செய்மதி யூகமும்
அட்ட சித்தியும் நல்அன்பருக் கருள
விருது கட்டியபொன் அன்னமே
அண்டகோடி புகழ்காவை வாழும்அகி
லாண்ட நாயகியென் அம்மையே.

— *தாயுமானவர் பாடல்*

**ஆயிடை வானப் பேரியாற் றகவயிற்**
**பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்**
**சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்**
**தூழூழ் ஓங்கிய நங்கள்**
**இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்**
**துருவ அருள்நீர் ஓட்டா வருவரைச்**
**சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்**
**வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்**
**மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்**
**மீக்கொள மேன்மேல் மகிழ்தலின் நோக்கி**
**அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்**
**தொண்ட உழவர் ஆரத் தந்த**
**அண்டத் தரும்பெறல் மேகன் வாழ்க:**

*அவ்விடத்து (ஊர்த்துவ சகஸ்ரதளத்தில்) அந்த ஆகாய வீதியில் அமைந்த இரைச்சலுடன் கூடிய ஆற்றினுள்ளிடத்து, பேரின்பமாகிய சுழல்கள் மிகுத்து*

விளங்கவும், அதனால் பந்தத்தைச் செய்யும் எல்லையாகிய கரைகளின்மீது மோதி மோதிச் சிறிது சிறிதாக அடிப்பாகம் ஆற்றில் விழவும், அதன்மீது வளர்ந்திருந்த பெரிய வினையாகிய மாமரம் வேருடன் அவ்வாற்றில் விழவும், உணர்வு நீர் ஓட்டம்போல ஊடுருவி மெல்ல மெல்லத் தொண்டராகிய உழவர் அருமையான பிரவாகத்தில் விளங்கும் நாதத்தொனியில் ஒருமுகப்படுத்தி நிறுத்தத் தேன் துளிக்கும் வாசனைபோன்ற சகஸ்ரதளமாகிய ஞானத்தை நிரப்பி நிறைந்த அகிற்புகை மேலே செல்லுவது போன்ற ஒளியில் அமையும் வண்டுகளின் ரீங்காரத்துடன் மேலும் மேலும் உயரச் சென்றால் ஏற்படும் மகிழ்ச்சியில் வழிபாடு என்னும் வயலுள் அன்பு என்னும் வித்தினையிட்டுச் சிவபோகமாகிய விளைவைத் துய்க்குமாறு உதவிய மேகம்போன்று சீவர்களைக் காக்கும் சிவம் வாழ்க.

அவ்வயின் அவ்விடத்து, அதாவது முன்னர்க் கூறிய 'கருமா முகிலிற் றோன்றிக் கேதக்குட்டம் கையற ஓங்கி' என்பதளவில் கண்ட ஊர்த்துவ சகஸ்ரதளம் உருப்பெறுவதில்.

வானப் பேரியாறு - ஆகாயத்து இரைச்சலோடு கூடிய அனுபவப் பிரணவம். நீர் - தொனிப் பிரணவத்தின் இயல்பான இரைச்சல்.

அகவயின் - உட்புறத்தின், மனத்தினிடையில், உபமானம். ஒரு வெள்ளம் பாயும் ஆறு அதன் வேகம் காரணமாகப் பல சுழல்களோடுகூடிய ஆற்றின் கரைகளில் அளவுக்கு மேல் உயர்ந்து கரைகளை மோதிக்கொண்டு போவதில், அணைபோன்ற ஆற்றங்கரையின் அடிப்பாகம் ஆற்று வெள்ளத்தால் அரிக்கப்பட்டுக் கரையின் மேலே உள்ள பெரிய மரம் ஆற்றில் விழவும் அம்மரத்தையும் ஆறு அடித்துக் கொண்டு செல்லுகிறது. நிலையாக இருந்த மரம் ஆற்றோட்டத்தில் நிலைகுலைந்து போயிற்று.

உவமேயம்:

1. ஊர்த்துவ சகஸ்ர தளத்தில் அமையும் உணர்வு - வெள்ளம் கொண்ட ஆறு.

2. நல்வினை தீவினை - மரம்.

3. வினையின் தளை - ஆற்றங்கரை.

4. அருள் நீர் ஒட்டா அருவரைச் சந்து - ஆறாதாரங்களையும் கடந்து விளங்கும் ஊர்த்துவ சகஸ்ர தளத்தில் பொருந்திய உணர்வு.

நல்வினையின் பயன் நல்ல சூழ்நிலையில் பிறவி அமைதல். தீவினையின் பயன் கெட்ட சூழ்நிலையில் பிறவி அமைதல். இவை இரண்டினாலும் பிறவி அறாது. மனம் பிரணவத்தின் விந்து நாதங்களில் பதிவுற்றால் சிருஷ்டிக்குக் காரணமான பூதாகாயம், குணமய ஆகாயம் கெட்டுக் குணரகித ஆகாயம் எஞ்சுவதில் சூரியாகாயம் சிதாகாயம் பொருந்துவதில் பிரணவதேகம் உருப்பெறும். குணகஞ்சுகத்தின் ஆற்றல் கெட்டபோது தேகப் பற்றுவிடும். தேகப் பற்று விட்டவர் நல்வினையின் பயனையும் தீவினையின் பயனையும் அனுபவிக்க வேண்டிய நியதியைக் கடந்து விடுவர்.

பிரணவத்தை 'மட்டு அவிழ்வெறி மலர்க்குளம் வாய்க்கோலி' என்று உவமித்துள்ளார். தேன் துளிக்கும் வாசனையுடைய புஷ்பத்தில் தேன் வண்டுகள் மொய்த்து ரீங்காரத் தொனியை எழுப்பிக் கொண்டிருக்கும். அதுபோல அகில் புகை மேலே செல்லுவது போன்ற உணர்வு காண்பதே சீவனின் பாசநிலையில் உள்ள ஆன்ம ரூபமாகும். பிரணவத் தொனியில் மனத்தை நிறுத்துவது பரையோகம், பரை போகமாகும். இப்பரையின் அதீதத்தில் சிவம் விளங்கும் என்பதை,

> மீக்கொள மேன்மேல் மகிழ்தலி னோக்கி
> அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
> தொண்ட ருழவ ராரத் தந்த
> அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க.

என்றார்.

அருச்சனை - பூசை, ஆராதனை செய்தல்
வயலுள் - பிரணவத்தில்
அன்புவித்து - மனம் பதிதல்
தொண்டர் - சிவத்துக்கு அடிமையானவர்
உழவர் - பூமியைத் திருத்துபவர்
ஆரத்தந்த - அனுபவிக்கும்படி தன்னைத் தந்த

அண்டத்து அரும்பெறல் மேகன் - ஆகாயமய மாக விளங்கும் சிவன், மேகம் போல் ஜீவர்களுக்கு உதவுபவன்.

பிரணவத்தில் மனம் புதையுண்டு தற்போது. மற்றவர்க்குச் சிவம் தன்னைத் தந்து அவர்களை உய்விப்பன் என்றபடி.

அன்றலர்ந்த பூவின்மது நிறைய வாரி
ஆவலுடன் உண்டவண்டு பூவை அலையாமல்
நின்றதிலே உறைகின்றோம் என்பதற மயங்கும்
நெறிபோலப் போத விகாரங்கள் நீங்கிச்
சென்று தெளிவுற்று உன்வசமற் றுந்தப்பெற்று
சேர்ந்தபோ துனைவிழுங்கும் திரும்பவிடாதிதுவே
நின்றபர மானந்த மேலீடாம் இந்த
நிலைநின்றார் சாயுச்சிய நிலையி னாரே.

— சித்தாந்தசாரம்

**கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க**
**அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க**
**அச்சம் தவிர்த்த சேவகன் வாழ்க**
**நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க**
**சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க**
**எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க**
**கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க**
**பேரமைத் தோளி காதலன் வாழ்க**
**ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க**
**காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க:**

1. கரிய படத்தையுடைய நாகத்தை இடையில் அணிந்துள்ள சிவம் வாழ்க. சிவம் யாதொரு உருவ மும்

இல்லாதவர். பாம்பு மண்டலமிட்டுக் கொண்டும் வேண்டும்போது நீண்டும் விளங்கும் ஆற்றலுடையது. இந்த உருவகம் குண்டலினி சத்தியைக் குறிப்பது. குண்டலினி பாம்புபோல் மூலாதாரத்தில் சுருண்டு கிடப்பது. அதன் இயல்பு யோக சத்தியால் அதை மேலெழச் செய்வதில் தேகத்தையும் தேகியையும் காணும் ஆற்றல் கிட்டும். தேகியை வேறாகக் காண்பவர் குணகஞ்சுகத்தைக் கடந்தவராவர். அத்தகைய குண்டலினி சத்தியைத் தனது இடையில் கச்சைபோல் அணிந்துள்ள தலைவன் வாழ்க.

கச்சை - இடுப்பில் வரிந்து கட்டும் பட்டை போன்றது.

2. அரிய தவத்தினருக்கு அருளுகின்ற முதல்வன் வாழ்க.

3. பிறவியின் அச்சத்தைத் தவிர்த்த வீரன் வாழ்க.

4. நாள்தோறும் தன்மீது அன்பு கொண்ட பக்தனைத் தன்பால் ஈர்த்துத் தனது சத்தியைப் பதிப்பித்துத் தன்னடியானாக்கிக் கொள்வோன் வாழ்க. நாடொறும் அருக்கனிற் சோதியமைத்தோன் வாழ்க.

5. தன்னடியார்க்கு ஏற்படும் பெருந்துன்பத்தை அகற்றுவோன் வாழ்க.

6. தன்னை அடைந்தவர்க்கு அரிய அமுதத்தை அளிப்போன் வாழ்க. ஆர் அமுது என்றால் இருட்டை அகற்றும் ஒளி.

7. மிகுந்த இருளான அஞ்ஞானத்தில் ஜீவர்கள் இருக்கும்போதும் அதை மாற்றும் வண்ணம் ஒளியுருவில் நடிக்கும் சிவன் வாழ்க.

8. பேரமைத் தோளி என்றால் பெருந்தோளையுடைய உமாதேவியைக் குறிக்கும். உமாதேவியின் காதலன் வாழ்க.

தோளுக்குமேல் விளங்குவது சந்திர மண்டலமாகும். அதன் தலைவி சித்தொளியான உமாதேவியேயாகும். அவ்வொளியில் அறிவாய் விளங்குவது சிவம்.

இவ்வொளியும் அறிவும் பிரிக்க முடியாதவையாதல் பற்றிக் 'காதலன்' எனக் கூறப்பட்டது.

9. ஏதிலார் - அயலார். தன்னைக் கருதாதவர்க்கு அவனும் அயலான் போல உதவாது, ஒதுங்கி நிற்கும் எம் தலைவன் வாழ்க.

ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே.

— சிவபுராணம்

10. அன்பர்க்கு இளைத்த காலத்தில் சேமநிதிபோல் உதவுவோன் வாழ்க.

எய்ப்பு - இளைத்த காலம்
வைப்பு - சேமித்த பொருள்.

உடல் நல்நிலையிலுள்ளபோது நினைத்தவர்க்கு, நிலை குறைந்தபோது சேமித்து வைத்த பொருள் போலுதவுபவன்.

நச்சரவு ஆட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதம் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனால் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவின் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்த மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்.

1. நஞ்சையுடைய நாகத்தை ஆட்டிய சிவமே போற்றி. வீரிய இழப்பை, நஞ்சு என்பது பரிபாஷை. குண்டலினியாகிய சத்தி மூலாதாரத்திலிருந்து காமத்தைத் தூண்டி வீரியத்தை இழக்கச் செய்தல் அதன் இயல்பு. அத்தகைய குண்டலினியைத் தனது நிலையிலிருந்து மேல் வரும்படிச் செய்தவன் சிவமேயாகும். நம்பன் - சிவன், நம்பத் தகுந்தவன். குண்டலினியின் நிலை பெயர்ந்த பிறகு அதன் நச்சுத் தன்மையும் கெட்டொழியும்.

2. பிச்சு - பைத்தியம். எம்மைத் தனது அருட் பித்தேற்றின பெரியவனுக்கு வணக்கம்.

பித்த னென்றெனை யுலகவர் பகர்வதோர்
காரண மிதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் திருவருள் கூடிடும்
உபாயம தறியாமே
செத்துப் போய்அரு நரகிடை வீழ்வதற்
கொருப்படு கின்றேனை
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. — அதிசயப்பத்து

10. நீற்றொளியினோடு தோன்றும் வல்லவனுக்கு வணக்கம்.

நீற்றொளி - சித்சத்தி
அதில் உள்ள அறிவு சிவன்.

4. நான்கு திக்கிலும் நடப்பனவற்றை நடத்தியும், கிடப்பனவற்றைக் கிடத்தியும், நிற்பனவற்றை நிற்கச் செய்தும், சொல்லளவையைக் கடந்த பழைமையானவன். மிருகம், மனிதர், தேவர், அசுரர் முதலான வர்களை நடத்திச் செல்பவனும் அவன், ஊர்வனவற்றை நடத்திச் செல்பவனும் அவன், நிலையாக நிற்கும் மரம் செடிகளை நிலைபெறும்படிச் செய்பவனும் அவன் என்றால் யாவரையும் இயக்கிக் கொண்டிருக்கும் கூத்தன் சிவமேயாகும். 'தில்லை மூதூராடி' என்ற வாக்கியத்தாலறிக. 'சொல், பதம் கடந்த தொல்லோன்'

என்பது முன்னமே வந்துள்ளது. அதே கருத்துத்தான் இங்கும் கொள்ளத்தக்கது. சொல் பதம் என்பவை பொருளில் ஒரு பொருளுடையவையேதான். அங்கு எல்லாப் பொருள்களையும் இயக்கும் சத்தியைச் சொல் என்ற பிரணவத்தால் குறிப்பிடப்படுகிறது. வெவ்வேறு சத்திகளாகக் கொண்டபோது பலவேறு பதமுடைய மந்திரங்கள் அமைகின்றன. பிரணவ சத்தியும் நாதமய மானதுதான். மற்றச் சத்திகளும் நாதமய மானவைகள்தான். நாதங்கடந்து நாதாந்தத்தில் விளங்கும் சிவத்தை நாதத்தின் எல்லையில் உள்ள சொற்கள் விளக்கமாட்டா.

பூதமுதல் நாதம்வரை பொய்யென்ற மெய்யரெல்லாம்
காதலித்த இன்பக்கடலே பராபரமே. — *தாயுமானவர்*

5. உணர்ச்சி வசப்பட்ட பக்திக் காண்டிக்கு அறிந்து கொள்ள முடியாதவன். கண் முதலான புறக் கருவியால் கண்டனுபவிக்க முடியாதவன். தனது அசைவற்ற நிலை யிலிருந்து ஆகாயம் முதலாய பூதங்களைப் படைத்தவன். மலரின் மணம் நிறைந்து பொருந்திய பெருந்தன்மையை இப்பொழுது எனக்கு எளிதாக வந்தருள, அழிகின்ற இவ்வுடம்பை ஒழியப் பண்ணின சிறந்த பொருளானவன். இன்று எனக்கு எளியவனாய் என்னுள்ளத்தில் வீற்றிருப் பவனாகிய அவனுக்கு வணக்கம்.

உருவ வழிபாட்டினர் உணர்ச்சிவயப்பட்டவர். குணகஞ்சுகம் சத்துவமயமாக உள்ளதே தவிர குண ரகிதமாகவில்லை. பக்திகாண்டிகள் ஆடல் பாடல் களில் அறிவிழந்த ஒரு நிலையை அடைவதால் காண முடியாதவன் என்றார். அதை விளக்கவே கண்முதற் புலனாற் காட்சியுமில்லோன் என்றார். பக்தி காண்டிகள், புறக்கண்ணால் உருவெளித் தோற்றத்திலும், புறச் செவிக்குப் புலப்படும் நாதவோசைகளிலும் மகிழ்வ துண்டு. இவைகளில் மயக்கம் விடுபட இம்முறைகளால் காண முடியாதவன் என்றார். அவன் மேல் கீழ் பக்கம் என்று பேதம் இன்றி விளங்குபவன். முன்னர்க் குண்டலினி தேவனாகக் கீழேயிருந்தவனே மேலே வந்தருளியவன்.

மேலே வந்து விளங்கிய போது அண்டாகாயம் முற்றிலும் ஒளிபெறச் செய்து தேகம் தானல்லன், தான் ஓர் ஆகாயமயன் என்று அறியும்படிச் செய்தது சிவமேயாகும். இது நல்வினையால் ஈட்டிய பொருளாதல்பற்றி 'ஒண் பொருள்' எனப்பட்டது.

இந்நிலை கைவரப் பெற்றதை 'இன்று' என்றார். அதாவது இப்பொழுது சிவத்துடன் பொருந்தி அனுபவிக்கும் தகுதியான அன்புள்ளம் என்ற விஞ்ஞான மயகோசத்தை அமைத்தனர்.

அளி - அன்பு.

ஒளியுடல் இல்லாமலே சிவத்துடன் கலந்து நிற்பது முடியாததாகும்.

ஒளியுடல் பெற்றவர் ஒளியுடலில் சிவம் கலப்பது எளிது.

பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும்
 பொழுகிய பொய்க்கூரை
இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
 சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க வயிரத்த
 பவளத்தின் முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
 அதிசயங் கண்டாமே.

நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை
 குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து
 நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத்
 தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
 அதிசயங் கண்டாமே.

— அதிசயப்பத்து, திருவாசகம்

6. விஞ்ஞானமயகோசம் குணமய ஆகாயத்தைக் கடந்து விளங்குவது. ஊற்றிலிருந்து நீர் பிரவகித்து ஊறுதல்போல நினைத்த மாத்திரத்தில் பிரதி உத்தரமாக சிவம் விளங்கிச் சீவனைத் திளைக்கச் செய்வன். இவ்விதமாக மகிழச் செய்யும் சிவனுக்கு வணக்கம்.

7. தாங்க வொண்ணாத இன்பவெள்ளம் பரவிக் கடலில் அலை மோதுதல்போல வீச, அதனை ஏற்றுப் போற்றாத உடம்பைத் தாங்குதலை விரும்பேன்.

## சிவ சொரூப தரிசனம்

ஓதும் மயிர்க்கால் தொறும்அமு தூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்த
மாதி சொரூபங்கள் மூன்றகன் றப்பாலை
வேதம் ஓதும் சொரூபிதன் மேன்மையே. 2856

உணர்வும் அவனே உயிரு அவனே
புணரும் அவனே புலவி யவனே
இணரும் அவன்தன்னை யெண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. 2857

துன்னிநின் றான்தன்னை யுன்னிமுன் னாவிரு
முன்னி யவர்தங் குறையை முடித்திடும்
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியுள் நின்றதோர் தேற்றத் தனாமே. 2858

மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்
தன்னுற்ற சோதி தலைவன் இணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியும்
என்னுற் றறிவனான் என்விழித் தானே. 2859

சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத்தி லில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியே. 2860

பரனல்ல நீடும் பராபர னல்ல
உரனல்ல மீதுணர் ஒண்சுட ரல்ல

தரனல்ல தானவை யாயல்ல வாகும்
அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே. 2861

முத்தியும் சித்தியும் முற்றிய ஞானத்தோன்
பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா
சத்தியுள் நின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்
சுத்தி யகன்றோர் சுகானந்த போதரே. 2862

துரிய அதீதஞ் சொல்லறும் பாழாம்
அரிய துரியம் அதீதம் புரியில்
விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன்
உருவுந் திரியும் உரைப்பதெவ் வாறே. 2863

**மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்**
**மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்**
**திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்:**

*சாதகனது துவாத சாந்த வெளியில் பச்சை நிறம் மிகுத்தும் செந்நிற ஒளி மின்னிட்டும் பொன்னொளி யுடன் கூடி விளங்கும். இதை நான்கு முகங்களுடன் கூடிய பிரமன் அன்ன வாகனத்தில் பறந்தும் காணக் கிட்டாதவன். பிரமன் என்பது பிர்மதத்துவக் கூறாகிய தேக தர்மம் நினைப்புள்ள வரையில் காண முடியாதவன் என்று பொருள்.*

*மரகதம் - பச்சை*
*குவாஅல் - குவியல்*
*மாமணி - சிவப்புக்கல்*
*பிறக்கம் - ஒளி.*

*பச்சை ஒளி சத்தியையும், செவ்வொளி சிவத்தையும் மஞ்சள் ஒளி சீவனின் ஒளியையும் உணர்த்தும்.*

**முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்:**

*முறைப்படி ஆக்ஞா சக்கரத்தைக் குருவினால் தொட்டு உணர்த்தப்பட்ட சாதகர்க்கு ஒளித்தும்.*

*உளி - இடம்.*

குரு சீடனுக்குப் புருவ மத்தியைத் தனது பெரு விரலால் ஒற்றி விழிக்கச் செய்வர். அவ்விதம் தீக்ஷை பெற்றவர்க்கும் சிவம் காணப்படாதவன். இது வைதிக தீக்ஷையாகும். தாந்திரிக தீக்ஷை இதனிலும் வேறுபட்டது. அதைப் பின்னர் மணிவாசகர் கூறுகிறார்.

**ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்**
**துற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்:**

மனத்தை ஒருமுகமாக்கித் தனது உள்ளத்தில் பொருந்தித் தேகத்தை வருத்தி உறைப்புண்டு நிற்பவர்க்கு ஒளித்தும்.

இது வைராக்கியத்தினால் அடையக்கூடும் என்ற எண்ணத்தினால் மனத்தை ஆகாய வெளியில் பார்த்திருத்தலில் தேகவருத்தம் உண்டாகுமே தவிர அவன் வெளிப்படான். அருளினால் ஒளி புகுதல் அமைய வேண்டுமே தவிர அவன் எண்ணத்தினால் மாத்திரம் நடைபெறுவதில்லை.

**மறைத்திறன் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்:**

வேதம் நீ நினைத்த வண்ணம் ஆகிறாய் என்று அறுதியிட்டுள்ளது (தத்துவமசி).

அவ்விதம் வேதாந்தம் கூறும் அறிவின் முடிவானவைகளை ஆராய்ந்து பார்த்தவர் அறிவுக்கு ஒளித்தும்.

**இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்கு**
**அத்தந் திரத்தி னவ்வயி னொளித்தும்:**

தந்திர சாஸ்திரம் என்பது ஆகம நூலைக் குறிக்கும். இன்ன வகையில் இவ்விதப் பூசை செய்யில் காமியப்பலம் இன்ன இன்னவை கிட்டும் என்று கூறும். அதன்படி செய்தார்க்கு அவர்கள் செய்ததில் ஏதோ தவறுதல் என்று எண்ணுமாறு ஒளித்தும். அவ்வயின் - அவ்விடத்தே.

**முனிவர நோக்கி நனிவரக் கௌவி**
**ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து**
**வாணுதற் பெண்ணென ஒளித்தும்:**

இது காமவித்தையினால் கடவுளை அடையலாம் என்ற வாம தந்திரத்தைப் பற்றிக் கூறியதாகும்.

ஸ்திரீயுடன் வெறுத்தலின்றிப் பொருந்தி மிகவும் விருப்பங் கொண்டணைத்துப் பழகுவதில் ஆணாகப் பிறந்தவன் ஆணின் இயல்பு கெட்டுப் பெண் போன்ற மென்மை பெற்றவர்க்கு ஒளித்தும்.

முனிவற - வெறுத்தலின்றி
கௌவி - கடித்து, பற்றி
வாணுதல் - ஒளிபொருந்திய நெற்றி

அலியெனப் பெயர்ந்து - ஆண் மாற்றம் பெண் தன்மையும் கொண்ட நிலை.

**சேண்வயின்**
**ஐம்புலன் செலவிடுத்து அருவரை தொறும்போய்த்**
**துற்றவை துறந்த வெற்றுயிர் ஆக்கை**
**அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும்:**

இது ஹடயோகத்தைப் பற்றியது.

பிராணாயாம சாதனையால் ஐம்புலனறிவைத் தூரத்தில் செல்லும்படி விடுத்து அரிய மலையை அடைந்து விரும்பி அனுபவித்தவைகளையெல்லாம் வைராக்கியத்தால் விட்டு உயிர் தரிக்கும்படிக் காயக்கிலேசம் பண்ணி நிற்கும் அரிய தவத்தினர் அக்காட்சியில் புலப்படாது செம்மையாக ஒளித்தும்.

துற்றவை துறந்த - பொருந்தின பற்றுகளை விலக்கிய.

வெற்றுயிர் ஆக்கை - உபாய உணவு கொண்டு தேகம் நிலைபெறும்படி வாழ்தல்.

**ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்:**

ஈசுவரன் ஒருவன் உண்டு என்பது ஆஸ்திகம். ஈசுவரன் என்று ஒன்று இல்லை, மனிதனின் சங்கல்பமே திடமான போது எதையும் முடிக்கலாம் என்பது நாஸ்திகம்.

உண்டு என்றவர்க்கும் அகப்படாதவன், இல்லை என்றவரையும் தண்டிக்காமல் அவர்கள் போக்கில் விட்டு ஒளித்திருப்பவன்.

**பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்**
**ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்**
**ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்**
**தாள்தளை யிடுமின்**
**சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்:**

பழைமையில் முன்னே பல சாதனங்களிலும் வெளிப்படாதிருந்தவன் இன்று செய்யும் சாதனங் களிலும் வெளிப்படாதிருந்த கள்ளனைக் கண்டு கொண்டோம். நாண்போன்ற இரு நேத்திரப் பார்வையை ஒருங்கிணைத்து அவனைக் காண ஆசைப்படுங்கள். அவனது திருவடியாகிய கண் களைக் கட்டுங்கள். பார்வையைச் சுற்றுங்கள். அவ்வொளியைத் தன்னைச் சுற்றிப் பரவச் செய்யுங் கள். அவ்வொளியைப் பற்றிக் கொள்ளுங்கள்; விடாதீர்கள்.

காணும் உபாயம் தெளிவாக்கின இடம் இதுவாகும். எனினும் சம்பிரதாய அறிவாகையால் ஒரு குரு காட்ட விளங்கும்.

எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதினைக் கண்டறி வாரில்லை
உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினாற்
கண்ணாடி போலக் கலந்து நின்றானே.

— திருமந்திரம் 603

நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ்
சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே.

— திருமந்திரம் 2770

**போற்றிஎன் வாழ்முத லாகிய பொருளே**
**புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்**
**டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்**
**எழில்நகை கண்டுநின் திருவடி தொழுகோம்**
**சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்**
**திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே**
**ஏற்றுயர் கொடியுடை யாய்எமை யுடையாய்**
**எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே.**

*— திருப்பள்ளி எழுச்சி*

**சாத்திரங்கள் எல்லாம் தடுமாற்றம் சொல்வதன்றி**
**நேத்திரங்கள் போல்காட்டா நேராக - நேத்திரங்கள்**
**சிற்றம் பலவன் திருவருட்சீர் வண்ணமென்றே**
**உற்றிங் கறிந்தேன் உவந்து.**

*— இராமலிங்க சுவாமிகள்*

*இதுவே நடராச வித்தை. ஹ்ருதய வழிபாட்டில் உள்ள கிரியை பற்றியவர். நடராசர் திருவுருவை ஹ்ருதயத்தில் நினைத்து வழிபடுபவர். அக்ஷிமார்க்கத்தினர் கண்ணைக் கொண்டு வழிபடுவர். இதற்கும் நடராசர் திருவருளுக்கும் சம்பந்தம் உண்டு. சீவன் ஒளியுருவாயினும் அஞ்ஞான வயப்பட்டவனாய் இருளில் உள்ளான். சீவனின் ஒளிஞானம் கட்புலனில் பொருந்தியே உலகைக் காண்கிறது. அவ்விதம் கூத்தப் பெருமான் திருக்கோலத்தில் உள்ள இடது திருவடியான இடது கண் பார்வையைப் பூவலமாகக் குரு காட்டும் வழியில் செலுத்தில் வலது கண்ணிற்கு மேலே ஒரு ஒளி தோன்றும். அதுவே அகவிருளைப் போக்கும் பரிசாகும். இந்தைத்தான் 'நாண்மலர்ப் பிணையலில் தாள்தளை யிடுமின்' என்றார். இவ்வொளியில் ஆசை வையுங்கள் என்று இருமுறை கூறினார். அவ்வொளியைச் சுற்றி நடத்தும் உபாயமும் குரு காண்பிப்பார். அவ்வொளியே இடது கண்ணுக்கு மேலே ஈசான மூர்த்தியாக உத்தரகோசமங்கைப் பகுதியில் வெளிப்படும். இந்நிலையில் வலமிருந்த சூரியனும், இடமிருந்த சந்திரனும் பிடரிக் கண்ணில் விளங்கிய அக்கினியும் ஒன்றாக விளங்கிச் சிரசின்மேல் ஒளி*

விளங்கும். திருவாசகம் அற்புதப் பத்துப் பார்க்க விளங்கும்.

இவ்வுண்மையை அறியாது இறைவனை எழுப்ப விடியற்காலம் திருப்பள்ளி எழுச்சி ஓதுகின்றனர். சீவர்களிடம் இருளில் விளங்கும் சிவத்தை எழுப்பக் கூறிய உபாயம் இதுவாகும். இது சமயவாதிகள் அறியாத மயக்கம், புராண நம்பிக்கையால் விளைந்தது. கூத்தன் எல்லாவுயிர்களிலும் நடிப்பதை அறிவதே சிவயோகம்.

திருவடி ஞானம் கிட்டிய பிறகு ஒளியும் நாதமும் கிட்டும். சாதனையால் பெறுவதே கல்வி. படிப்பால் வருவதல்ல.

ஊச லாட்டுமிவ் வுடலுயி ராகிய
இருவினை அறுத்தென்னை
ஓசை யாலுணர் வார்க்குணர் வரியவன்
உணர்வுதந் தொளியாக்கிப்
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன்
பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய
அற்புதம் அறியேனே. — அற்புதப் பத்து

சிவயோகம் என்பது தேகத்தில் உள்ள சோம சூரியாக்கினிகளை அறிந்து அவைகளை ஒன்றுபடுத்து வதில் உள்ள ஒளி மண்டலத்தில் சீவப் பிரக்ஞையைப் பதிவித்தலேயாகும். மணிவாசகர் என்ற பேரின் உட்கருத்து கண்மணிகளால் உண்டாகிய வாசகமே திருவாசகம் ஆகும். அதன் வாச்சியப் பொருள் ஆகாய மண்டலத்தில் விளங்கும் அகண்டத்தில் உள்ள சிவசத்தியேயாகும்.

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
வந்தெனை ஆட்கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்

தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.

— திருச்சதகம்

சிவத்திற்குத் தனது யதார்த்த சொரூபம் என்றும் தடத்தம் என்றும் இரு நிலைகள் உண்டு. அதன் யதார்த்த சொரூபம் அகண்டமாகும். சாமானியர் அறிந்துகொள்ள அதன் செயலை உணர்த்தும் சமிக்ஞையால் விளக்கித் தடத்த வடிவங்கண்டனர். அவ்விதமான பல வடிவங்களும் கற்பிக்கப்பட்டவைகளேயாகும். அதன் தத்துவத்தை உணர்ந்தபோது தடத்த சொரூபத்திலாய பலனை அறிவிக்கும். பள்ளி மாணவர்கள் வாய்ப்பாடுகள் பாராயணம் செய்து பழகின பிறகு கணிதம் போட எளிதில் முடியும். அப்பொழுது பாராயணம் இல்லை. அதுபோல் ஞானத்தின் திருவுருவைக் கூத்தப்பிரான் திருவுருவில் பண்டைய சிந்துவெளி நாகரிகம் அளித்த பாக்கியமாகும். அதன் நுட்பத்தை அறியாத மயக்கமே சமயவாதிகளின் புரட்டாகும். சதாசிவர் சிவத்தின் தடத்த உருவம். சதாசிவரின் சத்தியோ ஜாத முகம் என்பது மேற்குத் திக்கில் உள்ள முகமாகும். இதுவே சிறு மூளைப் பகுதி. இந்த முகத்தால் தேகத்தின் கீழ்நோக்கியுள்ள கைமூலம் கால்மூலங்களையும் இரு புஜங்களையும் சிரசின் முன்புறத்தையும் பின்புறத்தையும் ஆளுவதாய் ஆகமம் கூறும். இந்த எட்டுறுப்பையும் கடந்தால் தேகதத்துவம் கடந்ததாகும். இவ்வெட்டுறுப்புகளாக உள்ளதும், இவ்வெட்டுறுப்புகளை விட்டு நிற்பதும், சீவனாகும். இதை ஆகம பாஷையில் அமூர்த்தி சாதாக்கியம் என்று சதாசிவ ரூபம் கூறுகின்றது. இதை அமூர்த்தி சதாக்கிய லிங்கம் என்பர். இதில்தான் சீவர்களின் சிருஷ்டியும் ஒடுக்கமும் நடைபெறுகிறது. சிருஷ்டியில் வந்துள்ள மனிதன் ஒடுக்கத்தின் ரகசியத்தை அறிவதே ஞானம்.

இந்த அமூர்த்தி சாதாக்கியம்தான், பிரமனாதி ஐவர்க்கும், சிவத்தின் ஒன்பது பேதங்களுக்கும் இடமாகும். யாதொரு உருவத்தையும் பற்றாத அண்டா காயம் உருவம் பற்றும்போது இடா, பிங்கலா என்ற இரு

நாடியைக் கொண்டு தேகத்தில் அக்கினி மண்டலம், சூரிய மண்டலம் சந்திர மண்டலம் என்ற மூன்று ஒளி மண்டலங்களை அமைக்கின்றது. இடாநாடி பிங்கலாநாடி காற் பெருவிரலிலிருந்து தொடங்கி மூன்று இடங்களில் மாறி இறுதியாகச் சிரசை வந்தடைகின்றன. முதல் பின்னல் குறித்தானமாகும். இரண்டாவது பின்னல் இருதயமாகும். மூன்றாவது பின்னல் நெற்றியாகும். இங்கு இடா நாடி இடது கண்ணிலும், பிங்கலா நாடி வலது கண்ணிலும் இடங்கொண்டு மேலே சென்று ஒன்றுபடுகிறது. இடாநாடியும் பிங்கலா நாடியும் கூத்தப்பெருமானின் கால்களால் உணர்த்தப்பட்டன.

ஆடிய காலில் அசைக்கின்ற வாயுவுந்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி யெழுகின்ற வேதா கமங்களும்
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே.

— திருமந்திரம் 2317

ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமும்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. 2760

ஆடியகால் என்பது கூத்தப் பெருமானின் இடது பாதமாகும். ஊன்றிய கால் வலது பாதமாகும். ஓசையுண்டாவது தூக்கிய காலினால்தான். இடது கண் பார்வையை வலதுபுறமாக மேலேற்றி நில் என்பதே திருவடியின் பொருள். இதனால் பெறப்படுவதை கைகளின் குறிகளால் உணர்த்தப்பட்டது காண்போம். இடது கையில் கீழுள்ளது தூக்கிய இடது காலையே சுட்டி நிற்பதாக உள்ளது. இது யானைத் துதிக்கை போன்று உள்ளதால் கஜஹஸ்தம் என்பர். மற்றொரு கை இந்த நிலையில் நிற்பதை அறிந்தால் நீ காப்பாற்றப்படுவை என்ற பொருளுடைய அபய ஹஸ்தமாகும். இதன்மேல் உள்ள இடது கை அக்கினியை ஏந்தியுள்ளது. முன்னர், இடா நாடி காமக் கலையாகத் தொழிற்பட்டபோது மூலவாயுவாக

இருந்தது. காம்த்துக்குக் கீழ்ப்பார்வை இயல்பு. கண் பார்வை மேனோக்கியபோது காமமும் செயலற்றுக் காமாக்கினியே ஆத்ம தேஜஸாக மாறியது என்று பொருள். இதையே விந்து மண்டலம் என்ற பேரால் கூறுவார். இதனுடன் தொடர்பாகவே முன்னோ பின்னோ சிரசில் நாதம் உதிக்கும். நாதம் சிவஞானத்தால் அமைவது பிங்கலா நாடியில் உணர்த்தப்பட்டது. கூத்தப்பெருமான் திருக்கையில் உள்ளது உடுக்கையாகும். கூத்தன் திருமுடியில் உள்ளது ஆகாய கங்கை. இந்த அருளில் சாதகன் திளைப்பான் என்ற கருத்து. இவ்வகையாக அகரகலை உகரகலை என்ற இரு நாடிகளால் அமைந்த பிரணவமே திருவாசி. இது சீவனின் அண்ட கோசமாகும். இதுவே எட்டும் இரண்டும் உருவான இலிங்கமாகும். குண்டலினி மேலேறுவதில் வாயு ஊறுவதுபோன்ற ஓர் உணர்விருப்பதால் தேகமெங்கும் பாம்பை ஆபரணமாகக் காட்டப்பட்டுள்ளது. சந்திரமண்டல உதிப்பு தோளுக்குமேல் அமைவது. இதைச் சோமவட்டம் என்பர். சந்திர தீபம் என்ற பேரால் கூறப்பட்டது. சந்திர தீபத்தின் அறிவை உணர்த்துபவன் சிவமேயாகும். பலர் குப்த வித்தை என்று விஷயத்தை வெளிப்படையாகக் கூறவில்லை. தெளிவாகக் கூறினாலும் உணர்த்தினாலன்றி உணரப்படாத விஷயமாகும்.

கண்களின் மேல் உள்ள புருவங்கள் வில் போன்றன. பார்வை அதில் நாண்போன்றது. லக்ஷியம் மேலே சென்றபோது வில் வளைவுறும். அதனுடன் செல்லும் அறிவே சீவன். அதன் லக்ஷியமே பிர்மம். இதை அறிவதே பிரணவ வித்தை. இந்த மறைபொருள் கொண்டு பிரணவமாகிய வில்லை வளைத்து சீவனாகிய அம்புகொண்டு பிர்ம லக்ஷியத்தை அடைவாயாக என்று வேதம் கூறிற்று.

இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்
இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா வாமே. 2889

## அமூர்த்தி சாதாக்கியம்

சாதாக்கியம் என்ற சொல்லில் சத்தான அறிவும் அசத்தான உருவமும் கலந்தது என்னும் பொருள்படும். அசத்தான உருவச் செயல்பற்றியே 36 தத்துவங்களாயின. எவ்வுருவையும் விட்டபோது சீவனுக்குப் பிரபஞ்ச நோக்கு இல்லை. தான் என்ற ஓர் உருவும் இல்லை. இதன்மேல் விளங்குவது எல்லாம், காரியம் கெட்டுக் காரணமான விந்து நாதங்களே மிஞ்சும். இவற்றில் தொழில்படுவது அகண்டமான சிவசத்திதான். தான் என்ற ஒரு முதல் கெடாத நிலையில் உள்ளபடியால் அமூர்த்தி சாதாக்கியமாயிற்று. இதையடையவே யோகியின் சாதனமெல்லாம். இதன்மேல் உள்ளது தானற்ற சிவ சாதாக்கியமாகும்.

**பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்**
**தன்னே ரில்லோன் றானேயான தன்மை**
**என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி**
**அறைகூவி யாட்கொண் டருளி**
**மறையோர் கோலங் காட்டி யருளலும்:**

முன் விளக்கியவாறு பிடியுங்கள். அவ்விதம் செய்தவர்களின் பற்று முழுதும் ஒழிந்துபோகும் (காணாமற் போகும்). தனக்கு நிகரில்லாதவன் சீவவொளியில் என்னிடம் விளங்கி என்னைப் போன்றவர் அறிவுக்குப் புலப்படும்படி நாதத்தை வெளிப்படுத்தி வலிந்து அழைத்து என்னை அடிமை கொண்டருளி, யாவருக்கும் புலப்படாதவாறு மறைந்திருந்த கோலத்தினின்றும் எனது சீவ அறிவில் தனது இருப்பைக் காட்டியருளலும்.

## தானேயான தன்மை

சீவவொளி உருவம் பற்றியபோது ஒளியற்று இருள் போலவே விளங்கியது. அமூர்த்தி சாதாக்கியம் விளங்கிய போது தானே ஆகாயமயனாய்த் தேகம் தன்னிலும் வேறு என்ற அறிவு உதித்துவிடும். சீவவொளிக்கு அகண்டத் தன்மை அருளியது சிவம். அதில் விளங்கியது சிவசத்தி

யாதல் பற்றித் 'தன்னேரில்லோன் தானேயான தன்மை' என்று கூறப்பட்டது.

தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலன்ஓர்கைம் மாறே. - **கோயில் திருப்பதிகம்**

கேட்க வந்தியம்பி அறைகூவி - சிவம் கட்புல னுக்கு உணர முடியாது. பக்தன் நினைத்தபோது தான் உடனிருந்து உதவுவதை உணர்த்த ஒருவர் வேண்டும். அதுவே தனது வலது காலை அழுத்தியருளல் என்ற பிங்கலாநாடி தொழிற்படத் தொடங்குவது. இதை அறிவாகிய நாதவொலி என்றழைப்பர். சீவனின் அறிவை விழிப்பிக்கச் செய்தலும் லக்ஷணத்தை உணர்த்தலும் டமருகம் ஏந்திய கைக்குறிப்பாகும்.

பாலிக்கும் நெஞ்சம் பறையோசை ஒன்பதில்
ஆலிக்கும் அங்கே அமரர் பராபரன்
மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்குங்
காலைக்குச் சங்கு கதிரவன் தானே. 867

விடாத மனம்பவ னத்தொடு மேவி
நடாவு சிவசங்கின் நாதங் கொளுவிக்
கடாவிடா ஐம்புலன் கட்டுண்ணும் வீடு
படாதன இன்பம் பருகார் அமுதமே.

— **திருமந்திரம் 880**

இதுவே முன்பால் முழங்கும் முரசாகும்.

**உளையா அன்பென் புருக வோலமிட்**
**டலைகடல் திரையின் ஆர்த்தார்த் தோங்கித்**
**தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்**
**பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து**

**நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவுங்**
**கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்**
**ஆற்றே னாகஅவயவஞ் சுவைதரு**
**கோற்றேன் கொண்டு செய்தனன்:**

*உளைத்தல் - உளைப்பு; அழைத்தல் - ஒலிப்பு.*

*நாதவொலி எனது என்பை யுருக்குமாறு அன்பை மேலிடச் செய்து கடலில் அலை மோதுதல்போல் இடையறாது ஆரவாரித்து மேலெழுவதில் புறத்தே செல்லும் மனம் தடுமாறி வீழ்ந்ததுடன் தேகதர்மத்தை மறந்து நின்றது. பித்தம் ஏறினவர்போல் மயக்கமுற்றும், மதங்கொண்டவர்போல் தன்னை மறந்தும், நாட்டவர் இந்நிலையிலுள்ளவரைப் பார்த்து மருட்சியடையவும் கேட்டவர் ஆச்சரியமடையவும், மதங்கொண்ட ஆண் யானை பாகனை மேலேறவிடாது தடை செய்வதுபோன்று என் வசமற்று விளங்கிய இந்திரியங்களை எல்லா அவயவங்களும் இன்புறும் வகையில் மூலாதாரம் முதல் சிரசு வரையில் வியாபித்துள்ள சுழுமுனா நாடியின் வழியாக இன்பத்தைப் பெருக்கி அடக்கியருளினன்.*

**விளக்கம்:**

*நாததத்துவம் என்பது எவ்விதம் தொழிற்படுகிறது என்பதை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் விளக்கியுள்ளார்.*

*1. ஒரு கம்மியன் தனக்கு வேண்டியவாறு ஓர் உலோகத்தை செய்ய அளவிட்டுக் காய்ச்சி, பட்டரையில் அடித்து கம்பி இழுத்துத் தொழிலுக்கேற்ற முறையில் செய்து கொள்ளுகிறான். இதற்கு முதல்நிலை உலைக்கள அக்கினியாகும். அதுபோல சித்தாக்கினி குண்டம் என்ற சிரசில் ஞானாக்கினியால் உண்டாவது நாதவொலியாகும்.*

*2. அவ்வொளியையுடையவன் சீவனாயும் எழுப்பு வோன் சிவமாயும் உள்ளது. அதனால் சீவன் பெண் தன்மைபெற்று ஆணுடன் அணைய விரும்பும் வேட்கை போல் சீவன் விரும்பின போதெல்லாம் சிவம் புணர்கிறது.*

3. புணர்ச்சியில் ஈடுபட்டிருக்கும்போது அவ்வின் பத்தில் சூழ்நிலையை மறத்தல் இயல்பு. அதுபோல் சிதாகாயத்தில் ஓயாது அலை மோதுதலைப்போன்ற கோஷம் அமைவதில் மூலாக்கினி சிரசை நோக்கிப் பாய்ந்து கொண்டிருக்கிறபடியால் கீழுள்ள இன்பசுகம் போல மேலேயும் ஒரு சுகநிலை அமைவதில் தாவுதலை உடைய மனம் ஒருருவப் பற்றும் இல்லாதபடியால் இந்திரியங்களின் தலைவனான மனம் நிலை குலைந்ததுடன் தனது இருப்பையும் மறந்தது. இதை ''எண்ணமிலா அன்பு'' என்று மணிவாசகர் அச்சோப்பத்தில் கூறியுள்ளார்.

அன்பு உள்ளதுதான் தெரிகிறது. ஆனால், அது எண்ணில் இரண்டாய்விடும். அப்படியின்றி மூழ்கி யிருப்பவருக்கு எண்ண வேண்டியது என்னவிருக்கிறது?

அன்றலர்ந்த பூவின்மது நிறைய வாரி
ஆவலுடன் உண்டவண்டு பூவை அலையாமல்
நின்றதிலே யுறைகின்றோம் என்பதற மயங்கும்
நெறிபோலப் போதவிகா ரங்கள் நீங்கிச்
சென்று தெளிவுற்று உன்வசமற் றந்தப் பொருளிற்
சேர்ந்தபோ துனைவிழுங்கும் திரும்பிடா திதுவே
நின்ற பரமானந்த மேலீடாம் இந்த
நிலைநின்றோர் சாயுச்சிய நிலையினரே.

— சித்தாந்தசாரம்

தலைதடுமாறு - மயங்குதல் கிறுகிறுப்பு.

4. அவ்வித மயக்கத்தில் மனம் எண்ண, புத்தி பரிசீலிக்க, ஆங்காரம் விழிப்புடன் செலுத்துதலாதி காரியங்கள் ஒழியவே தேகதர்மம் கெட்டது. அது எதுபோலுமெனில் பித்தம் மேலாடியபோது ஒன்றும் அறியாத கிறுகிறுப்பு உண்டாதல் போலும்.

5. எதிர்பாராத வகையில் வெற்றியோ செல்வமோ கிடைத்தபோது மனிதன் மதக்களிப்பில் இருப்பதாகக் கூறுவர். குடி போதையிலும் அவ்விதமே இறுமாந்திருத்தல் அமையும். இதை ''மத்தரின் மதித்து'' என்றார். இவ்வித நிலை சிவயோகிக்கு அமைந்துவிடும்.

6. இவனது செய்கை பித்தன்போலவும் மத்தன் போலவும் மாறியதில், இவன் ஊரில் உள்ளவர் இவ்விதம் நேரிட்டது யாது காரணமோ என்று ஐயுறுகின்றனர். இந்த நிலை தனக்கு வரவேண்டுமென்று மணிவாசகர் வேண்டுகிறார்.

உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ னென்ன மனநினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவரும்
தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே.

— திருச்சதகம்

7. சிவானந்தம் பெற்று மனம் ஓயப்பெறுமுன், மதங்கொண்ட ஆண் யானை பாகனை ஏறவிடாது தன்னிஷ்டம்போல் திரியும் சுபாவம்போல், மனத்தை இந்திரியங்கள் இழுத்துச் சென்றன. சிவானந்தம் கிட்டிய பின் மனத்தின் நிலையே கெட்டுவிட்டதால் அவ்விந்திரி யங்களும் செயலொழிந்தன. தான் ஓர் உருவத்தையும் சாராதவன் என்ற திடஞானம் உதித்தவரை ஐந்திந்திரி யங்களின் சேட்டை ஒன்றும் செய்யாது.

தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே
அரிக்கின்ற ஐவரை யாரும் உணரார்
சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்
வரிக்கொண்ட மைசூழ் வரையது வாமே.

— திருமந்திரம், 2042

## அவயவஞ் சுவைதரு கோற்றேன்

மனித தேகத்தில் பூதாகாயக் கூறும் குணமயக் கூறும் சிறப்புற அமைந்தே தேக உணர்வுகள் நரம்பினூடே தொழிற்படுகின்றன. நரம்பினூடே செயல்படாத உணர்வுகளும் அந்நரம்புகளைச் சார்ந்துள்ளன. எடுத்த உருவமே என்றும் நிலைபெறும் என்று தேகப் பற்றை விடாத வரையில் அந்நரம்புகளுக்கும் ஊட்ட சத்தி கிடைத்துக்கொண்டிருக்கும். தேகமும், தேக உணர்வும் தானல்ல என்றபோது அவ்வூட்ட சத்தி குறையும்.

வைராக்கியத்தால் தேகத்தை அநித்தியம் என்று மதிக்கும் நிலை ஒன்று; கீழாக இறங்கியுள்ள இயல்பைக் கொண்டு மாற்றி அமைக்கும் உபாயம் ஒன்று. இந்தப் பிந்திய முறையையே ஆகமவாதிகள் அறிவுறுத்தினர். வேத காலத்து ரிஷிகளும் அம்முறையில்தான் வேத அறிவைப் பெற்றுள்ளனர். வேதாந்தத்திற்குக் குருவாகக் கூறும் வியாசர் இல்லற வாழ்க்கையில் வாழ்ந்தவரே. மாபெருந்தவசி விசுவாமித்திரர் இல்லறத்தினரே. யாக்ஞ வல்கியர் இல்வாழ்க்கையிலிருந்தவரே. வேத கால ரிஷிகளும் மனைவியில்லாதவன் யாக காரியங்களுக்குரிய அருகதையைப் படைக்கவில்லை. ஆகம நெறியிலும் மனைவியில்லாதவன் பரார்த்த பூஜைகளுக்குரிய அருகதை பெறான். இவைகளில் உள்ள உண்மையை அறிதலே மனித சமுதாயம் மேலேற ஆகமம் காட்டிய நெறி. உண்மைக்குப் புறம்பான் புராண மயக்கம் வந்து மதிமயங்கச் செய்துவிட்டது. மூலாதாரத்திலுள்ள அதோமுக பத்மம் மிக ஆற்றல் பெற்றது. அதை மாற்றப் பலவந்தமான ஹடயோகப் பயிற்சிகளைக் கையாண்டு கைவிட்டவர் பலர். இயற்கையை மெதுவாக ஜெயிக்கலாம் என்பதே ஆகமவாதிகளின் மதம். அவர்கள் கருத்தை விளக்கச் சங்கேத பாஷையில் உடலுறுப்புக்களையும் சத்திகளையும் வெளியில் யாவரும் அறிந்துய்யுமாறு வைத்தனர். அது கருத்தளவில் பதியாமல் காரிய அளவில் நடைபெறு கின்றது. அதன் உண்மையை எடுத்துச் சொல்லினும் பழைய பழக்கத்தினால் கேட்பதரிது.

வழிபாடு, தினசரி என்பதும் விசேஷம் என்பதும் இருவகையாக உள்ளது. சிவன் கோவிலில் உள்ள நந்தி மனிதனின் நம் தீயான அக்கினி மண்டல உணர்வு. நந்தியின் முகம் வாயிற்புறமானால் அதன் வெளிமுகம் தொழிற்படும். அதைத் தொழிற்பட விடாது சிவம் விளங்கும். அறிவின் நிலையைத் திறம்படும்படி முகத்தை மாற்றிச் சிவத்தை வழிபடு என்ற கருத்தே ஆகும். மூலாதாரச் சக்கரத்திற்கும் மதிப்புக் கொடுக்கவில்லை என்றால் பலிபீடம் நந்தி தேவையில்லை. அவ்வாறு

ஸ்திரீயுடன் இருக்கும்போது சிவநினைவு கொள்வதில் அந்த அந்தச் சக்கரத்தில் இயல்புக் குறிவழி விந்து நீக்கம் செய்வதை விட்டு நேரே சிரசை நோக்கிப் பாயும் ஆற்றல் மறைந்து கிடந்தது விழித்துக் கொள்ளும். இந்த அக்கினியே எமன் நசிகேதுவுக்கு விளக்கிய கடோபநிஷத்தில் இறுதியில் கூறப்பட்டுள்ளது. சிரசிலிருந்து நூறு நாடிகள் கீழ்முகங்கொண்டு வீணாத் தண்டில் விளங்குகின்றன. ஒரு நாடி ஊர்த்துவமுகமாக மேல்நோக்கி ஏறுகிறது. இது தொழிற்பட்டால் அந்நூறு நாடிகளின் திறம் கெட்டொழியும். வீரியம் வெளிப்படும்போது மின்சாரம் பாய்வதுபோல் ஒரு சுகநிலை அமையும். சுழுமுனையின் கதிமாறி அமைக்கப்பட்டால் அவ்விதமே ஒரு பரவச நிலை தொடர்ந்து குண்டலினி உயர உள்ளவரையில் இருக்கும்.

இவ்வுண்மையை வேதகால ரிஷிகள் பிர்மசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்ற நான்கு ஆச்சிரமங்களால் விளக்கி வாழ்ந்து வந்தனர். ஆகமவாதிகள் அவைகளைக் கோயிலில் சுவாமி, அம்மன், உற்சவம் என்றமைத்து அத்தத்துவத்தை விளக்கினர்.

சிறப்பான விழாவில் விந்து கலையை உயர ஏற்று என்பதே நந்தியைச் சிலையில் எழுதி மேலேற்றிக் காட்டப்படுவதன் கருத்தாகும். இவ்வித ஆற்றல் வந்தவர்க்கு நினைத்தவுடன் மூலாதார சக்தி சிரசை வெகு சுலபமாய் ஏறிவிடும்; உடலெல்லாம் இன்ப மயமாய்க் காணும். இந்த இன்பநிலையே ஆறாதாரங்களின் ஆற்றலை மாற்றிப் படைக்கவல்லது. பகிர்முகமே ஓடும் இந்திரியங்களை அகமுகமாக்க வல்லது. நம் தீ அகமுகமாயிடில் நம் கருவி கரணம் எல்லாம் அகமுகமாக மாற்றிப் படைக்கும் வல்லபம் அத்தீக்கு உள்ளது. அந்தத் தீயில் ஒரு ஈசுவரனே இடம் நோக்கிப் பிர்மனாகவும் விஷ்ணுவாகவும், உருத்திரனாகவும், மகேச்சுரனாகவும், சதாசிவனாகவும், விந்து நாதமாகவும், சத்தி சிவமாகவும் விளங்குகிறது. சுழுமுனை நாடியில் கீழ் உள்ள ஈசானனேதான் மேல் உள்ள ஈசானனாகின்றார். ஐம்முகச்

சிவனார் அதோ முக சத்தி சேர்ந்த பிறகே அறுமுகச் சிவனார் ஆகின்றார். உமையவள் திருமணத்தின் பிறகே ஸ்கந்தர் உற்பவம். எல்லாம் வல்லவன் சங்கற்பத்தால் ஸ்கந்தனைப் படைக்கவில்லை. மனிதனிடம் புறத்தே இன்பம் காணும் முறையில் ஸ்திரீ போகம் உள்ளது. இந்த ஆற்றலை மாற்றிப் படைக்கும் திறம் கொண்டவன், நூறு வாஜபேய யாகம் செய்தவனின் ஆற்றலைப் பெறுகின்றனன் என்று பிரகதாரண்யம் கூறுவதைக் காணலாம். அவ்விதச் சத்தியைப் பெற்றவர்தான் யாக காரியங்களையும் செய்து வந்தனர். கீழேயுள்ள ஆகாயம் பூதாகாயமும், குணமய ஆகாயமும் அவைகளின் நச்சுத்தன்மையும் சிரசை இடமாகக் கொண்டு குண்டலினி ஏறி இறங்கும் ஆற்றல் வந்த பிறகு கெட்டுவிடும். உடலில் காமத்துக்கு இடமில்லை; காமக் கழிவுக்கு இடமில்லை. ஸ்திரீயுடன் பொருந்தியிருந்தாலும் பாதிக்கப்பட மாட்டார்கள். ஒரு சாதக நிலைக்கு வேண்டப்படும் காரியம்தான். பிறகு அதனால் பாதிக்கப்படாத நிலையில் ஆற்றலுடையோர் ஆவர்.

பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே
பயனுறு மாதி பரஞ்சுடர்ச் சோதி
அயனொடு மாலறி யாவகை நின்றிட்
டுயர்நெறி யாயொளி யொன்றலு மாமே. **2807**

பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்
குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்
அருநிலை யாய்நின்ற ஆதிப் பிரானே. **2805**

சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்ப தறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றார்களே. **1199**

சிவ பூஜகர்கள் நிவிருத்தி கலையைப் பிரதிஷ்டை கலையிலும், பிறகு பிரதிஷ்டை கலையை வித்தியா

கலையிலும், பிறகு வித்தியா கலையைச் சாந்தி கலையிலும், பிறகு சாந்தி கலையைச் சாந்தியதீத கலையிலும் லயம் செய்வதாகக் கூறுவர். முறை சரிதான். அப்படி அவர்கள் பாவனையில் கலைகள் மாற்றத்தை அடைவது அபூர்வமானபடியால் கிரியை வழியை ஞானிகள் பயனற்ற வழியாகவே கருது கின்றனர்.

தேகத்தில் உணர்வுகள் எல்லாம் சத்தி மயம் என்றும், கீழ் உணர்வுகள் கீழுறுப்பாக உள்ளன என்றும் அறிக. அவைகளே மேலான உணர்வுகளாக மாற்றப்பட்டு விட்டால் கீழான இயல்புகள் கெட்டு மாற்றத்தை அடைந்துவிடும். ஈசான முக நடனத்தை அறிந்த பிறகு தேகத்தை அரித்துத் தின்னும் காளியின் ஆற்றல் கெடும் என்பதை அறியவும்.

தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ.

— திருவாசகம், திருச்சாழல்

**ஏற்றார் மூதூ ரெழில்நகை யெரியின்**
**வீழ்வித்து ஆங்கு அன்று**
**அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்**
**ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்**
**தடக்கையின் நெல்லிக் கனிஎனக் காயினன்:**

பழைமையில் தேகத்தை யிடமாகக் கொண்ட ஒளிக்குப் பகையான இருட்டன்மையுடைய தத்துவங்கள் எல்லாம். ஈசானனின் தோற்றம் கண்டபோதே அந்த தேஜசினால் வீழ்த்தி, அவ்விடத்தில் அருளான தேஜசினால் அடியேங்களுடைய அடித்தலமாகக் கருதிய உடலை இடமாகக் கொண்டு இயக்கும் தத்துவ நாயகர் ஒருத்தரைக்கூட விடாதபடி அடங்கச் செய்தனன். எனக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கினன்.

**விளக்கம்:**

ஏற்றார் - பகைவர் - சீவனுக்கு அறியாமையை மிகுத்துச் செய்யும் இருளாகிய தத்துவங்கள்.

மூதூர் - பழைய ஊர். சீவன் தேகமேதான் என்று நினைத்து வந்தது பற்றி மூதூர் தேகமாயிற்று.

எழில் நகை எரியின் - சிரிப்புப் போன்ற இருளில் பிரகாசித்த ஒளி (ஈசானன்). எரி - பிரகாசம்.

ஆங்கு அன்று - அவ்விடத்தில் அதே சமயத்தில்.

அடியோம் அடிக்குடில் - அடியேனுடைய அடித்தள மான தேகம்.

ஒருத்தரும் வழாமை யொடுக்கினன் - தேகத்தை இயக்கும் தத்துவங்கள் எல்லாம் ஒடுக்கப்பட்டன.

தடக்கையில் நெல்லிக்கனி என்பது ஒரு பழமொழி. அதாவது நல்ல பழுத்த நெல்லிக்கனியை உள்ளங்கையில் வைத்துச் சூரிய ஒளியில் பார்த்தால் அதனூடே உள்ள சிறு நரம்புகளும் தோன்றும். அதுபோல் எனது உடலுள் மறைந்திருந்தும் சிவத்தை நான் தெளிவாகக் கண்டேன் என்ற கருத்தாகும்.

**சொல்லுவ தறியேன் வாழி முறையோ**
**தரியேன் நாயேன் தான்எனைச் செய்தது**
**தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்கு**
**அருளிய தறியேன் பருகியும் ஆரேன்**
**விழுங்கியும் ஒல்ல கில்லேன்**
**செழுந்தண் பாற்கடல்திரை புரைவித்து**
**உவாக்கடல் நள்ளுநீ ருள்ளகந் ததும்ப**
**வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்**
**தேக்கிடச் செய்தனன் கொடியே னூன்தழை**
**குரம்பை தோறும் நாயுட லகத்தே**
**குரம்பைகொண் டின்தேன் பாய்த்தி நிரம்பிய**
**அற்புத மான அமுத தாரைகள்**
**எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ**
**துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்கு**
**அள்ளூ றாக்கை அமைத்தனன் ஒள்ளிய**
**கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை**
**என்னையு மிருப்ப தாக்கினன் என்னிற்**
**கருணை வான்தேன் கலக்க**
**அருளொடு பராவமு தாக்கினன்**
**பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.**

முன்னர்க் கூறியபடி எனக்கு எளிவந்த கருணையின் பெருமையை யான் சொல்லுமாறு அறியேன். அவனை வழுத்தும் முறைமையையும் அறியேன். நாய் போன்ற இழிகுணமுடைய என்னைத் தானாக மாற்றி அமைத்தது என்ன காரணம் என்பதையும் நான் அறியமாட்டேன். என்ன ஆச்சரியம்! உடலைக் கடந்து விட்டேன். அது எவ்விதம் செய்தனன் என்பதையும் அறியமாட்டேன்.

அந்த ஆனந்தத்தைப் பருகியும் நிறைவு பெற்றி லேன். முழுதுமாய் விழுங்கவும் முடிந்திலேன். செழுமையான குளிர்ச்சி பொருந்திய பாற்கடலின் அலைகளைப் போல, சிதாகாயத்தில் சந்திர மண்டல ஒளியை அசைத்துக் கொண்டிருந்தன. நிறைமதி நாளில் பெருகும் கடலின் நீர் போல எனது சிதாகாய உள்ளம் மகிழ்ச்சியால் பொங்கிக் கொண்டிருந்தது. மனம் எண்ணுவதைவிட்டு நின்றது. தேகத்தையும் தேகத்தைச் சூழவும் அமுதமய ஒளி நிரம்பியது. அது என் ஒவ்வொரு ரோம கூபத்தினின்றும் பாய்வதைக் கண்டேன். நாயினேனது உடலில், எனது தேகத்தையே இருக்கையாகக் கொண்டு கொடியேனுடைய மாமிசம் தழைத்த இவ்வுடலை முற்றிலும் இனிமையான தேனைப் பாய்ச்சினன்.

நிறைந்த ஆச்சரியம் மிக்க ஒளிக்கிரணங்களால் எலும்பை ஊடுருவும்படிச் செய்தனன். அவன்பால் அன்பு கொண்டு உருகும் ஆனந்தமய கோசத்தை அமைத்து, அவ்விடத்து எனக்கு நித்தியானந்தத்தை அனுபவிக்குமாறு நித்திய தேகத்தைக் கொடுத் தருளினன். அது எதுபோலும் எனில், சிறந்த விளாங்கனியில் வேழம் என்ற பூச்சி பழத்தை உண்டு ஓட்டினை நிலைகுலையாது வைத் திருப்பது போன்று எனது காரண தேகத்தை நிலைநிறுத்திக் காரியமான தேகத்தை அழித்து உலகமுள்ளளவும் என்னையும் அவனடியானாக்கி இருப்பதாக்கினன்.

விளாங்கனியை உண்ணும் புழுவை யானையின் பரியாயப் பேரால் 'வேழம்' எனக் கூறுவர். ஒள்ளிய கன்னல் கனிதேர் களிறு - சிறந்த சுவைமிக்க விளாங் கனியை வேழம் என்ற பூச்சி உள்ளுள்ள சதைப் பகுதியை உண்டுவிட்டு ஓட்டை மாத்திரம் உருக் குலையாமல் வைத்திருக்கும்.

எனது ஆகாயக் கூறான சீவனில் கருணைமிக்க அவனது ஆகாய விருப்பம் கலக்க அவனது சத்தியுடன் மேலான ஒளிமயமாகப் பிரமன் மாலறியாத பரமன் எனைச் செய்தருளினன்.

ஆவா என்பது ஆச்சரியக் குறிப்பு. என்ன ஆச்சரியம் என்றபடி.

செத்தேன் என்றால், உடலைக் கடந்து அறிவுடன் பிரிந்து விட்டேன் என்றபடி. திருவாசகம் செத்திலாப் பத்து அறிக.

ஞாலம் இந்திரன் நான்முகன் வானவர்
   நிற்க மற்றெனை நயந்தினி தாண்டாய்
கால ணாருயிர் கொண்டபூங் கழலாய்
   கங்கையாய் அங்கி தங்கிய கையாய்
மாலும் ஓலமிட் டலறும்அம் மலர்க்கே
   மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்
சேலும் நீலமும் நிலவிய வயல்சூழ்
   திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.
அளித்து வந்தெனக் காவவென் றருளி
   அச்சந் தீர்த்த நின்அருட்பெருங் கடலில்
திளைத்துந் தேக்கியும் பருகியும் உருகேன்
   திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவன் அறியா
   வான வாமலை மாதொரு பாகா
களிப்பெ லாம்மிகக் கலங்கிடு கின்றேன்
   கயிலை மாமலை மேவிய கடலே.

— செத்திலாப்பத்து

பௌதிக சந்திரனுக்கும் கடலுக்கும் சம்பந்தம் உள்ளதுபோல் ஆன்மிக சந்திர மண்டல ஒளிக்கும் சீவனுக்கும் சம்பந்தம் உண்டு. வாக்கிறந்து - எண்ணுவதை நீக்கி எண்ணமே செயலாகும்போது வாக்காக மாறுகிறது. எண்ணமற்ற அன்பில் வாக்குத் தொழில் இல்லை.

(திருவண்டப் பகுதி முற்றும்)

# போற்றித் திருவகவல்

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியும் ஆதர வதனிற்
கடுமுரண் ஏன மாகிமுன் கலந்து
ஏழ்தல முருவ இடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில்:

இவ்வகவலினால் இறைவனைப் போற்றுகின்ற படியால், இதற்குப் போற்றித் திருவகவல் எனப் பெயராயிற்று.

நான்முகன் முதலான தேவர்கள் திருவிக்கிரமாவ தாரம் எடுத்தபோது விஷ்ணுவை நாலா பக்கத்திலுள்ள முனிவர் களும் ஐம்புலன்களும் மகிழும்படி வணங்கினர். அத்தகைய ஒளி பொருந்திய திருமுடியை உடைய திருமால் சிவம் சோதிவடிவமாக எழுந்தருளியபோது சிவத்தின் அதோமுகத்தின் ஆற்றலை அளந்தறிய முயன்று வேகமுடைய பன்றி உருவெடுத்து முன்வந்து கீழ் ஏழுலகங்களையும் ஊடுருவிச் சென்றும் காணாமல் பின்னர் இளைத்து ஊழியை நடத்தும் முதல்வனே உனது திருவடிக்கு வணக்கம் என்று காண முடியாது வழுத்தின திருவடிகள் துதித்தற்கு எளிதாகி நெடிய கடலாற் சூழப்பட்ட உலகத்தில்.

வாமனாவதாரத்தில் மாவலியினிடம் மூன்றடி மண் கேட்டுப் பெற்றுப் பூமியை ஓர் அடியாகவும் சுவர்க்கத்தை ஓர் அடியாகவும் அளந்து மற்றோர் அடி வைக்க இடமின்றி மாவலியின் சிரசில் வைத்து அவனைப் பாதாளத்திற்கு அழுத்தியதாகத் திருவிக்கிர மாவதாரம்பற்றிப் புராணம் கூறும். அவ்வளவு ஆற்றலுடைய விஷ்ணு, சிவம் சோதியாக வெளிப்பட்டு நின்றபோது சோதியின் அடிப்பாகம் எங்கிருந்து வருகிறதென்று ஆராய்ந்தறியப் பன்றி வடிவெடுத்துப் பூமியைக் குடைந்து குடைந்து சென்றும் காண முடியாதவாறு இளைத்துச் சிவத்தை வழிபட்டுத் தனது அகந்தையை நீக்கினன் என்பது அடிமுடி தேடிய வரலாற்றுக் கதை.

வாம தந்திரி கூறும் உபாயத்தால் சிவத்தை அறிய முடியாது என்பது கருத்து. பன்றிக்கு மலம் உண்ணு வதும் பூமியைக் குடைவதும் இயல்பு. விஷ்ணு திதி நிலையைப் பற்றித் தூண்டுபவர் விஷயாதிகளை அனுபவித்து அவைகளின் எல்லையைக் காண முடியாது என்பது கருத்து. இங்குச் சுட்டிக்காட்டப்பட்ட அதோமுகச் சக்கரம் என்பது மூலாதாரச் சக்கரமாகும். செருக்குற்றவர் காண முடியாது என்ற கருத்து 75ஆவது வரியில் வரும்.

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடியிணையைக் கொண்டு
வார்கட லுலகில் வழுத்துதற் கெளிதாய்

என்று கூட்டி முடிக்க.

**யானை முதலா எறும்பீ றாய**
**ஊனமில் யோனியி னுள்வினை பிழைத்தும்**
**மானுடப் பிறப்பினுள் மாதா வுதரத்து**
**ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்**
**ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்**
**இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்**
**மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்**
**ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்**

அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தஅக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பல்துறை பிழைத்தும்:

*யானை முதலாக எறும்பு இறுதியாக உள்ள குறைவற்ற யோனி பேதங்களினுள் தோன்றுதற்குரிய வினையினின்று தப்பியும்.*

*சீவன் எடுக்கும் உருவத்திற்கேற்பத் தன்னைச் சரி செய்து கொள்ளும் வகையை உணர்த்துவதுடன் பல பிறவிகளையும் உணர்த்திற்று.*

*மாதா உதரத்திலும் - கேடையாத புழுக்களின் நெரிசலில் மானுடப் பிறப்பினுள் அழிவுறாது தப்பியும்.*

*தந்தையின் சுக்கிலத்திலுள்ள சீவாணுக்கள் பல குழந்தைகளை உற்பத்தி செய்யக்கூடும். ஒரே சீவாணு*

அந்தக் கூட்டத்தின் போராட்டத்தில் சிசுவாகிறது. மற்றவை அழிந்து போகின்றன. இதை உணர்த்தி யுள்ளார். தாயின் கருப்பையினுள் முதலாந்திங்களில் தான்றிக் காயளவு திரண்டுவரும் பருமனில் பிழைத்தும்.

இரண்டாந் திங்களில் அங்கு நிலை பெறுவதில் பிழைத்தும்.

மூன்றாம் திங்களில் தாயின் சுரோணித ஊற்றத்தி லிருந்து பிழைத்தும்.

நான்காம் திங்களில் கருப்பை வாயில் சுருங்குவதால் உண்டாகும் இருளிலிருந்து பிழைத்தும்.

ஐந்தாந் திங்களில் கருப்பம் சிதைவுறாது பிழைத்தும்.

ஆறாந்திங்களில் கருப்பப்பை விரிதலில் உண்டாகும் பரிச உணர்வு நெருக்கத்தில் பிழைத்தும்.

ஏழாம் திங்களில் பிண்டம் கீழ்நோக்குதலில் வழுவாது தப்பியும்.

எட்டாவது திங்களில் உண்டாகும் இடையூறு களினின்று பிழைத்தும்.

ஒன்பதாம் திங்களில் வரும் துன்பங்களிலிருந்து பிழைத்தும்.

பத்தாவது திங்களில் தாயுடன் தானும் அனுபவிக்கும் துன்பக் கடலிலிருந்து பிழைத்தும்.

ஆண்டுகள்தோறும் வளர்ந்து வருவதில் உட்கார வைத்தலால் உண்டாகும் பல இடையூறுகளிலிருந்து பிழைத்தும்; காலைப் பொழுதிலே மலத்தாலும், கடுமையாகிய பகற்பொழுதில் பசியாலும், இராப் பொழுதில் நித்திரையாலும், வெளியூர் போதலாலும், ஆகியவற்றினால் உண்டாகும் துன்பங்களினின்று பிழைத்தும்.

கருங்கூந்தலும் செவ்வாயும் வெண்பல்லும் கார் காலத்து ஆண் மயிலினை ஒத்த செருக்கு நிறைந்த மேன்மையும், பருத்து விடுதலின் ஒன்றோடொன்று செறிவுற்று அகத்தே செருக்குற்று மேலே மூடிய கச்சானது கிழிந்து போம்படி மேலெழுந்து வெளிப்பட்டு எதிரே பருத்துச் சுமைதாங்காது இடையானது மெலிந்து வருந்தும்படி எழுச்சிபெற்றுச் சுற்றுப்புறங்களிற் பரந்து, ஈர்க்கும் நடுவே நுழைவதற்கு இடமில்லாத முலைகளை யுடைய இளமகளிர் தம் கூரிய கண்களின் சூறையாடலுக்குத் தப்பியும்.

மயக்க அறிவினையுடைய பெரிய குழுவினர் தம் மயக்கத் துறைப் பரப்புகளுள்ளே மதங்கொண்ட ஆண் யானை என்னும் அவாவினிடைப் பிழைத்தும்; கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும் - உயிர்க்குறுதி பயவாத பலவாறான கடல்போன்ற கல்வித் துறைகளிலிருந்து தப்பியும்.

செல்வம் எனப்படும் அல்லலினின்று தப்பியும்.

வறுமையெனப்படும் பழைய நஞ்சின் தாக்கு தலுக்குத் தப்பியும்.

தாமே வந்து தழுவிக்கொள்ளும் இன்னோர் அன்ன பலவகைப்பட்ட மனை வாழ்க்கையில் இழியும் நெறிகள் தோறும் இறங்குதலினின்று தப்பியும்.

**தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி**
**முனிவி லாததோர் பொருளது கருதலும்:**

இவ்வாறெல்லாம் பிழைத்துத் தெய்வப்பற்று உண்டாகி முன்னர் வெறுப்புடன் நாடாதிருந்த நிலைமாறி ஒப்பற்ற மெய்ப்பொருளை உணர்ந்து அதனைக் கருதலும்.

**ஆறு கோடி மாயா சத்திகள்**
**வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின**

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்று ஆறு கோடியில் பல்வேறுபட்ட சத்திகள் உள்ளன.

சீவனின் குணங் காரணமாக அவைகளில் பற்றுக் கொண்டு அந்தத் தேவதைகளை உபாசிக்கவும் அவைகள் சொற்பப் பயனை அளித்து உபாசகனை வஞ்சிப்பதை வேறு வேறு மாயைகள் தொடங்கின.

மெய்ப்பொருள் ஒன்றே. அது அகண்ட உரு. யாதொரு உருவத்தாலும் அறியத்தக்கதன்று என்ற அறிவு சகஸ்ரதளம் சென்றவர்க்கே விளங்கும். மற்றவர்க்கு விளங்காதபடியால் 'ஆறு கோடி மாயா சத்திகள்' எனப்பட்டது.

கோடி - முடிவு.

**விளக்கம்:**

ஆறு முடியினையுடைய ஆறாதாரத்திலுள்ள மாயா சத்திகள் உடல், கரணம், உலகுகளை அவை அவைகளின் விருப்பப்படி சிருஷ்டிக்கத் தொடங்கின.

இவ்வாக்கியம் ஆகம வாதிகள் கருத்தையும் யோக மதத்தினர் கருத்தையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது. இதைத் தனித் தனி ஆராய்வோம்.

## ஆகமவாதிகள் மாதம்

மனிதனிடமுள்ள உடல் கரணம் உலகுகள் அவனவன் விருப்பம், குணம், தகுதி நோக்கிப் படைத்தும் பரிபாலித்தும் வரப் பல தேவ கூட்டங்கள் அண்டத்திலும் பிண்டத்திலும் உள்ளன என்பது கோட்பாடு. அத்தகைய தேவ வர்க்கம் சிவத்தின் ஆணைப்படி தொழிற்படுகின்றன. இதைப்பற்றிய விவரம் திருமந்திரம் ஆதித்த நிலை என்ற தலைப்பில் முப்பது திருமந்திரங்களில் கூறப்பட்டுள்ளது. அதில் சீவன் ஒளிபெற ஆதித்தன் முதலான தேவர்கள் என்று கூறிச் சென்றுவிட்டார்.

செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கள்
மஞ்சுடை மேரு வலம்வரு காரணம்
எஞ்சுட ரீசன் இறைவன் இணையடி
தஞ்சுட ராக வணங்கும் தவமே.

— திருமந்திரம் 1975

கரும சாதாக்கியத்தே யிருபத்தைந்தாய்க்
கருது மகேசுர ருதிப்பரவர்தங் கண்ணே
வருவ ருருத்திரனயன் மாலிதயந் தன்னில்
வலமதனில் வாமத்தில் மருவியிட வடைவே
உருவெளி யாமருக்கன் மதிவன்னி தானு
முதிப்பவர் நேத்திரங்க ளொருமூன்றி னிடத்தே
சுருதி சிவாகம முதலாமபர ஞானந்தோன்று
மலர்வாக் கிடத்தே சுவாசத்தே காற்றும்.

— *சிவநெறிப் பிரகாசம்*

களமதனி லுதித்திடுவர் கணேச ரறுமுகராங்
கந்தரிதயத் துதிப்பர் கன்னந் தன்னில்
உளவதுவாங் கீலகந்தான் முனிவர் கோடி
யுதித்திடுவ ருரோமங்க டம்மி லோங்க
வளநிலவு தேவர்க ளைம்பதுவாங் கோடி
வந்திடுவ ருதரத்தே மற்றி வற்றால்
அளவிறந்த வுலகுடல்க ளாதிக் கீச
னபின்னமா னிமித்தவுபா தான மாவன்.

— *சிவநெறிப் பிரகாசம்*

சேர்ந்திடவே சுத்தவித்தைக் கிறைவ ராகச்
சிறீகண்ட வுருத்திரரைத் திகழ நோக்கி
வாய்ந்திடவே அவராலே கலையதனில் வித்தை
மற்றுமதி லவ்வியத்தங் குணங்க ளெல்லாம்
ஆய்ந்தவரால் வேதமுட னாக மாதி
யயன்திரு மால்முத லோர்க ளவனிமீதே
போர்ந்துலகி லுள்ளோர்கட் குரைக்க வன்னோர்
புனிதமாம் போதத்தைப் பொருந்தத் தானே.

— *சிவநெறிப் பிரகாசம்*

தத்துவங்கள் சடமாகி யறிவுதொழி லின்றாற்
சத்திசிவ னனுப்பிர வேசித்திடுவர் சாற்றில்
சுத்ததத்து வந்தன்னிற் சுயமே தோய்ந்திடுவர்
சொலும்சுத்தா சுத்தத்திற் றோய்வரவற் றிடமாய்ச்

சித்தமுத லானவற்றிற் றேவர்கள்பாற் சேர்ந்தே
செறிந்திடுவ ரிவ்வாறு மூவகையாய்ச் சிவன்றான்
ஒத்துறுதல் செய்தருளாற் றத்து வத்துக்
குணர்வுதொழி லாக்கியிட லுணர்த்திடுவா முணரே.

— *சிவநெறிப் பிரகாசம்*

வன்னியுட னிந்திரனு முபேந்திரனு மறலி
மாமலரோன் றானுமிவர் வாக்காதி யைந்தைத்
துன்னியிருந் தேவசன கமன தானஞ்
சொல்விசர்க் கானந்தமைந்தாந் தொழில்புரி வித்திடுவர்
உன்னியிடிற் செவிதோல் கண்ணாக்கு மூக்கி
லுற்றிருந்தெண் டிசைத்தேவர் வாயுவினன் வருணன்
அன்னியமிலா விருவ ரசுவினி தேவதைக
ளடைந்தறி விப்பார்சத்த மாதியைந்து மடைவே.

— *சிவநெறிப் பிரகாசம்*

மனமதனிற் சந்திரனு மகங்கார மதனின்
மன்னியே வீமேசர் புந்தியினிற் புத்தி
யெனவுரைக்குஞ் சத்தியாங் குணங்களொரு மூன்றி
லிசைத்தமல ரோன்மாலு நீலவுருத் திரரும்
உனல்பற்றல் கைக்கொண்டே யகங்கரித்தே யோங்க
லுற்றதனைப் பகுத்தறித லுயர்தன் மாதிகளாய்ப்
பனவுளதாம் பஞ்சாசத் பாகவந் தானாகப்
பண்ணிடுவ ரிப்பரிசே மேலுளதும் பகர்வாம்.

— *சிவநெறிப் பிரகாசம்*

எண்ணரிதா மிராகத்தி லிராகேச ரிசைந்தே
யியற்றிடுவர் புருடனையு மிச்சையையு முணர
நண்ணியிட விடயத்தே செய்யும் வித்தை
நண்ணிடுவர் வித்தியா தேவிநல மாரப்
பண்ணியிட வறிவுதொழில் விளங்கியிடக் கலைக்கே
பதிந்திடுவர் கலாதேவி யெனப்பகர் வர்காலத்
தண்ணால் காலேசரணைந் தாக்கியளித் தழித்த
லாவனவுந் தோற்றுவித் தேநியமன மாக்கிடுவர்.

— *சிவநெறிப் பிரகாசம்*

கரையிறந்த சத்தியுடன் காரிய ரூபராகிக்
கலங்கியே நின்றுள்ள காரிய மாயையின்கண்
புரையறவே யீசர்சத்தி புணர்ந்ததனவடிவாய்ப்
போற்றிட மாயாதேவி யெனும்பெயரும் புனைந்தே
திரைநுரைக டிவலைக டாங்கடற் பாலாகுஞ்
செய்கைபோற் றணுவாதி சிறக்கச் செய்தும்
தரையிறுதி கலையாதி தத்துவத் தாருயிர்க
டாமயங்கச் செய்யுமெனச் சாற்றிடு மாகமமே.

— சிவநெறிப் பிரகாசம்

இவ்வகையான பல சத்திகள் சிவம் சத்தி அகண்டத்தில் சிறப்புற்று விளங்கச் சீவன்பால் தொழில்படுகின்றனர். சிவசத்தி சிறப்புற்றபோது இத்தியாதிகளும் சீவனின் விருப்பத்திற்கிணங்கத் தொழிற்படுகிறபடியால் சீவன் சிவ சமான மகிமையை எய்துகிறான். இவைகள் எல்லாம் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு கோடிகளைக் கொண்டியங்குகின்றன. சுத்த தேகம் சிறப்புற்றபோது போக மாயா தேகம் தேவையில்லை என்றறியவும்.

## யோக மதம்

ஒரு பிராண சத்தி தேகத்தில் மண்ணீரல் (Spleen) வழியாகப் புகுந்து பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என ஐந்தாகித் தேக தர்மத்தை நடத்துகின்றது. அவை ஐந்து நிறங்களாக ஆறு ஆதாரங்களிலும் தொழிற்படுகின்றன. இவைகளில் கீழ் முகங்கொண்டு செல்லுவதைப் பொதுவாய் அபானன் என்றும் மேல்முகங்கொண்டு செல்வதைப் பிராணன் என்றும் கூறுவர். கீழ்முகங்கொண்டு செல்லும் கவர்ச்சி மனம் செயல்படாத யோகியர்க்கு அதுவே மேல்முகங் கொண்டு சிரசுக்கு மேல் பொருந்தித் தேக தர்மத்தைச் செயலினின்றும் நிறுத்திவிடும். மனிதனின் மூலாதாரத்தில் குண்டலினியும் சீவ சத்தியும் நுழைகிறது. குண்டலினி உயர்ந்து மண்ணீரலை அடைந்து பிராண சத்தியை ஏற்று அதை ஐந்து பிரிவாகப் பிரித்து விடுகிறது.

| வாயு | நிறம் | மண்ணீரலி லிருந்து நோக்கிச் செல்லும் சக்கரம் | வேலை |
|---|---|---|---|
| 1. பிராணன் | மஞ்சள் | இதயம் | இரத்தோட்டம், சுவாசம் |
| 2. அபானன் | கிச்சிலிச் சிவப்பு | குதம் குய்யம் | மலம், ஜலம், விந்து பாகம் பண்ணுதல் |
| 3. சமானன் | பச்சை | நாபி | ஜீரணம் |
| 4. உதானன் | கருநீலம் | கழுத்து | குரல், பேச்சு |
| 5. வியானன் | இளஞ்சிவப்பு | மண்ணீரல் | நரம்பு, மூளை பண்படுதல் |

வெளியில் உள்ள சத்தி குளிர்ந்தது. உள்ளிருந்து வெளிப்போவது உஷ்ணமானதால் வெளியிலிருந்து பாயும் சத்தியை அபானன் (சந்திரன்) என்றும், உள்ளிருந்து வெளிப்பாய்வதைப் பிராணன் (சூரியன்) என்றும் கூறுவர். இவ்விதமாக இரு சத்திகளும் மூலாதாரம் ஒழிந்த ஐந்து ஆதாரங்களிலிலும் புணர்ந்து புணர்ந்தே சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுக்தி ஆக்ஞையை அடைகிறது. யோகி நிராதாரமான சிரசுக்கு மேல் நினைவுகொண்டபோது சிரசின் பிர்மரந்திரத்தின் மேல்நோக்கிப் பிராணன் பாய்வதையும் அபானன் மேலிருந்து பிராணனுடன் கலப்பதில் தேகதர்மம் கெட்டு, மனம் ஓய்வைப் பெற்றுச் சிரசில் உள்ள ஆத்ம தேஜசில் மனம் பொருந்தி உபசாந்த பதமடைகிறான். இதெல்லாம் குரு சகாயத்தாலும் தெய்வீக அருளாலும் நடைபெறுவது. பாண்டித்தியத்தால் தாங்களே அறிந்து கொள்ளும் திறமன்று. பெயர் ஆகமம் என்று கூறினும் யோகம் என்று கூறினும் விஷயம் ஒன்றேதான்.

# பிராண அபான விளக்கம்



நாடு பிராணாபான னியற்கை யாக
நானு ரைத்தவிக் கதிக ளிரண்டும்
வீடு தருவன விரவும்பகலு மேவவேண்டுவன
விரைவற விவ்வியா பாரத்திற்
கூடினவ ராய்ப்புறம் போகா துளத்தைக்
காப்போர் குறைவில் சிலநாளினிலை கூடாநிற்பர்
தேடுமிது பரிசயிப்போர் விடயவேட்கை சேரார்
வேதியர் நாய்த்தோற் றீண்டு வரோ.

*— ஞானவாசிட்டம், காக புசுண்டர் கதை*

போகினு நிற்கினுங் கனவுநன வுற்றாலும்
பொருந்து நோக்கிது வானோர்பூணார் பந்தஞ்
சோகமுறார் பேறெல்லாம் பெற்ற தாகும்
சொன்ன விதயக்கமல நின்று தோன்று
மேவுபிராண னன்புறத்தே விரலீ ராறி
னெல்லையிலே யிறந்திடுமா லபானன் றானு
மாகுபுறத்தே விரலோர் பன்னிரண்டி னளவிலுதித்
துளக்கமலத் தடங்கி மாயும்.

*— ஞானவாசிட்டம், காக புசுண்டர் கதை*

குறிப்பு:

*இங்குக் கூறப்பட்ட பன்னிரண்டு விரற்கடை சிரசுக்கு மேலுள்ள சகஸ்ரதள விஷயமாகும். இங்குதான் மேல்முகங்கொண்ட பிராணனும் துவாதச வெளியிலிருந்து கீழ்முகங்கொண்ட அபானனும் கலந்து ஊர்த்துவ சகஸ்ரதளம் அமைகிறது.*

விரவிவரும் புரநின்று மபான னென்னும்
வியன்மதிய மேனியெல் லாங்குளிர் விக்கும்
பிராணனென்னுஞ் சூரியன்றான் கனலா யுள்ளே
பேசியவிவ் வுடற்பாகம் பிறக்கப் பண்ணு
மிராதுழலு மபானனெனு மதியி னுட்சே
ரியற்கலைகள் பிராணனெனு மிரவி யாலே
யுராவிவிழுங் கப்பட்ட தெங்கே யந்த
வுயர்பத முற்றாற் பின்னையொரு நோயுண்டோ?

*— ஞானவாசிட்டம், காக புசுண்டர் கதை*

அவ்வகை யேபிராண னெனுமிர வியுட்
சேரணி கலைகளபான னெனுமிந்து வாலே
வவ்வி விழுங்கப்பட்ட தெங்கே யந்த
வன்பத முற்றாற்பின்னை வருமோ சென்மங்
கவ்வுபிரா ணனைவிழுங் கபானனைக் கலந்த
வபானனை விழுங்கப் பிராண னோக்க
விவ்விரண்டி னடுவாக நிற்போ ரென்று
மெழுபிறவி யிடர்பின்னை யெய்தா ரன்றே.

— *ஞானவாசிட்டம், காக புசுண்டர் கதை*

*வேதாந்த பக்ஷமாயினும் சரி, சித்தாந்த பக்ஷமாயினும் ரி, அநுபவமற்ற போத குருவால் இவ்வித்தையை .ணர்தலரிது. அவபோத குருவால் உணர்த்தப்பட்டால் .ண்மை விளங்கும். உண்மையை அறிந்தவர், வேதாந்தம் ன்றும் சித்தாந்தம் என்றும் பேதம் காணார். உண்மை ன்றே. சொல் விளக்கம் வேறு வேறாக இருக்கும். இதை ரிவரிக்கில் இதுவே இருபது பக்கத்திற்கு மேலாகிவிடும். .ண்மை அறிய அவாவுடையோர் தக்க குருவை அடைந்து பறவேண்டும்.*

''நூலறிவு உணரா நுண்ணியோன் காண்க''

*னம் அடங்கு முபாயமே சிவராஜ யோகம்.*

மற்றோர் தெய்வங் கனவிலும் நினையாது
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியாது அத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி

*ன்று பின்வரும் பகுதி கொண்டு தெளிக.*

**ஆத்த மானார் அயலவர் கூடி**
**நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்:**

அன்புக்கு உரிய அயலவர் பலரும் நாத்திகட் பேச்சுகளை அலுத்துப் போகாது பேசி, நாவில் தழும்பேறினர். அஸ்தி - உள்ளது (கடவுள் உள்ளது).

நாஸ்தி - கடவுள் இல்லை என்ற கொள்கை. அது நாஸ்திகமாயிற்று.

**சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்**
**பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்:**

பழைய பசுக்கூட்டமாகிய உறவினர் என்னை எனது முயற்சியினின்றும் விடுவிக்கப் பெரிதும் பாடுபட்டனர்.

**விர்த மேபரம் ஆக வேதியரும்**
**சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர்:**

வேதியர்களும் விரதங்களைக் கைக்கொண்டு அவற்றின்வழி நிற்பதே மெய்ப்பொருளையடையும் மேலான சாதனமாக அமையும் என்று நூலுண்மைக்காக ஏதுக்கள் காட்டினர்.

**சமய வாதிகள் தத்தம் மதங்களே**
**அமை வதாக அரற்றி மலைந்தனர்:**

சமய வாதஞ்செய்வோர் ஒவ்வொருவரும் தத்தம் சமய நூல்களே, அம்மேலான பொருளை அடைவித்தற்குத் தகுதியுடையன என ஆரவாரித்து மயங்கினர்.

சமய வாதிகள் சொற்போர் செய்வதே தவிர உண்மை உணராதவர் என்றபடி.

**மிண்டிய மாயா வாதம் என்னும்**
**சண்ட மாருதம் சுழித்தடித்து ஆஅர்த்து**
**உலோகா யதன்எனும் ஒண்டிறற் பாம்பின்**
**கலாபே தத்த கடுவிடம் எய்தி**
**அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும்:**

பிரபஞ்சம் பொய்யென்று தாபிக்கும் கொள்கையை யுடையது பவுத்த மதம். இதை அநுசரித்துப் பரப்பிர்மமே மாயோ உபாதி காரணமாகச் சீவான்மாவாக வந்துள்ளது என்பது ஏகான்மவாதக் கொள்கையாகும். பவுத்தத்தில் குத்திக் கிளப்பும் பொய் வாதம் என்னும் சூறாவளிக் காற்று சுழன்று வீசி முழங்க, உலோகாயதம் என்னும் ஒள்ளிய வலியுடைய பாம்பு தீண்டுதலால் உண்டாகும் நஞ்சின் சுழற்சியுட்பட்டு மனம் மாசுற்று அதனால் பெரிய மாயை எனைப் பற்றவும்.

மாணிக்கவாசகர் காலம் பௌத்தர் ஆதிக்கக் காலம். பௌத்த சமயத்தில் கடவுளுக்கு இடமில்லை. ஒழுக்கத்திற்கே இடம். ஏகான்மவாதியர், ஒரே பிர்மம் உபாதி காரணமாகப் பல சீவர்களாக உள்ளது. காணப்படுவதெல்லாம் பொய்த் தோற்றம் என்பர்.

உலோகாயதர் இம்மையில் அடைய வேண்டியவை களை முயன்று அடைதலே பிறவியின் பயன் என்பர். இவர்கள் ஒழுக்கத்தையும் கடவுளையும் பற்றாதவர்.

மணிவாசகர் காலத்தில் பல மதங்களையும் பௌத்தம் அடக்கியிருந்ததால் 'மிண்டிய' என்று கூறுகிறார். மிண்டு - நெம்பு தடி. மிண்டுதல் - புடை பெயரச் செய்தல். பெருங்காற்றுப்போல் வீசிப் பல மதமாகிய மரங்களை வீழ்த்தியது.

தெய்வபயம் என்ற நியதி மதிக்கப்படாமல் போகவே, உலோகாயதன் மதம், பாம்பின் விஷம்போல் பரவி மக்கள் மயக்கத்தில் வாழ்ந்தனர் என்றார்.

தர்க்கரீதியாகச் சாதிக்கப்பட்ட மதங்களாகையால் 'கலாபேதத்த கடுவிடம்' என்றார். அதாவது கவர்ச்சியாக உள்ளதில் மயங்கினர் என்பது கருத்து.

**தப்பா மேதாம் பிடித்தது சலியாத்**
**தழலது கண்ட மெழுகது போலத்**
**தொழுதுள முருகி அழுதுடல் கம்பித்து**
**ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்**

கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுதல் இன்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாரும்
கதியது பரம அதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலும் நினையாது
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி அருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதஎன்று அரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி:

*பல யோனியில் பிறப்பதைக் கடந்தும், மாதாவின் கருவில் உள்ள இன்னல்களைக் கடந்தும், தினசரி செய்ய வேண்டியவைகளில் உழன்று கொண் டிருப்பதை விட்டும், காமுகனாய்த் திரிவதினின்று விடுபட்டும், ஆசைகளைவிட்டும், கற்க வேண்டியதைக் கற்றும், செல்வமாகிய அல்லலை விட்டும், வறுமையில் உழலாமல் பல புன்னெறிகளை விட்டும், தெய்வ சிந்தனை வந்தபோது பல்வேறுபட்ட தெய்வ வணக்கங்களிலீடு படுவதை விட்டும், மாயா வாதத்தையும் உலகா*

யதத்தையும் சாராமல் ஒரே சத்தியப் பொருள் என்ற கொள்கையை நழுவாமல் பற்றவும்.

நெருப்பினைக் கண்ட மெழுகு உருக்குவதுபோன்று தத்துவச் சார்புடைய உள்ளம் (மன மண்டலம்) தேகத்தைக் கடந்து சிதாகாயத்தில் விளங்கவும், சிதாகாயத்தை வணங்கி அதையே கூர்ந்து நோக்குவதில் அதன் இருட்டுத்தன்மை மாறியும், கண்களில் ஆனந்தக் கண்ணீர் வடியவும், உடலில் ஒருவித நடுக்கம் கொண்டு ஆடியும், உரக்கத் தோத்திரங்களைக் கூறியும், இசையுடன் பாடித் தோத்திரம் செய்தும், குறடும் அறிவிலியும் பற்றினவற்றை விடாமைபோல நானும் அந்நிலையினனாகித் தொடர்ந்து நின்ற நல்லன்பினால் பச்சை மரத்தில் இரும்பு ஆணியடித்தால் பதிவதுபோல், என்னுள்ளத்தில் தெய்வ சிந்தனை பதிவுற்று அன்புக்கசிவு ஏற்படச் சிதாகாயக் கடலில் சுழன்றது. உள்ளத்தில் இறைவனுடன் இணையும் விருப்பம் மேலோங்கவும் அதன் உடன் கூட்டமான மெய்விதிர்த்து உலகினர் பேய் கொண்டவன் என்று என்னைக் கூறவும், எனது செய்கைகளைக் கண்டு சிரிக்கவும், எனது வெட்கத்தை விட்டு உலகினர் கூறுவதை மனம் கோணாமல் ஏற்றுக் கொண்டு எனது சுபாவத்திறன் கெட்டுப் பித்துக் கொண்டவனைப்போல் நடந்து கொண்டேன். இந்த நிலையிற் கன்றினைப் பிரிய மனம் இல்லாத தாய்ப்பசுபோல் நான் இறைவனின் பிரிவை ஆற்றாதவனாய் உரக்க அழுதும் பதறியும் மற்றோர் தெய்வத்தை மறந்தும் நினையாதவனானேன். இதுகாறும் கூறியவை சீடனின் பக்குவ முதிர்ச்சியைப் பற்றியது.

இந்நிலையில் கிடைத்தற்கரிய சிவம் பூமியில் மானிடக் கோலத்தில் வந்து உபதேசித்தருளினன்.

அருபரத்து ஒருவன் என்றது சிவத்தை அறிந்து நிட்டை கூடித் தற்போதமற்ற ஞானகுருவை உணர்த்தும் குறிப்பாகும். ஞானோபதேசம் செய்து காட்டிய முறையை எளிமையான காரியம்தானே என்று அலட்சியமாய் எண்ணாமல், இணையான திருவடிகளின் நினைவில்

தேகத்தைவிட்டு நிழல் இல்லாதுபோல் வெறுப்பின்றி முன்புறமும் பின்புறமும் காணும் சிதாகாச வெளியில் இறைவனை என்பு நைந்துருகி நெக்கு நெக்கேங்கி அன்பெனும் ஆறு கரையது புரளப் புறத்தே செல்லும் புலன்களின் வழிச் செல்லாமல் அவைகளும் அங்குப் பொருந்துமாறு தலைவன் என்று வாயால் வாழ்த்தினேன். எனது உரை சொல்ல முடியாமல் நாக்குத் தழுதழுப்பினை அடைந்தது. மயிர்க் கூசெறிந்தன. சுழுமுனா நாடியில் பூவின் மொட்டுப்போல் சகஸ்ரதளம் மேல் முகம் கொண்டது. சிதாகாயமான மனமண்டலம் மலர்ச்சியை அடைந்து கண்கள் அதைக் காண்பதில் சிறிய துளிகளை வெளிப்படுத்தியது. இவ்விதம் குறைவற்ற அன்புடன் வழிபடுவோரைத் தாய் சேயைப் பாதுகாப்பது போன்ற அருளுள்ளம் கொண்டவனே உன்னைப் போற்றுகிறேன்.

**விளக்கம்:**

மானிடப் பிறவியின் அருமையைக் கூறிப் பல சூழ்நிலைகளைக் கடந்து தெய்வப்பற்று வந்த பிறகு உள்ள பல சமயநெறிகளைக் கடந்து ஞானவேட்கை முறுகி அமைவதில் மனம் ஒரு நல்வகை உணர்ச்சியில் அமைந்த பிறகே உபதேசம் பயன்படும். அவ்வாறு இல்லாவிடில் ஞானகுருவின் உபதேசம் பயன் தராது போகும் என்பதை அறியவும். ''தப்பாமே... மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது'' என்பது உபதேசத்திற்கு முன்னுள்ள நிலை.

உபதேசத்திற்குப் பின்னுள்ள நிலையும், அதன் தொடர்பான மெய்ப்பாடுகளும்தான் மேலும் அநுபவமான நிலைகளும் கிட்டுகின்றன. பக்தி என்பது நால்வகையுணர்ச்சிகளைப் பெருக்கி இறைவனை அடையும் நெறி. ஞானம் என்பது ஆத்மாவின் உண்மையையும் இறைவனின் உண்மையையும் அறிவது. கீழான உணர்ச்சிகளை வைராக்கியத்தால் ஜயிக்கலாம் என்று சிலர் கூறுவர்.

உணர்ச்சி கீழ்நிலையில் வலிது. தக்கஞானம் இல்லாவிடினும் நல்லுணர்ச்சிக்குப் பண்பட்டவர்

கீழ்மையடையார். நல்லுணர்ச்சியைப் பெருக்கிக் கொள்ள ஆண்டான், அடிமை, தோழமை, கணவன், மனைவி, தாய், சேய் என்று பல்வேறு பாவனைகளில் தெய்வ உறவைப் பெருக்கிக் கொள்ளுவதில் பக்தி முதிர்ந்து கீழான காமக் குரோதாதிகள் இருந்த விடத்தில் நற்பண்பு பெருக்குவதில் நற்பண்பு வளர்ந்து சுவபாவிகமாய் வந்த தீய பண்புகளை விட்டு மேலிட்டுவிடும். இவ்வகையான நல்லியல்பை முன்னமே அளிக்கும். இதனால் பக்தி முடிவானதாக இருக்கவில்லை. ஞானத்தை அடைய வாயில் என்பதை அறிய ஞானத்தால் பக்தியின்றி வீடடைய முடியாது. ஞானம் பெற்றபின் அறிவதென்ன என்பதைப் பின்னர்க் கூறுகிறார்.

குருபரனாகி... தாயேயாகி
வளர்த்தனை போற்றி

சிறுமையென் றிகழாதே - குரு காட்டின விஷயம் ஒரு நுட்ப விளக்கம்தான். அது ஞானத்திற்கு விதைபோன்றது.

திருவடியிணை - சிவம் பொருந்தும் இரண்டும் கண்கள்.

பிறிவினை அறியா நிழலதுபோல - மனிதனை விட்டு நிழல் தனித்திராது. அதுபோலக் குருகாட்டிய நெறியில் எப்பொழுதும் மனம் பதிவுற்று நிற்க வேண்டும் என்றபடி.

முன்பின்னாகி முனியா தத்திசை - முன்புறம் முகத்திற்கு முன்னுள்ள ஆக்ஞையாகும். பின்புறம் பிடரிக் கண்ணாகும். இவைகளை வெறுப்புணர்ச்சி யின்றிக் கவனிக்க வேண்டும்.

என்பு நைந்துருகி - தேகமேதான் என்றிருந்தவர்க்கு ஒளி ஞானம் இல்லை. ஆகாயமேதான் என்ற அறிவு குருவினால் உணர்த்தப்பட்ட பிறகு சிரசைக் கடந்து ஊர்த்துவ சகஸ்ரதளம் விரிவது. அது அநுபவத்தை விளக்கும் முன்னர் அது மண்டை ஓட்டில் தடை பட்டிருந்தது. குருவின் உபகாரத்தால் சிரசைக் கடப்பதை 'என்பு நைந்து உருகி' என்று கூறப்பட்டுள்ளது.

நெக்கு நெக்கேங்கி - தேகத்தின் கட்டுவிட வேண்டும் என்றேங்கி.

அன்பெனும் ஆறு கரையது புரள — திருவண்டப்பகுதி
"ஆயிடை வானப் பேரியாற் றகவயிற்
..........................................
..........................................
அண்டத் தரும்பெறல் மேகன் வாழ்க"

நன்புலன் ஒன்றி - இந்திரியங்கள் புறஞ் செல்லுதலை விடுத்துச் சிதாகாயத்தில் ஒன்றிய மெய்ப்பாடுகள்.

உரை தடுமாறி; உரோமஞ் சிலிர்க்க ஊர்த்துவ சகஸ்ரதளம் மேல் நோக்க மனமண்டலம் ஒளிமய மாக, அப்பார்வையில் மகிழ்ச்சியும் புறக்கண்ணில் நீர்ததும்பலும் உண்டாவதில் சிவத்தினிடம் குறைவில்லாத அன்பு நாளுக்கு நாள் பெருகிவரும்.

இத்தகைய அடியானைச் சிவம் தாய்போல வளர்க்கும். பக்தன் கேட்டவற்றில் திடநம்பிக்கை கொண்டுள்ளவன். ஞானி. தன்னக நோக்கில் சத்தாகிய தன்னுண்மையைப் பார்ப்பவன். கேட்டதைவிடப் பார்த்ததுமேல் என்ற உண்மையைக் கொண்டுணர்க.

ஹிருதயம், ஆத்மா தனது இயல்புடன் விளங்கும் ஊர்த்துவ சகஸ்ரதளமாகும்.

**மெய்தரு வேதிய னாகி வினைகெடக்**
**கைதர வல்ல கடவுள் போற்றி:**

சத்தியோசாத முகம் கீழும் ஆளுகின்றது. மேலும் ஆளுகின்றது. தேகமேதான் என்றவர்க்கு மேல்முகமாக சந்திர மண்டல விஷயம் விளங்குவதில்லை. குரு சகாயம் நீ தேகமல்ல, ஆகாய வடிவினன் என்று காட்டப்பட்டதேயாகும். குரு காட்டிய நெறியில் சிரசுக்குமேல் தியானம் வலுவடைவதில் மூலாதார வழியாகச் சிவம் உட்புகுந்து சிரசால் வெளிப்படுகின்ற உணர்வு அமையும்.

உண்மையை உணர்த்தும் மாற்றத்தைச் செய்யும் இயல்புடையவனாகி வினைகள் கெடும் வண்ணம் உதவுகின்ற இறைவா உன்னை வணங்குகின்றேன்.

வேதம் நான்கை உணர்த்தும் ஒரு சங்கேத பாஷை. மூலாதாரம் நான்கிதழ்களை உடையது பற்றி அதை வேதம் எனப்பட்டது. மூலாதாரத்திலிருந்து வேதகோஷம்போல் சிரசில் வெளிப்பட்டுச் சீடனை ஆட்கொண்டு சீவனில் இருளை மாற்றிய குருவால் ''மெய்தரு வேதியனாகி வினைகெட'' என்று கூறப்பட்டது. கைதருதல் என்றால், உதவுதல் என்று பொதுப்பொருள்.

பூவார் சென்னி மன்னனெம்
 புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வாய்
 உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா என்னப் பட்டன்பாய்
 ஆட்பட் டீர்வந் தொருப்படுமின்
போவோம் காலம் வந்ததுகாண்
 பொய்விட் டுடையான் கழல்புகவே.

புகவே வேண்டா புலன்களில்நீர்
 புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம்
 வேண்டா போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து
 நாயே அனைய நமையாண்ட
தகவே யுடையான் தனைச்சாரத்
 தளரா திருப்பார் தாந்தாமே.

— யாத்திரைப்பத்து

**ஆடக மதுரை யரசே போற்றி:**

ஆடகம் - கூத்தாடுமிடம்.

மதுரையால் உணர்த்தப்பட்ட துவாதசாந்த வெளியில் நடிக்கும் அரசே போற்றி.

துவாதசாந்தமே ஆன்மாவுக்கும் இறைவனுக்கும் உரிய இடம்.

**கூடல் இலங்கு குருமணி போற்றி:**

கூடல் - கூடுதல், சேர்தல்.

சிரசில் சத்தியோசாதம், வாமதேவம், தத் புருடம், அகோரம் என்ற பகுதிகள் வளர்ந்து பூர்த்தியான பிறகே

ஈசானமுகம் விளக்கமாகிறது. இவ்விதமாக மூலாதாரம் மேலுள்ள ஐம்முகங்களும் ஒருங்கிணைந்தபோது குருமணியானவர் அமைகிறார்.

ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையும்
ஆகின்ற ஆதார மாறா றதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுவன் யானே.
— திருமந்திரம், 1847

ஆறு முகத்தில் அதிபதி நானென்றும்
கூறு சமயக் குருபரன் நானென்றுந்
தேறினர் தெற்குத் திருஅம்ப லத்துள்ளே
வேறின்றி யண்ணல் விளங்கிநின் றானே. 2758

ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமுங்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. 2760

**தென்றில்லை மன்றினு ளாடி போற்றி:**

பஞ்சப் பிர்மத்தில் தெற்கு முகங் கொண்டது அகோரர் ஆவர். இவரே இருதயத்திற்கு அதிபர். அகோர ஹ்ருதயாய நம என்பது இவர் மந்திரம். இப்பகுதியில் உள்ள ஒளியே தேக தர்மத்தைச் செவ்வையாக நடக்கும்படி ஹ்ருதயத் துடிப்பை உடலிலும் தென்புற மூளையில் அறிவிலுமாக இருந்து ஆகாயமாக நடித்துக் கொண்டுள்ளது. அவ்வாறு நடிப்பவனைப் போற்றுகிறேன்.

**இன்றெனக் காரமு தானாய் போற்றி:**

குருவினால் உணர்த்தப்பட்ட பிறகு இப்போது அரிய அமுத மயமானவனே உன்னைப் போற்றுகிறேன்.

**மூவா நான்மறை முதல்வா போற்றி:**

மூவுதல் - முடிதல்.

முடிவினையடையாத அதோமுக்ச் சக்கரத்தில் விளங்கும் முதல்வா உன்னைப் போற்றுகிறேன்.

அதோமுகங் கீழண்ட மான புராணன்
அதோமுகந் தன்னொடும் எங்கும் முயலுஞ்

சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
அதோமுகன் ஊழித் தலைவனு மாமே. **524**

அதோமுக மாமல ராயது கேளும்
அதோமுகத் தாலொரு நூறாய் விரிந்து
அதோமுக மாகிய அந்தமில் சத்தி
அதோமுக மாகி அமர்ந்திருந் தானே. **525**

சத் ஒமுகத் தொண் மலர்க்கண்ணிப் பிரானும் - சகஸ்ரதளத்தில் விளங்குபவனும் சத்தாகிய ஓங்கார வாச்சியனும்,

**சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி:**

*ரிஷபத்தைத் தனது வெற்றிக் கொடியாகக் கொண்டுள்ள சிவனே போற்றுகிறேன். ரிஷபம் என்பது சீவனின் விந்து மண்டலமாகும். ஒளி ஞானமே சீவர்களுக்குச் சீவயாத்திரையில் வெற்றியைக் காட்டும் முன்னோடியாகும். கொடியின் வருகை, படையின் வருகையைப் புலப்படுத்துவதுபோல இதுவே அருள் சத்தியின் விளக்கம் என்று கூறுவர். சிவவொளி தோன்றின உடன் இருள்மயமான தத்துவங்கள் கெடும் என்பதுபற்றி 'வெல் கொடி' எனப்பட்டது. சிவனார் கொடி தோல்வியைக் காணாது.*

சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடிகூறாய் - சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி ஏர்காட்டும்
கோதிலா ஏறாங் கொடி. — *திருத்தசாங்கம்*

**மின்னா ருருவ விகிர்தா போற்றி:**

*மின்னற் பிரபையில் வெளிப்படுவது பிரணவத்தின் மகர கலையாகும். இது உருத்திரர் நிலையாகும். இதற்குப் பெயர் விடகலை என்பர்.*

விடகலையாம் மகாரம் நிறம் மின்னொளி மாத்திரையே
விளம்பியிடில் ஒன்றாகும் மிகுமாயா தத்துவத்துடன்
மருவியெங்கும் வியாபகம் அவ்ஆறத்துவாக் குயர்தேவர்
உருத்திரன் அங்கு உவந்திருப்பன் தாலு.
— *பிராசாத தீபம்*

*இது கண்ணால் பார்க்கக் கூடியதேயாகும். தீக்ஷையில் விளங்கும்.*

விகிர்தன் - வேறுபாட்டைச் செய்பவன். இரு மின்னற் பிரபைக்குப் பிறகு புருவமத்தியம் விளக்கம் பெற்று ஒளிமண்டலம் உதிக்கும். இருளிலிருந்து ஒளிக்கு அழைத்துச் செல்பவரே போற்றுகின்றேன்.

**கன்னா ருரித்த கனியே போற்றி:**

கல்லில் நார் உரிப்பது என்றது ஒரு பழமொழி. கல்லில் நார்ப்பொருள் இல்லை. அதனால் அதனின்றும் நார் வெளிப்படாது. இங்குக் குருவினால் உணர்த்தப்பட்ட போது கருங்கல் போன்று, இருண்டு விளங்கிய மனமண்டலம் (அண்டகோசம்) சிறிது சிறிதாக ஒளிவிடுவதில் சீவனைப் பக்குவம் செய்து அவ்வொளியில் விளங்குபவனே உன்னைப் போற்றுகிறேன். இதைப் பரை இயல்பு என்பர்.

அப்பரைதான் உட்பரனுக் ககலா தாகும்
  ஆதிஅந்தமும் பரக்கும் அகன்மறைப்பை யுடைத்தாம்
ஒப்பில் சூக்குமமாகும் எங்கும் தானாகி
  ஒருவரால் அளப்பரிதாய் ஒளிரும் அதன்செயல்தான்
எப்பொழுதும் கருணை வடிவாகக் சாந்தம்
  இயல்பாகும் இச்சை ஞானம் கிரியைக்கிடமாம்
கப்பிலா ஓங்கொளியாம் ஆங்கதுதான் இறைவன்
  கருதுவடிவாம் என்னும் கற்றவர் நூற்கருத்தே

— *தத்துவப்பிரகாசம்*

**காவாய் கனகக் குன்றே போற்றி**
**ஆவா என்றனக் கருளாய் போற்றி:**

பொன்னொளி புத்தி தத்துவத்திற்கு உரியது. புத்தியில் சிவம் பிரகாசித்தலால் கனகக் குன்றா யிற்று. பொன் மலையாய் விளங்குபவனே உன்னைப் போற்றுகிறேன். பொன்னொளியைக் கண்டவர் வியப்புடன் தன்னையும் அவ்விதம் மாற்றியருள்க. உன்னைப் போற்றுகிறேன். ஆவா - ஆச்சரியக் குறிப்பு.

**படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி**
**இடரைக் களையும் எந்தாய் போற்றி:**

யாவற்றையும் படைப்பவனே, காப்பவனே, அழிப்பவனே, உன்னைப் போற்றுகிறேன். பிறவித் துன்பத்தை நீக்கியருள் புரிகின்ற எந்தையே போற்றி.

**ஈசா போற்றி இறைவா போற்றி**
**தேசப் பளிங்கின் திரளே போற்றி:**

எப்பொருளையும் உள்நிறைந்து அருள்பவனே போற்றி.

ஈசன் - எப்பொருளையும் ஆள்வோன்.

இறைவன் - தங்கியிருப்பவன்.

பளிங்கின் ஒளிபோன்ற திரட்சி ஒளியில் விளங்குபவனே போற்றி. தேசு - ஒளி. சதாசிவரது ஈசான முகத்தொளி மின்னல் போன்ற வெண்ணிற ஒளி யாகும்.

**அரைசே போற்றி யமுதே போற்றி**
**விரைசேர் சரண விகிர்தா போற்றி:**

தலைவனே போற்றி.

சாவாமை தரும் மருந்தே போற்றி.

உலகத்திலுள்ள உயிர் வித்துக்களைத் தனது திருவடியில் கொண்ட இறைவா போற்றி.

விரை - வித்து.

**வேதீ போற்றி விமலா போற்றி:**

தாழ்ந்தவற்றை உயர்பொருளாக மாற்றுபவனே போற்றி.

பரிசுத்தமானவனே போற்றி.

**ஆதீ போற்றி அறிவே போற்றி:**

உலகமுதற் காரணமானவனே போற்றி. அறிவுருவானவனே போற்றி.

**கதியே போற்றி கனியே போற்றி:**

வீட்டு நெறியானவனே போற்றி.

விரும்புபவர்க்குக் கனிபோன்று சுவையளிப் பவனே போற்றி.

**நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி:**

ஆகாய கங்கை நதி சேர்ந்த சிவந்த சடையுடைய நம்பத்தக்கவனே போற்றி. சுவாதிட்டான நிலையி லிருந்து

மேனோக்கிய உணர்வே ஆகாயக் கங்கை யாகும். விரும்புபவர்க்கு இக்கங்கையை அவர் களிடமும் பெருகும்படிச் செய்பவன். நம்பன் - விரும்பத்தக்கவன்.

பின்வரியில் கருத்தைத் தெளிவாக்குதல் காண்க.

**உடையாய் போற்றி யுணர்வே போற்றி:**

எல்லாப் பொருள்களையும் உடையவனே போற்றி. உயிர்களுக்கு உணர்வு மயமானவனே போற்றி.

உணர்வு - பொருளை அடைந்து அனுபவிப்பதில் சத்தம், பரிசம், ரூபம், இரசம், வாசனை என்ற உணர்வு களை சீவனுக்கு உணர்த்துபவன் சிவமே. அவ்வுணர்வு களை வெறுப்படையச் செய்வதும் சிவனே. அவன் சீவர்களின் தகுதிக்கேற்ப உணர்வுகளைப் பெருக்கியோ சுருக்கியோ ஆட்கொள்ளும் உணர்வுப்பயனாக உள்ளான்.

**கடையேன் அடிமை கண்டாய் போற்றி:**

யாதொரு தகுதியும் அற்ற கீழ்த்தரமான என்னை அடிமை கொண்டவனே, உன்னைப் போற்றுகிறேன்.

கடுந்தவம் புரிவார்க்கும் காணப்படாதவனே! தன்னை அடிமை கொண்டதால் 'கடையேன் அடிமை கண்டாய்' என்றார்.

உலவாக் காலம் தவம்எய்தி
  உறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்
பலமா முனிவர் நனிவாடப்
  பாவி யேனைப் பணிகொண்டாய்.

— திருச்சதகம்

**ஐயா போற்றி அணுவே போற்றி:**

யாவர்க்கும் உயர்ந்தவனே போற்றி.

மகா நுண்ணியனே போற்றி.

**சைவா போற்றி தலைவா போற்றி:**

சிவம் -ஆனந்தம். சைவன் - சிவத்தைச் சார்ந்தவன். அதாவது ஆனந்த மயன்.

ஆனந்த மயமானவனே போற்றி.

எவ்வுயிர்க்கும் தலைவா போற்றி.

**குறியே போற்றி குணமே போற்றி:**

அனற்பிழம்பாகிய இலிங்க வடிவினனே போற்றி (காமாக்கினியில் விளங்குபவன்). அவனே குருமண்டல மாகவும் விளங்குபவன்.

நிலைபெறு சுவாதிட் டான நின்சிவ
அனலும் நீயும்
இலகிய தன்மை நெஞ்சத்து இறைஞ்சுவம்
உரைக்க மாட்டோம்
உலகம் அப்பார்வை செந்தீக்கு உருகில்
நின்கருணை பொங்கி
அலைஎறி அமுதப் பார்வை அளித்து
இனிது அருளும் அம்மே.

— ஆனந்தலகரி

சீவர்களுக்கு வளர எண்ணிறந்த குணங்களைப் பொருத்துபவனும் அவைகளிலிருந்து மீட்பவனும் சிவமேயாதலால் அவனைக் குணசொரூபனே போற்றி என்னப்பட்டது.

**நெறியே போற்றி நினைவே போற்றி:**

இவ்வரிக்குப் பொருள் ஒரு புத்தகம் எழுதி விடலாம்.

நெறியை நூலுணர்வால் அறிவது முதல் நிலை. அதைத் தம் அறிவில் அனுபவமாய்க் காண்பதில் உள்ளிருந்து உணர்த்துபவன் சிவமேயாகும். எந்தக் குருவாலும் அதைச் சீடனுக்கு அளிக்க முடியாது. உள்ளிருந்து உணர்த்தும் சிவநெறியே முடிவானது.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

— சிவஞானபோதம் 10ஆம் சூத்திரம்

**முத்தி நெறியாக விளங்குபவனே போற்றி.**

இதற்கு வேண்டிய உபாயம் நினைவு ஒன்றுதான் முக்கியமானது. அந்த நினைவாக இருந்து ஊக்குபவனும் அவனேதான் என்பதால் நினைவிலிருந்து சீவர்களை உய்விப்பவனே போற்றி.

யானெனு மதனை நீக்கி யேகமாய் நின்ற ஞானம்
ஆனவவ் வொளியாய்த் தோன்றுமது முத்தி வித்துமாகித்

தேனமர் கரிய கூந்தற் செய்யவாய் பரந்து நீண்ட
மானமர் விழியாய் மேலாம் யோக வத்தக்முமால்
— தேவிகா லோத்திரம்

சக்கர நாடி சான்றோர்வழித் தெய்வ ரூபமூல
அக்கர மண்டலங்கண் ஞானம் போலழ கின்றாகும்
மக்கடோய் மாயா விச்சை மந்திரம் பிராணாயாமம்
தொக்கசீர் ஞானஞ் சேரத் தொடங்குவார் தொடங்கலாகா.
— தேவிகா லோத்திரம்

மந்திரஞ் செபந்தியானம் பூசனை வணக்கம் வேண்டா
அந்தமிலாத முத்திக் குபாயமே அறிய வேண்டும்
சிந்தனை புறமே செல்லிற் றுயரமே திரியமீட்கின்
பந்தமாந் துன்ப நீங்கிப் பரமான இன்பம் சேர்வர்.

புறனகம் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளுமில்லை
திறனுடை யுருவ மெலாந் தானாகித் தேக மின்றாய்
அறன்முறை யடங்கு ஞான யோகினா லறியப்பட்ட
விறன்மலி ஞானானந்த மேன்மையாய் விளங்கா நிற்கும்

எந்த ஆருயிர் யாதோர் பொருளினைச்
சிந்தையாற் பற்றிக் காரியஞ் செய்திடின்
அந்த யோனிய தாமென் றறிவினால்
பந்தமில் பொருள் பற்றுதல் தக்கதே.
— தேவிகா லோத்திரம்

விவகார வேளைஎல்லாம் சமாதி என்றால்
விகற்பம் அன்றோமனம் அலைந்துவிடாதோ விட்டால்
அவதானம் நழுவும்அன்றோ என்றாய் ஆகில்
அதற்கொரு திட்டாந்தங்கேள் ஆசைகொண்டு
நவம்ஆகப் பரபுருடன் தன்னைக்கூடி
நயந்தசுகம் அநுபவித்த நாரி நெஞ்சம்
தவம்ஆக மனைத்தொழில்கள் செய்யும் போதும்
தழுவி அநுபவித்த சுகம்தனை விடாதே.
— கைவல்லிய நவநீதம்

சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத்
தானாக்குந் தலைவனவர் தாஞ்செய்வினை தன்னால்
நலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானாய்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்

உலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே
யுள்நின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்றும்
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்றும்
நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந் தானே.

— *சிவஞானசித்தியார்*

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுத றவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
யெறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே யிருப்பர்.

— *சிவஞான சித்தியார் 10*

*குஞ்சிதபாதம் - கூத்தப் பெருமானின் தூக்கிய திருவடியை யுணர்த்தும். சந்திர மண்டல ஞானம் ஒளி ஞானமாகும்.*

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்
ஔடதமந் திரமுடையார்க் கருவிடங்க ளேறா
எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக்கு
இருவினைகள் சென்றணையா முற்செய்வினை யிங்குத்
தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமுங் கந்தித்துச் சுழலு மாபோன்
மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கு மெல்லா
மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே.

— *சிவஞான சித்தியார்*

**வானோர்க் கரிய மருந்தே போற்றி:**

*வானோர் என்பவர் ஆகாய மண்டலவாசிகள். அவர்களில் தேவர் அசுரர் போன்றவர் விகாச முறையில் மனித ஜன்மம் எடுக்கக் கீழ்நோக்கி வருபவர்கள். இவர்கள் மனித தேகம் எடுத்துச் செய்யும் கருமத்தினால் ஏறு முறையில் சிவத்தை அறிந்து உய்யவேண்டும். வானோர் விருப்ப மெல்லாம் சுகபோகம் ஆகையால் சிவத்தை அறியமாட்டார்கள். வானவர்கள் அறிவுக்குப் புலப்படாத அமுதமே உன்னை வணங்குகின்றேன்.*

**ஏனோர்க் கெளிய இறைவா போற்றி:**

வானவர்கள் அல்லா மண்ணுலக வாசிகளுக்கு எளிமையில் விளங்கும் இறைவா போற்றி.

**மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை**
**ஆழா மேயரு ளரசே போற்றி:**

இருபத்தொரு தலைமுறையில் உள்ள சுற்றத்தார்களை வலிய நரகத்தில் ஆழ்ந்து கிடக்காமல் அருளுகின்ற தலைவா போற்றி.

தந்தைவழி ஏழு தலைமுறை, தாயின் வழி ஏழு தலைமுறை, பெண் கொடுத்த மாமன் தலைமுறை ஏழு.

ஆக 21 தலைமுறையாகும். மனைவி வழி என்றபோது மணங்கொண்ட ஞானிகள் என்பதை அறிக.

**தோழா போற்றி துணைவா போற்றி:**

சிவயோகத்தில் யோகி சிவத்தைத் தனக்குத் தோழனாகவும் துணைவனாகவும் கொண்டுள்ள படியால் தோழா போற்றி, துணைவா போற்றி என்று கூறப்பட்டது.

சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகஞ் சாராத வன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே.

— திருமந்திரம் 122

அளித்தான் உலகெங்குந் தானான உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே. 123

நவம் - தோழமை.

**வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி:**

வாழ்வின் லக்ஷியமே போற்றி.

வாழ்வில் சேமித்து வைத்த க்ஷேமநிதியே போற்றி.

**முத்தா போற்றி முதல்வா போற்றி**
**அத்தா போற்றி யரனே போற்றி:**

சிவம் சீவர்களுடன் கலந்திருந்தாலும் பாசங் களினால் பற்றாத நிலையிலிருந்து கொள்ளும் முத்து போன்ற ஒளிமயமானவனே போற்றி. சீவர்களின் மலத்தை அகற்றும் தலைவா போற்றி.

தந்தையே போற்றி.

**இருளை சம்ஹரிப்பவனே போற்றி.**

சீவர்களின் இருள்மல நீக்கம் சிவவொளியாலே நடைபெறுவதால் சிவத்தை முத்தனாகவும் முதல் வனாகவும் அத்தனாகவும், அரனாகவும் கூறப் பட்டுள்ளது.

**உரையுணர் விறந்த தொருவ போற்றி**
**விரிகட லுலகின் விளைவே போற்றி:**

அறிவு நூல்கள் இறைவனை அடையும் நெறியைப்பற்றி விளக்கிக் கூறும். அவற்றுள் பல படி நிலைகளும் விளக்கப்படும். அவைகள் சீவன் என்பதும் சிவம் என்பதும் வேறு வேறாக உள்ள உணர்வின் எல்லையின் வரை அழைத்துச் செல்லும். சீவனும் சிவனும் ஒன்றான பிறகு ஏற்படும் அநுபவத்தை விளக்காது நிற்கும். அது ஒரு பெண் மணாளனை நாடி அடைந்த சுகத்தை எவ்விதம் பிறர்க்கு எடுத்து இயம்பக்கூடும் என்பது போலவேயாகும்.

அரைசனே அன்பர்க் கடியனே னுடைய
அப்பனே ஆவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின்று உணர்வதோர் உணர்வே
யானுன்னை உரைக்குமா றுணர்த்தே.
— கோயில் திருப்பதிகம்

மதுவுண்ட வண்டு போலும்
வல்விடம் முதிர்தல் போலும்
திதமுற விகாரங் கெட்டுத்
தெளிந்தடங் குவையே யாயின்
அதுவிரிந் தகல வொட்டா
அதுசாயுச் சியத்த தாகும்

கதியது வந்த வர்க்காம்
கணக்கையார் கணிப்பார் தாமே.

— தத்துவப் பிரகாசம்

இதைத் துரியாதீதம், பரமானந்தமேலீடு என்ற பேர்களால் கூறுவர்.

இந்த நிலையில் வேதாந்தம் ஏகம் பிர்மம் என்று கூறி வலியுறுத்துகிறது. சித்தாந்தம் பொருள் இரண்டு என்றும் கலப்பினால் ஒன்று என்றும் முடிவு கூறும்.

இன்று தாடலையோ டேகால்
தலையினுள் இருந்தாலும்
ஒன்றதன் றிரண்டு மன்றது
இரண்டொன்றும் உறுவ தொன்றாய்
நின்றதோ ரானந் தந்தான்
நிலையென அழுந்து வார்க்கு
அன்றது பரமா னந்தம்
அதிற்சுகம் அழுந்த லாமே.

— தத்துவப் பிரகாசம்

எல்லாம் முடிந்த இடம் எவ்விதம் ஏக வஸ்துவாக உள்ளதோ அதுபோல விரிந்த கடலால் சூழப்பட்ட உலகில் உள்ள யாவற்றிற்கும் பிறப்பிடமும் அதுவேயாகும். அத்தகைய சிவத்தைப் போற்று கிறேன்.

**அருமையி லெளிய அழகே போற்றி**
**கருமுகி லாகிய கண்ணே போற்றி:**

புறத்தே காண்பவர்க்கு அருமையானவனாகவும் அகத்தே காண்பவருக்கு எளியவனாகவும் சிறப்புடைய வனே போற்றி.

அண்டகோசத்தில் கார்மேகம் போன்ற இடத்தில் வெளிப்படுபவனே போற்றி. திருவண்டப்பகுதி வரி 65 முதல் 95 முடியப் பார்க்கவும்.

**மன்னிய திருவருள் மலையே போற்றி**
**என்னையு மொருவ னாக்கி இருங்கழல்**
**சென்னியில் வைத்த சேவக போற்றி:**

சிரசின்மேல் கருமேகம் போன்ற ஒளி ஆன்மாவின் இருள் நிலையாகும். அதில் விளங்கும் வெண்ணிற ஒளியே

அருள் என்று சித்தாந்த சாத்திரம் கூறும். நிலைபெற்ற திருவருளில் மலை போன்றவனே போற்றி; என்னையும் அவனது அடியார்களுள் ஒருவனாக்கி அவனது திருப்பாதத்தை எனது முடியில் வைத்தருளின வீரனே போற்றி.

உலகப் பொருள்கள் யாவும் அழிவினை யுடையவைகளாகும். இறைவன் திருவருள், மலைபோன்று நிலை பெறுவதாகும். "இருங்கழல் சென்னியில் வைத்த சேவகன்" என்பது முன்னர்த் திருமந்திரம் அடிதலை அறியும் திறங் கொண்டு விளக்கப்பட்டுள்ளது.

**தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி**
**அழிவிலா ஆனந்த வாரி போற்றி:**

உன்னை வணங்கியவர்களது துன்பத்தைக் களைபவனே போற்றி. என்றும் அழியாத இன்பக் கடலே போற்றி.

**அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி**
**முழுவது மிறந்த முதல்வா போற்றி:**

சிவம் உலகமாய் இருந்தாலும், உலகின் ஒடுக் கமும் தோற்றமும் நடைபெறுவதில் சிவம் பாதிக்கப் படவில்லை. அத்தகைய சிவனே போற்றி. உலகமும் அதை இயக்கும் பலகர்த்தர்களும் அழிந்த பிறகு தான் ஒருவனே தனி முதல்வனாக விளங்குபவனே போற்றி.

**விளக்கம்:**

சினிமாவில் காணும் அசைவுகளெல்லாம் அங் குள்ள வெண்திரையைச் சார்ந்தே நடைபெறுகிறது. வெண்திரை நிழற்படங்களைத் தன்னிடம் காட்டியும் அதன் வெண்ணிறம் அப்படியே உள்ளது கொண்டு அறிந்து கொள்க.

**மானேர் நோக்கி மணாளா போற்றி**
**வானகத் தமரர் தாயே போற்றி:**

மான் - உருவம்.

சகல உருவங்களும் சத்தியாகும். அத்தகைய உருவங்களைத் தன்னுள் அடக்குபவனே போற்றி.

மணாளன் - ஆண் மகன்.

ஆகாய மண்டலத்திலுள்ள தேவர்களுக்குத் தாய் போன்றவனே போற்றி.

**பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி**
**நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி**
**தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி**
**வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி**
**வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி**
**அளிபவ ருள்ளத் தமுதே போற்றி:**

பூமியில் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐந்து தன்மைகளுள் பரவியிருப்பவனே போற்றி. நீரில் ஓசை, ஊறு, ஒளி, சுவை என்ற நான்கு தன்மைகளுடன் நிறைந்திருப்பவனே போற்றி. நெருப்பில் ஓசை, ஊறு, ஒளி என்ற மூன்று தன்மை களுடன் விளங்குபவனே போற்றி.

காற்றிடை ஓசை, ஊறு என இரண்டு தன்மை களுடன் மிகுந்து விளங்குபவனே போற்றி.

ஆகாயத்தினிடை ஓசையாக மட்டும் தோன்றி யுள்ளவனே போற்றி.

அன்பினால் கனிபவருடைய மன மண்டலத்தில் அமுத மயமான ஒளியாக விளங்குபவனே போற்றி.

**விளக்கம்:**

இங்குக் கூறப்பட்ட முறை லயக்கிரமம் பற்றியதாகும். தேகதர்மம் இவ்வகையான ஐந்து பூதங் களாலும் ஆனது. சிரசுக்குமேல் உள்ள நிராதாரத்தில் வணங்குபவருக்குச் சிவம் நாத மயமாகத் தன்னை வெளிப்படுத்துவான். அந்த நாதத்தோடு ஒன்றிய வர்க்கு இறைவன் அமுதமயமானவன் என்பதே சைவசித்தாந்தங் கண்ட முடிவு நிலையாகும்.

**கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி**
**நனவிலும் நாயேற் கருளினை போற்றி:**

தேவர்கள் பல இன்பப் பொருளில் மனங் கொண்டவராகையால் சொப்பனத்திலும் தேவர் களுக்கு எட்டுவதற்கரியாய் போற்றி. நாய் போன்ற எனக்கு விழிப்பு நிலையிலும் அருள் செய்தவனே போற்றி. நாத சம்மியமும் அருள் ஒளியும் விழிப்பு நிலையில் காணக்கூடியது தான்.

**இடைமரு துறையும் எந்தாய் போற்றி:**

பிராண அபான சந்திப்பில் விளங்கும் என் அப்பனே! பிராண அபானக் காற்றில் அமைவது சுழி முனையாகும். சுழுமுனா நாடி மூல முதலாக சிரசு வரையில் வியாபித்துள்ளது. மூலாதாரத்தில் ஆரூரனாகவும், இருதயத்தில் தில்லைக் கூத்தனாகவும், சகஸ்ரதளத்தில் திருப்பெருந்துறை அரசாகவும் விளங்குபவர் ஒருவரே தான்.

**சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி:**

தனது சடையில் ஆகாய கங்கையைத் தரித்துள்ளவனே போற்றி.

ஆகாய கங்கை என்பது மூலாதார முதலாகச் சிரசை நோக்கிப் பாயும் உணர்வென்பது முன்னர் விளக்கப் பட்டுள்ளது.

**ஆரூ ரமர்ந்த அரசே போற்றி:**

மூலாதாரத்தில் ஒளிமயமாக விளங்கும் தலைவா போற்றி.

ஆரூர் முன்னமே விளக்கப்பட்டுள்ளது.

**சீரார் திருவை யாறா போற்றி:**

நாதமும் ஒளியும் பொருந்தி ஐந்து இந்திரிய அறிவுகளும் பொருந்துமிடமான ஊர்த்துவ சகஸ்ர தளத்தில் விளங்குபவனே போற்றி. இதுவும் முன்னர் விளக்கப் பட்டுள்ளது.

**அண்ணா மலையெம் அண்ணா போற்றி:**

முன்னர் பூவணத்தில் விளக்கப்பட்டுள்ளது காண்க.

பிரணவத்தில் மகரகலை தாலு மூலத்தில் உதிப்ப தாகும். அண்ணா என்பது உட்புற நாக்குக்குப் பெயர். அதற்கு மேல் உள்ள தலைப்பகுதி சிரசாகும். அங்குள்ள மேனோக்குதலையுடைய நாவில் விளங்கு பவனே போற்றி. அண்ணா விளங்கப்பட்டால் அதன் செயல் மேனோக்கு தலைச் செய்யும். மேல் நோக்குதலைச் செய்பவனே போற்றி என்றும் பொருள் கொள்ளலாம்.

**கண்ணா ரமுதக் கடலே போற்றி:**

அக்கண்ணின் தோற்றத்தில் ஒளிக்கடலாக விளங்கு பவனே போற்றி.

**ஏகம் பத்துறை எந்தாய் போற்றி**
**பாகம் பெண்ணுரு வானாய் போற்றி:**

முன்னர் விளக்கப்பட்டுள்ளதேயாகும்.

சுழுமுனாநாடியில் இடாநாடியும் பிங்கலா நாடியும் பொருந்துவதில் சிவமாகவும் சத்தியாகவும் விளங்கு பவனே போற்றி.

சுழுமுனா சிரசின்மேல் அனுபவிப்பவருக்கு விந்து நாதமாகிய இருவகைத் தன்மையும் பொருந்தி விடுவதில் அர்த்தநாரி யுருவில் ஆணாகவும் பெண்ணாகவும் விளங்குவதாய்க் கூறப்பட்டுள்ளது.

**பராய்த்துறை மேவிய பரனே போற்றி:**

மேலான ஆராய்ச்சிக்கு அறிவில் விளங்கும் இறைவனே போற்றி.

பர+ஆய்த்துறை.

**சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி:**

சீவர்களுடைய சிரத்தையே தனது கல்விச்சாலையாகக் கொண்ட சிவமே போற்றி. அடித்தலை அறியுந்திறங்கூறல் கொண்டு அறிக.

**மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி:**

இவ்விடத்து உன்னையன்றி மற்றொரு பற்றையும் நான் அறிந்திலேன். ஆதலின் போற்றுகிறேன்.

**குற்றா லத்தெம் கூத்தா போற்றி:**

இதுவும் முன்னர் விளக்கப்பட்டதே.

குறுமையையுடைய நீலவொளியில் நடிப் பவனே போற்றி.

**கோகழி மேவிய கோவே போற்றி:**

இதுவும் முன்னர் விளக்கப்பட்டதே. வீணாத் தண்டில் விளங்கும் அரசே போற்றி.

**ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி:**

இதுவும் முன்னர் விளக்கப்பட்டதேயாகும்.

இவ்வுடலில் ஊர்த்துவ சகஸ்ரதளத்தில் விளங்குவது உபசாந்த நிலையாகும். அங்கு எல்லாத் தத்துவங் களும் சேட்டையன்னியில் ஒடுங்கி விடுவதால் ஈங்கோய் மலையாகக் கூறப்பட்டது. அங்கு விளங்கும் எந்தையே போற்றி.

ஆறா றமைந்தாண வத்தையுள் நீக்குதற்
பேறான தன்னை யறிதற்பின் றீர்சுத்தி
கூறாத சாக்கிரா தீதங் குருபரன்
பேறாம் வியாத்தம் பிறழுப சாந்தமே.

— *திருமந்திரம் 2509*

**பாங்கார் பழனத் தழகா போற்றி:**

பழனம் - விளைநிலம், வயல்.

சுவாதிட்டான சக்கரத்தின் நிலை மாற்றமே வாமதேவரருளால் ஆவது.

பாங்கு - தோழமை.

தோழமை நெறியில் ஒளிமயமாக விளங்கும் வாமதேவரே போற்றி.

பரியங்கயோகம், ஆகாயப் பேறு திருமந்திரம் பார்க்க விளங்கும்.

வாமம் - அழகு.

**கடம்பூர் மேவிய விடங்கா போற்றி:**

முன்னர்க் கடம்பூர் விளக்கம் கூறப்பட்டுள்ளது.

விடங்கன் - இயற்கையாய் அமைந்த இலிங்கம் - காமுகன்.

இது ஆண் குறியைப் பற்றிய விளக்கமே. அங்கு காமேஸ்வரனாக விளங்கியவனே போற்றி.

காமத்தில் செலுத்துபவனும் அதிலிருந்து மீட்பவனும் அவனேதான்.

**அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி**
**இத்தி தன்னின் கீழிரு மூவர்க்**
**கத்திக் கருளிய அரசே போற்றி:**

உன்னை எப்படி எப்படி விரும்பி அடைகின்றார்களோ அப்படி அப்படியே அருள் செய்கின்ற தந்தையே வணக்கம்.

இத்தி என்பது மூலாதாரத்தை உணர்த்தும் இகரச் சுட்டு, தீ என்ற சொல்லும் சேர்ந்து இத்தி ஆயிற்று. தீ என்பது கடை குறைந்து தி ஆயிற்று. மூலாதாரம் முதலான ஆறு ஆதாரங்களும்கீழ் முகங்கொண்டு விளங்குபவையாகும். சீவனின் புற நோக்கமே உள்ள வரையில் அவைகளிடம் மேனோக்கும் ஆற்றல் இல்லை. அத்தகைய ஆறு ஆதாரங்களில் மேனோக்கும் தன்மை அமைந்தே ஊர்த்துவ சகஸ்ரதளம் உருவாகிறது. அதனால் அ-திக்கு என்பது தூரத்திலுள்ள சிவாதித்தனையோ சோம மண்டலத்தையோ குறிப்பதாகக் கொள்ள வேண்டும். அப்படியாகும்போது ஆறாதாரங்களின் செய்கைகளையும் ஊர்த்துவ முகமாகச் செய்த அரசே போற்றி. சிவகலையில் இந்த நிலைக்கு ஊர்த்துவ காமினி எனப் பெயர்.

முத்திக்குழன்று முனிவர் குழாம் நனிவாட
அத்திக்கருளி அடியேனை ஆண்டு கொண்ட.
— திருத்தெள்ளேணம்

**தென்னா டுடைய சிவனே போற்றி**
**எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி:**

எங்கும் வியாபித்துள்ள இறைவனுக்கு ஒரு மைய நிலை அமைத்த பிறகு அல்லவா அதிலிருந்து திக்குகளைப் பிரிக்க முடியும்? அது புராணக் கூற்றாகுமே தவிரப் பகுத்தறிவுக்குப் பொருந்தாது. சீவனின் விருப்பப்படி அருள் செய்பவன் இறைவன். சீவன் பந்த விகாரங்கட்குட்பட்ட மூலாதாரத்தின் வழி இயங்க விருப்பம் உள்ளவரையில் இறைவன் சதாசிவரின் தென்முகமான அகோரம் என்ற திக்கிலிருந்து செயற்படுவதை ஊக்குவிக்கின்றார் என்பது பொருள். இதுவே தெற்கு நோக்கிய முகம். இவரே இருதயத்தின் செயலுக்கு அதிபர் என்பதை அறியவும். அகோர இருதயாய நம என்று அங்க மந்திரத்தையும், பிரம மந்திரத்தையும் சேர்த்து வைத்துள்ளனர்.

இவர் இருதய சக்கரத்தை ஊர்த்துவ முகமாகத் தொழில்பட இயக்கில் தேக தர்மம் நிலைகெட்டுச் சீவனின் தேகத்தை விட்டுப் பிரிந்து எல்லாத் தத்துவங்களையும் தனது ஆளுகைக்குள்ளாக்கிவிடும். இது துரியாதீத நிலையாகும். தேகத்தைச் செயல்படுத்துவதும் அகோரரே தான். செயலை நிறுத்தி ஈசானனின் ஆளுகைக்கு விடுவதும் இவரேதான். தேகத்தை இயக்கும்போது தென்னாடுடைய சிவமாகவும் எல்லா தத்துவங்களை இயக்கி நடத்தும்போது எந் நாட்டிறைவனாகவும் உள்ள சிவமே போற்றி.

**ஏனக் குருளைக் கருளினை போற்றி**
**மானக் கயிலை மலையாய் போற்றி:**

ஏனக் குருளை - பன்றிக்குட்டி.

தேகத்தில் உள்ள நரம்பின்கீழ் நோக்கிய ஆற்றல்களை முழுதுங்கெடாமல் வேண்டிய அளவு வைத் திருப்பவனே போற்றி.

விளக்கம்:

சுழுமுனா நாடியின் வழியாகச் சத்திநிலை மேல் நோக்கினும் கால்கள் அடிவயிறு முதலான பிரதேசங் களுக்குச் செயல் கெடாமல் வைத்திருப்பவன் சிவமேதான். தாய்ப்பன்றியாக உருவகிக்கப்பட்டது காம வாயுவாகும். காம வாயுவின் வீரியம் போயினும் அதன் மறு காரியங்களான சிறுநீர் பிரித்தல், மலம் போதல் முதலியவைகளுக்கிடையூறு இன்றி நிர்வாகம் செய்தும் என்ற கருத்து.

ஏவுண்ட பன்றிக் கிரங்கிஈசன்
எந்தை பெருந்துறை ஆதிஅன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த
கிடப்பறி வார்எம்பி ரானாவாரே.

— திருவார்த்தை - திருவாசகம்.

ஏனம் என்பது காம வாயுவின் உருவகம். ஏனக் குருளை - அப்பிரதேசத்திலுள்ள நரம்புத் தொகுதிகள்.

மானக்கயிலை என்பது மகத்துவம் பொருந்திய சிரசின் மேல்பகுதியாகும். அங்குள்ள பிரணவ மலையில் விளங்குபவனே போற்றி.

**அருளிட வேண்டும் அம்மான் போற்றி**
**இருள்கெட அருளும் இறைவா போற்றி:**

அம்மான் - தந்தை, மாமன், கிருபை செய்ய வேண்டும் அம்மானே போற்றி. எனது அண்ட கோசத்தின் இருள் கெட அருளவேண்டும் தலைவா போற்றுகிறேன்.

**தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி**
**களங்கொளக் கருத அருளாய் போற்றி:**

நின்னடியவன் நான் தளர்ந்துள்ளேன். தனித் தவனுமானேன் வணக்கம். நின் ஞானசபைக்கண் என்னையும் ஒருவனாக ஏற்றுக் கொள்ளும்படி அருள் செய்வாயாக போற்றி.

களங்கொளக் கருதல் - நிலையாமையையுடைய பொருள்களை விட்டு நிலை பேறுடைய சிவத்தைப் பற்றுமாறு.

**அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி**
**நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி:**

அஞ்சாதே என்று இப்பொழுது அருள் செய்ய வேண்டும். நஞ்சு போன்ற இருட்டை விழுங்கி ஒளி மயமான அமுதத்தை அளித்தவனே வணக்கம்.

**அத்தா போற்றி ஐயா போற்றி**
**நித்தா போற்றி நிமலா போற்றி**
**பத்தா போற்றி பவனே போற்றி:**

அப்பனே வணக்கம். குருவே வணக்கம், என்று முள்ளவனே வணக்கம், குற்றமற்றவனே வணக்கம், அன்புடையவனே வணக்கம், பிறவாதவனே வணக்கம்.

**பெரியாய் போற்றி பிரானே போற்றி**
**அரியாய் போற்றி அமலா போற்றி:**

யாவர்க்கும் பெரியவனே வணக்கம், யாவர்க்கும் இறைவா வணக்கம், எவ்வகையாலும் அறிதற் கரியவனே வணக்கம். பாசமுள்ள சீவத் தொகுதியுடன் கலந்திருப்பினும் பாசமில்லாதவனே வணக்கம்.

**மறையோர் கோல நெறியே போற்றி**
**முறையோ தரியேன் முதல்வா போற்றி:**

சிருட்டியில் முதல் நிலை நாதமாகும். அதுவே லயக்கிரமத்தில் இறுதி நிலையாகும். எல்லா மந்திரங் களும் பிரணவத் தொனியில் முடியும். மந்திரயோகத் தின் வாச்சியப் பொருள் பிரணவத்தொனியேயாகும். இது ராஜயோகத்தில் தியானப் பொருளாகவும் அமையும். இவ்வகையாக நுண்ணாகாய வடிவில் நாத சொரூபமாக விளங்கும் நெறியில் சீவர்களை அழைத்துச் செல்பவனே போற்றி.

மாதவர் எல்லாம் மாதேவன் பிரான்என்பர்
நாதம தாக அறியப் படுநந்தி
பேதஞ்செய் யாதே பிரான்என்று கைதொழில்
ஆதியில் அந்நெறி யாகிநின் றானே.

— திருமந்திரம் 1542

ஆகாய பூதத்தில் சத்தம் ஒன்றே குணமாக விளங்கும். சாதகனின் தேகப்பற்றுக் குறைவதில் சிரசின் மேல் ஆகாயப் பூதம் சிறப்புற்று நாதத்தை எழுப்பும். தேகப்பற்றுக் குறையாத வரையில் நாதம் உதிக்காதது பற்றி மறையோர் கோல நெறியாயிற்று. முன்னர் நாதப் பெரும் பறையில் இது விளக்கப்பட்டுள்ளது.

வியக்தமாக அறியப்படாதபடியால் உன்னை எவ்விதம் புகழ்வது என்பதை நான் அறிய முடியவில்லை. வியக்தத்திற்கும் அவ்வியக்தத் திற்கும் தலைவா வணக்கம்.

**உறவே போற்றி உயிரே போற்றி**
**சிறவே போற்றி சிவமே போற்றி:**

உயிர்களுடன் உறவுகொண்டு அவற்றை வளர்ப் பவனே போற்றி.

உலகில் உள்ள உயிர்த்தொகுதிக்கெல்லாம் உயிருக் குயிராய் நிற்பவனே வணக்கம்.

உயிர்களுக்கு நன்மையையே செய்பவனே போற்றி.

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே

— கோயில் திருப்பதிகம்

சிறவு - நன்மை செய்பவன். மங்கலப் பொருளான வனே வணக்கம்.

**மஞ்சா போற்றி மணாளா போற்றி**
**பஞ்சே ரடியாள் பங்கா போற்றி:**

வெண்மேகம் போன்ற ஒளியில் விளங்குபவனே வணக்கம். தேகத்தில் பல சத்திகள் உள. அவை யாவும் ஆன்மாவினியக்கத்தினாலேயே இயங்குகின்றன. ஆன்மாவையே செலுத்துபவன் இறைவனான படியால், எல்லாச் சத்திகளின் தலைவா உனக்கு வணக்கம்.

செம்பஞ்சுக் குழம்பு பூசிய அழகிய பாதங் களையுடைய உமாதேவியின் பாகனே வணக்கம்.

**அலந்தே னாயே னடியேன் போற்றி**
**இலங்கு சுடரெம் மீசா போற்றி:**

நாயேனாகிய அடியேன் மிகவும் வருத்தப்பட்டு விட்டேன். என்னைக் காப்பாற்றுவாயாக வணக்கம்.

விளங்குகின்ற சுடர் வடிவானவனே எமது தலைவா வணக்கம்.

**கவைத்தலை மேவிய கண்ணே போற்றி**
**குவைப்பதி மலிந்த கோவே போற்றி:**

சிரசில் சோம சூரியாக்கினி என்ற மூன்று ஒளி யிடங்களில் விளங்குபவனே வணக்கம்.

அவை இடக்கண்ணின் மேல் ஈசானன், வலக் கண்ணின் மேல் பூவலம், பிடரிக் கண்ணின் மேல் சத்தியோ சாதம் என்பனவாகும்.

குப்பை சேரும் இடமான மூலாதாரத்தில் மிகவும் காணப்படுபவனாக உள்ள அரைசே வணக்கம்.

குவை - குப்பை - தேகத்தில் வேண்டப்படாதவற்றைத் தள்ளும் இடம் மலவாயிலாகும். அதுவே மூலாதாரச் சக்கரமாகும். அக்கினியின் இருப்பு நிலையுமாகும்.

இதுவே ஆரூர் என்ற பெயரால் கூறப்பட்ட விஷயமாகும்.

**மலைநா டுடைய மன்னே போற்றி**
**கலையா ரரிகே சரியாய் போற்றி:**

தேகத்திற்குச் சிரசு மலை போன்றதாகும். அங்கேயே அறிவுமயமாக இருந்து தேகத்தைச் செயல்படுத்தும் அரசே வணக்கம். கலை - சந்திரன். ஆர் - சூரியன். அரி - தீ. சோம சூரியாக்கினிச் சுடரில் தத்துவங்களையெல்லாம் அடக்கும் சிம்மம் போன்றவனே வணக்கம். அல்லது நிவ்ருத்தியாதிப் பஞ்சகலா சத்தியாய் ஆகாய வடிவில் விளங்குபவனே வணக்கம்.

**திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி:**

சிரசின்மேல் விளங்கும் பிரணவமலை (நிராதார கலைகள்) மலங்கள் கழுவப்பட்ட பிறகே விளங்குவது பற்றித் 'திருக்கழுக்குன்றிற் செல்வா போற்றி' என்றார்.

திருக்கழுக்குன்றத்துக்கு வடமொழிப் பெயர் வேதகிரியாகும். வேதகிரி என்பதும் பிரணவமும் ஒன்றுதான். நாத சம்மியத்தால் மலங்கழுவப்பட்ட பிறகு விளங்கும் செல்வம் சிவமேயாகும்.

**பொருப்பமர் பூவணத் தரனே போற்றி:**

பூவணம் என்பது அண்ணாக்குப் பிரதேசம் என்று முன்னமே விளக்கப்பட்டுள்ளது. அண்ணாக்குச் சிரசாகிய மலையில் உள்ளபடியால் சோதி வடிவாகிய பெருமானே வணக்கம்.

**அருவமும் உருவமும் ஆனாய் போற்றி**
**மருவிய கருணை மலையே போற்றி:**

அருவமான உயிரிலும் உருவாகிய உடலிலும் விளங்குபவனே வணக்கம். இவ்விதம் கருணை உள்ளம் கொண்டு எல்லாச் சீவகர்களிடமும் எழுந்தருளியுள்ள கருணை மலையே வணக்கம்.

**துரியமு மிறந்த சுடரே போற்றி**
**தெரிவரி தாகிய தெளிவே போற்றி:**

துரியாதீத நிலையில் விளங்கும் சுடரொளியே வணக்கம். துரியாதீதம் சென்றவர் இறைவனுடன் ஒன்றி எல்லா அறிவையும் அறியும் ஆற்றல் கொண்டவர். அல்லாதவர்க்கு அப்பேறு இல்லாதபடியால் தெரிவரிதாகிய தெளிவு என்று விளித்தார். அத்தகைய எல்லா அறிவையும் உடையவனே வணக்கம்.

**தோளா முத்தச் சுடரே போற்றி**
**ஆளா னவர்கட் கன்பா போற்றி:**

துளைக்கப்பட்ட முத்து விலைமதிப்பில் குறை வாகவும், ஒளிவிடும் தன்மையில் குறைந்தும் இருக்கும். அதுபற்றித் துளைக்கப்படாத முத்தின் ஒளிபோன்றவனே வணக்கம்.

உனது அடிமையானவர்க்கு எளிதில் அன்பினால் அடையப்படுபவனே வணக்கம்.

**ஆரா அமுதே அருளே போற்றி**
**பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி:**

தெவிட்டாத அமுதமே திருவருளே வணக்கம்.

ஆயிரம் திருநாமங்களால் வணங்கப்படும் பெருமானே வணக்கம்.

**தாளி அறுகின் தாராய் போற்றி:**

பக்குவப்பட்ட பிரணவமான யானையைச் செலுத்து பவனே வணக்கம்.

தாளி - பக்குவம்; அறுகு - யானை; தார் - செலுத்தும் கருவி. தாரோய் - தாரையுடையவனே.

சிவமேயாகி மூலாதார முதல் துவாதசாந்தம் வரையில் சென்று மீள்வதில் பிரணவயோகம் உள்ளது. இந்தத் தகுதியில் சாதகனுக்குப் பிரணவத்தைப் பழக்கின யானையைப்போல் செலுத்துபவனே என்று கூறப் பட்டுள்ளது.

**நீளொளி யாகிய நிருத்தா போற்றி:**

சீவர்களை அஞ்ஞான தசையிலும் ஞான தசையிலும் உள்ளிருந்து நடத்துபவன் ஒளியை முகமாக உடைய ஈசானரேயாகும். அவரேதான் கூத்தப் பெருமான். அதனால் கூத்தனே வணக்கம்.

**சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி**
**சிந்தனைக் கரிய சிவமே போற்றி:**

சந்தனச் சாந்து பிருதிவித் தத்துவமாகும். வாமதேவர் பிருதிவித் தத்துவத்தால் மூடப்பட்டுள்ளார். வாமதேவர் சிறப்பாகச் சிரசில் வெளிப்பட்டபோது ஈசான மூர்த்தி

சிருட்டியில் முதல் நிலை நாதமாகும். அதுவே லயக்கிரமத்தில் இறுதி நிலையாகும். எல்லா மந்திரங் களும் பிரணவத் தொனியில் முடியும். மந்திரயோகத் தின் வாச்சியப் பொருள் பிரணவத்தொனியேயாகும். இது ராஜயோகத்தில் தியானப் பொருளாகவும் அமையும். இவ்வகையாக நுண்ணாகாய வடிவில் நாத சொரூபமாக விளங்கும் நெறியில் சீவர்களை அழைத்துச் செல்பவனே போற்றி.

மாதவர் எல்லாம் மாதேவன் பிரான்என்பர்
நாதம தாக அறியப் படுநந்தி
பேதஞ்செய் யாதே பிரான்என்று கைதொழில்
ஆதியில் அந்நெறி யாகிநின் றானே.

— திருமந்திரம் 1542

ஆகாய பூதத்தில் சத்தம் ஒன்றே குணமாக விளங்கும். சாதகனின் தேகப்பற்றுக் குறைவதில் சிரசின் மேல் ஆகாயப் பூதம் சிறப்புற்று நாதத்தை எழுப்பும். தேகப்பற்றுக் குறையாத வரையில் நாதம் உதிக்காதது பற்றி மறையோர் கோல நெறியாயிற்று. முன்னர் நாதப் பெரும் பறையில் இது விளக்கப்பட்டுள்ளது.

வியக்தமாக அறியப்படாதபடியால் உன்னை எவ்விதம் புகழ்வது என்பதை நான் அறிய முடியவில்லை. வியக்தத்திற்கும் அவ்வியக்தத் திற்கும் தலைவா வணக்கம்.

**உறவே போற்றி உயிரே போற்றி**
**சிறவே போற்றி சிவமே போற்றி:**

உயிர்களுடன் உறவுகொண்டு அவற்றை வளர்ப் பவனே போற்றி.

உலகில் உள்ள உயிர்த்தொகுதிக்கெல்லாம் உயிருக் குயிராய் நிற்பவனே வணக்கம்.

உயிர்களுக்கு நன்மையையே செய்பவனே போற்றி.

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே

— கோயில் திருப்பதிகம்

சிறவு - நன்மை செய்பவன். மங்கலப் பொருளான வனே வணக்கம்.

**மஞ்சா போற்றி மணாளா போற்றி**
**பஞ்சே ரடியாள் பங்கா போற்றி:**

வெண்மேகம் போன்ற ஒளியில் விளங்குபவனே வணக்கம். தேகத்தில் பல சத்திகள் உள. அவை யாவும் ஆன்மாவினியக்கத்தினாலேயே இயங்குகின்றன. ஆன்மாவையே செலுத்துபவன் இறைவனான படியால், எல்லாச் சத்திகளின் தலைவா உனக்கு வணக்கம்.

செம்பஞ்சுக் குழம்பு பூசிய அழகிய பாதங் களையுடைய உமாதேவியின் பாகனே வணக்கம்.

**அலந்தே னாயே னடியேன் போற்றி**
**இலங்கு சுடரெம் மீசா போற்றி:**

நாயேனாகிய அடியேன் மிகவும் வருத்தப்பட்டு விட்டேன். என்னைக் காப்பாற்றுவாயாக வணக்கம்.

விளங்குகின்ற சுடர் வடிவானவனே எமது தலைவா வணக்கம்.

**கவைத்தலை மேவிய கண்ணே போற்றி**
**குவைப்பதி மலிந்த கோவே போற்றி:**

சிரசில் சோம சூரியாக்கினி என்ற மூன்று ஒளி யிடங்களில் விளங்குபவனே வணக்கம்.

அவை இடக்கண்ணின் மேல் ஈசானன், வலக் கண்ணின் மேல் பூவலம், பிடரிக் கண்ணின் மேல் சத்தியோ சாதம் என்பனவாகும்.

குப்பை சேரும் இடமான மூலாதாரத்தில் மிகவும் காணப்படுபவனாக உள்ள அரைசே வணக்கம்.

குவை - குப்பை - தேகத்தில் வேண்டப்படாதவற்றைத் தள்ளும் இடம் மலவாயிலாகும். அதுவே மூலாதாரச் சக்கரமாகும். அக்கினியின் இருப்பு நிலையுமாகும்.

இதுவே ஆரூர் என்ற பெயரால் கூறப்பட்ட விஷயமாகும்.

**மலைநா டுடைய மன்னே போற்றி**
**கலையா ரரிகே சரியாய் போற்றி:**

தேகத்திற்குச் சிரசு மலை போன்றதாகும். அங்கேயே அறிவுமயமாக இருந்து தேகத்தைச் செயல்படுத்தும் அரசே வணக்கம். கலை - சந்திரன். ஆர் - சூரியன். அரி - தீ. சோம சூரியாக்கினிச் சுடரில் தத்துவங்களையெல்லாம் அடக்கும் சிம்மம் போன்றவனே வணக்கம். அல்லது நிவ்ருத்தியாதிப் பஞ்சகலா சத்தியாய் ஆகாய வடிவில் விளங்குபவனே வணக்கம்.

**திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி:**

சிரசின்மேல் விளங்கும் பிரணவமலை (நிராதார கலைகள்) மலங்கள் கழுவப்பட்ட பிறகே விளங்குவது பற்றித் 'திருக்கழுக்குன்றிற் செல்வா போற்றி' என்றார்.

திருக்கழுக்குன்றத்துக்கு வடமொழிப் பெயர் வேதகிரியாகும். வேதகிரி என்பதும் பிரணவமும் ஒன்றுதான். நாத சம்மியத்தால் மலங்கழுவப்பட்ட பிறகு விளங்கும் செல்வம் சிவமேயாகும்.

**பொருப்பமர் பூவணத் தரனே போற்றி:**

பூவணம் என்பது அண்ணாக்குப் பிரதேசம் என்று முன்னமே விளக்கப்பட்டுள்ளது. அண்ணாக்குச் சிரசாகிய மலையில் உள்ளபடியால் சோதி வடிவாகிய பெருமானே வணக்கம்.

**அருவமும் உருவமும் ஆனாய் போற்றி**
**மருவிய கருணை மலையே போற்றி:**

அருவமான உயிரிலும் உருவாகிய உடலிலும் விளங்குபவனே வணக்கம். இவ்விதம் கருணை உள்ளம் கொண்டு எல்லாச் சீவகர்களிடமும் எழுந்தருளியுள்ள கருணை மலையே வணக்கம்.

**துரியமு மிறந்த சுடரே போற்றி**
**தெரிவரி தாகிய தெளிவே போற்றி:**

துரியாதீத நிலையில் விளங்கும் சுடரொளியே வணக்கம். துரியாதீதம் சென்றவர் இறைவனுடன் ஒன்றி எல்லா அறிவையும் அறியும் ஆற்றல் கொண்டவர். அல்லாதவர்க்கு அப்பேறு இல்லாதபடியால் தெரிவரிதாகிய தெளிவு என்று விளித்தார். அத்தகைய எல்லா அறிவையும் உடையவனே வணக்கம்.

**தோளா முத்தச் சுடரே போற்றி**
**ஆளா னவர்கட் கன்பா போற்றி:**

துளைக்கப்பட்ட முத்து விலைமதிப்பில் குறை வாகவும், ஒளிவிடும் தன்மையில் குறைந்தும் இருக்கும். அதுபற்றித் துளைக்கப்படாத முத்தின் ஒளிபோன்றவனே வணக்கம்.

உனது அடிமையானவர்க்கு எளிதில் அன்பினால் அடையப்படுபவனே வணக்கம்.

**ஆரா அமுதே அருளே போற்றி**
**பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி:**

தெவிட்டாத அமுதமே திருவருளே வணக்கம்.

ஆயிரம் திருநாமங்களால் வணங்கப்படும் பெருமானே வணக்கம்.

**தாளி அறுகின் தாராய் போற்றி:**

பக்குவப்பட்ட பிரணவமான யானையைச் செலுத்து பவனே வணக்கம்.

தாளி - பக்குவம்; அறுகு - யானை; தார் - செலுத்தும் கருவி. தாரோய் - தாரையுடையவனே.

சிவமேயாகி மூலாதார முதல் துவாதசாந்தம் வரையில் சென்று மீள்வதில் பிரணவயோகம் உள்ளது. இந்தத் தகுதியில் சாதகனுக்குப் பிரணவத்தைப் பழக்கின யானையைப்போல் செலுத்துபவனே என்று கூறப் பட்டுள்ளது.

**நீளொளி யாகிய நிருத்தா போற்றி:**

சீவர்களை அஞ்ஞான தசையிலும் ஞான தசையிலும் உள்ளிருந்து நடத்துபவன் ஒளியை முகமாக உடைய ஈசானரேயாகும். அவரேதான் கூத்தப் பெருமான். அதனால் கூத்தனே வணக்கம்.

**சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி**
**சிந்தனைக் கரிய சிவமே போற்றி:**

சந்தனச் சாந்து பிருதிவித் தத்துவமாகும். வாமதேவர் பிருதிவித் தத்துவத்தால் மூடப்பட்டுள்ளார். வாமதேவர் சிறப்பாகச் சிரசில் வெளிப்பட்டபோது ஈசான மூர்த்தி

யாவர். இது திரு உத்தரகோசமங்கைக் கூத்தப்பெருமான் விளக்கமாகும். நிராதாரத்தில் விளங்கும் அகண்ட வடிவான சிவம் சாமானியர் அறிவுக்கு அருமையானது பற்றிச் சிந்தனைக்கரிய சிவமே போற்றி என்றார்.

**மந்திர மாமலை மேயாய் போற்றி**
**யெந்தமை யுய்யக் கொள்வாய் போற்றி:**

மந்திரங்களுக்குப் பெருமையுள்ளதாய் விளங் குவது பிரணவமாகிய மலையாகும். அதில் விளங்குபவனே வணக்கம்.எங்களை உய்யும்படி ஆட்கொள்ளுவோனே வணக்கம்.

**புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி**
**அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி:**

புல்வாய் - மான்; புலி மானுக்குப் பகையான ஜந்து. திடமற்ற மான்போன்ற சீவர்களைப் புலிபோன்று வல்லமையுள்ளவர்களாக மாற்றி அருளினை வணக்கம்.

மானிடர் வாழ்க்கை அலைகடல் போன்றது. உன்னை அண்டினோர் அலைகடலில் அமிழ்ந்து போகாது கடலின்மீது சாந்தமாய்ச் செல்ல உதவுபவனே வணக்கம்.

கடலின்திரை யதுபோல்வரு கலக்கம் மலமறுத்தென்
உடலும்மென துயிரும்புகுந் தொழியாவண்ணம் நிறைந்தான்
சுடரும்சுடர் மதிசூடிய திருப்பெருந்துறை உறையும்
படரும்சடை மகுடத்தெங்கள் பரன்தான்செய்த படிறே.
— உயிருண்ணிப்பத்து

**கருங்குரு விக்கன் றருளினை போற்றி**
**இரும்புலன் புலர இசைந்தனை போற்றி:**

கருங்குருவி என்பது ஒரு கரிய சிறு பறவை. இங்கு ஆணவ மலத்தோடு கூடிய உயிர் அந்தக் கரணங்களையும் ஐம்புலனறிவையும் கொண்டு இப் பிரபஞ்சத்தை அறிந்து வந்த நிலையைக் குறிக்கும். அத்தகைய உயிர்க்கு ஒளிபெறும்படி அருளினை வணக்கம்.

அவ்வொளியினால் சுட்டியறிதலை விட்டு உண்மை அறிவாகப் பேரறிவு விளங்க இசைந்தவனே வணக்கம்.

**படியுறப் பயின்ற பாவக போற்றி**
**அடியொடு நடுவீ றானாய் போற்றி:**

படி - சந்தான பரம்பரை, தகுதி. பிரதி. பாவகன் - தூய்மை செய்பவன், அக்கினிதேவன்.

குருசந்தானம் நிலைபெறுமாறு சீடனுடன் பொருந்தித் தூய்மையை அளித்தவனே வணக்கம்.

சீடன் தகுதிபெறுவது இறைவனின் அருளினால் தான். சீடன் குருவின் பிரதிமை போன்று விளங்கிச் சந்தான பாரம்பரியத்தைக் காப்பாற்றுபவனாவன். அகண்ட சொரூபமான சிவமே சீவர்களின் தகுதிக்கேற்பப் பிரமனாகவும், விட்டுணுவாகவும், உருத்திரனாகவும் விளங்குபவனே வணக்கம்.

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயும்நின் னடியார்
பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோவிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே.
— திருப்பள்ளியெழுச்சி

**நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்**
**பரகதி பாண்டியற் கருளினை போற்றி:**

உலகினர் இயற்கை நரகம், சுவர்க்கம் சென்று மீண்டும் பூமிக்கு வந்து பிறத்தலாகும். அவ்விதமின்றி மேலான வீட்டு நெறியைச் சீவனுக்கு அளித்தவனே வணக்கம்.

**ஒழிவற நிறைந்த வொருவ போற்றி:**

உலகப் பொருள் யாவற்றுள்ளும் நீக்கமற நிறைந்த ஏக வஸ்துவே வணக்கம்.

**செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி:**

பொருள்: செழுமை மிக்க ஊர்த்துவ சகஸ்ரதளத் தில் வசிக்கும் சிவபெருமானே வணக்கம். செழுமை யான மலர் ஊர்த்துவ சகஸ்ர தளமாகும். அங்குதான் சீவனில் விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம், ஆத்மா எல்லாம் உள்ளது. சிவமும் அவற்றில் கலந்தே உள்ளது. இதுவே சிவபுரத்தின் நிலையாகும். அதனால் செழுமலர்ச் சிவபுரத்தரசே உன்னைப் போற்றுகின்றேன் என்று கூறப்பட்டுள்ளது.

**கழுநீர் மாலைக் கடவுள் போற்றி:**

பொருள்: நீலோற்பலப் பூவின் ஒளிபோன்ற சிதாகாய ஒளியில் விளங்கும் கடவுளே வணக்கம். வணங்குபவருடைய மயக்க இருளை மாற்றியருளுபவனே வணக்கம்.

கழுநீர் என்றால் செங்குவளை, நீலோற்பலம். தீவினையைக் கழுவுவதற்குக் காரணமான தீர்த்த நீர் என்று பொருள்.

ஊர்த்துவ சகஸ்ரதள ஒளி இந்திர நீல ஒளியுடன் கூடியது. அதுவே சகல பாவங்களையும் கழுவுவது. இந்திர நீலம் என்பது நீலமும் சிவப்பும் கலந்த வண்ணமாகும். இது சிரசுக்குமேல் காணக்கூடியது தான். அவ்வொளியில் விளங்கிச் சீவனின் மலக் குற்றத்தைப் போக்குபவனே போற்றுகின்றேன்.

வேதகால ரிஷிகள் இவ்வுண்மையை உணர்ந்து புறத்தே இந்த நிறமுடைய மலையைத் தெய்வமாக்கி

வழிபட ஆரம்பித்துவிட்டனர். அம்மலை ஊர்த்துவ முகங்கொண்டு இந்திர நீலஒளியில் உள்ளது. இதன் விவரம் தேவாரம் அடங்கன் முறையில் உள்ள பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## இந்திரநீல பருப்பதம்

நேபாளத்திலுள்ள பசுபதி நாதர் கோயிலுக்கு வடகிழக்கில் நூறு மைல் சென்றால் இந்திர நீல பருப்பதம் சேரலாம். இது கடல் மட்டத்திற்குச் சுமார் 18,000 அடி உயரத்தில் உள்ளது. பனிக் கட்டியின்மீது நடந்து செல்லவேண்டிய பகுதியும் உண்டு. அங்குள்ள ஒரு மலை நாகப் படம்போற் கவிந்து ஈசான திக்கை நோக்கியிருக்கிறது. கட்டப்பட்ட கோவிலில்லை. "மூர்த்தி சுயம்பு" ஆகிய மலையின் பகுதியே. குவிவான கீழ்ப்பகுதியே பீடம். இந்தக் கீழ்ப்பகுதி நீலமயமான கற்பாறை. இதற்கு வடமேற்கில் ஒரு பள்ளத்தாக்கில் ஓடுவது நீல கங்கா எனும் சிறு ஆறு. ஈசன் சந்நிதிக்குச் சிறிது வடகிழக்கில் பச்சை நிறமுள்ள கற்பாறையே சுயம்பு அம்பிகை. சுவாமியின் அருகில் அர்த்த சித்திர வடிவில் உள்ள ஒரு பாறையே இந்திரன். இப்பாறையில் கண்கள் போன்ற பல குழிவுகளின் பக்கத்தில் கிரீடம் வஜ்ராயுதம் போன்ற வடிவங்கள் உள்ளன. இது இந்திரன் பூசித்த தலம் என்று கூறுகின்றனர். இது தெற்கு முகப் பார்வையுடையது.

திருஞானசம்பந்தர் இந்தத் தலத்திற்குப் போகாமலேயே திருக்காளத்தியிலிருந்து பதிகம் அருளியுள்ளார்.

இத்தத்துவத்தைக் கொண்டே நடராசப் பெருமான் தெற்கு முகங்கொண்டவராய் விளங்குகின்றார். மூர்த்தியில்லாத ஆவுடையார் கோயில் ஆத்ம நாத சுவாமி தெற்கு முகங்கொண்டு விளக்கப்பட்டுள்ளது.

நாச மாம்வினைகள் நன்மை தான்வரும்
தேச மார்புக ழாய செம்மையெம்
ஈச னிந்திர நீல பர்ப்பதம்
கூசி வாழ்த்துதுங் குணம தாகவே.

— தேவாரம் 1756

**தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி:**

வணங்குவோருடைய மயக்க இருளை மாற்றி வருபவனே வணக்கம்.

**பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்**
**குழைத்தசொல் மாலை கொண்டருள் போற்றி:**

எனது தவறுகளையும் பொருத்தங்களையும் அறிந்து கொள்ளும் திறனற்ற நாயேன் உன்னை வணங்க முற்பட்டு அன்பின் மேலீட்டால் அடுக்கிச் சொல்லத் தோத்திரங்களை ஏற்றுக் கொண்டருள்பவனே வணக்கம்.

**புரம்பல எரித்த புராண போற்றி**
**பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி:**

சீவர்களின் கோசபாசப் பின்னலைச் சுட்டெரித்த பழைமையானவனே வணக்கம். மிக மேலான ஒளியில் விளங்குபவனே வணக்கம்.

விளக்கம்: பரம் பரம் என்றால் பழந்தொடர் - அதாவது ஒளியின் இனத்தில் சிவ அறிவும் சீவ அறிவும் பழைய தொடர்பு கொண்டவை. சீவன் தன்னொளிக்கு ஆதாரமான சிவத்தை அன்புகொள்ளச் சீவ ஒளி பெருக்கமடையச் செய்பவனே உன்னைப் போற்றுகிறேன்.

**போற்றி போற்றி புயங்கப் பெருமான்**
**போற்றி போற்றி புராண காரண**
**போற்றி போற்றி சயசய போற்றி:**

குண்டலினி சத்தியை ஆட்டிப் படைப்பவனே வணக்கம், வணக்கம். பழைமையானவனே வணக்கம், வணக்கம். உலகமுதற் காரணனே வணக்கம், வணக்கம். உன்னருளால் நாங்கள் வெற்றியடையச் செய்வாயாக வணக்கம், வணக்கம்.

திருச்சிற்றம்பலம்

(போற்றித் திருவகவல் முற்றும்)



